# கம்பன் சொல்லும் பொருளும்

## யுத்த காண்டம்—பகுதி 1

(கும்பகருணன் வதைப்படலம் முடிய)

காரைக்குடி கம்பன் கழக
நூலகத்திற் களித்து மிக
மகிழ்கின்றேன்.
அன்புடை,
பி.சி.சீதாபதி.
8/8/87.

பி. சி. சீதாபதி
'குறளடிமை'—சேலம்.

அபிராமி பப்ளிகேஷன்ஸ்
307. லிங்கி செட்டி தெரு,
சென்னை-600 001.

# முன்னுரை

கம்பனின் காவியக் கடலுள் மூழ்கி முத்தெடுத்து முத்தமிழ் மாந்துவார்க்கு அளித்து அகம் மகிழ ஆர்வம் அளித்தான் அருந்தமிழ்த்தாய் சேய் அறுமுகன். அவன் என் கைகளை ஒட்டிய வண்ணம் எல்லாம் அம் முத்துக் களை எழுத்து வடிவில் அமைத்தேன்.

பாலகாண்டப் பிரிவில் இருபது முத்துக்களைக் கண்டு திருப்தி அடைந்தேன். அயோத்தியாவில் சற்று அதிக ஆசை; முப்பது முத்துக்கள் முந்தின. சற்றே இடைவெளி யேற்பட்டதைச் சரிக்கட்டி, 'ஆரணியம்—கிட்கிந்தை—சுந்தர' காண்டங்கள் மூன்றில் ஒவ்வொன்றிலும் இருபது என்று வைத்து அறுபது முத்துக்களை ஒரே தொகுப்பு ஆக்கினேன்.

இம்மூன்று தொகுதிகளையும் கண்டு களித்து என்னை வாழ்த்தியும் ஊக்குவித்தும் அறிஞர்கள் என்னை யுத்த களத்தில் தள்ளிவிட்டனர்! மூச்சுத்திணறல் நோயால் முடிந்திடுமோ என் வாழ்வு என்னும் அச்சம் தோன்றியிருந் தும், அதனோடு போராடிக் கொண்டே கம்பன் சொற் கடலுள் மூச்சுத் திணறல் இன்றி முங்கினேன், யுத்த காண் டப் பகுதியில்! அதன் விளைவே இந்நூல் உங்கள் கைகளை அடைந்திருப்பது. என்றாலும் அப்பிரிவு முழு திலும் ஒரே முறையில் முத்துக்கள் எடுத்து உங்களையும் திணற அடிக்காமல், 'கும்பகருணன் வதைப்படலம்' முடியவுள்ள பகுதியை மட்டும் முடித்துள்ளேன், இரு கட்டுரைகள் தவிர்த்து.

மிகுதிப் பகுதியையும் ஆய்ந்திடவல்ல ஆயுளும், உடல் நலனும் ஆண்டவன் அருள அனைவரின் வாழ்த்துக்களை

யும் வேண்டி நிற்கிறேன். முத்துக்களின் தரங்களையும் நீங்கள் சுவைத்த வண்ணம் எழுத விழைகின்றேன்.

வரிசையாக எல்லாப் பகுதித் தொகுப்புக்களையும் நூல்களெனும் தட்டுக்களில் வைத்து தமிழ் கூறு நல்லுலகில் பரிமாறிக் கொண்டிருக்கும், சென்னை 'அபிராமி பப்ளிகேஷன்ஸ்' உரிமையாளர், கெழுதகை நண்பர் திரு.கா. பனையப்பன் அவர்களுக்கு என் அகம் கனிந்த, நன்றி கலந்த வணக்கமும் வாழ்த்துக்களும்.

இந்நூல் உருவெடுக்க உதவிகள் புரிந்த சென்னை சிந்தாதரிப்பேட்டை மேல்நிலைப் பள்ளி, ஆசிரியர் திரு. M.N.சந்திரசேகரன் அவர்களுக்கு நன்றி; கட்டுரைப் படிவங்கள் எடுத்துதவிய என் அன்பு மக்கள் செல்வன் சுரேஷ் குமாருக்கும், செல்வன் ரமேஷ்குமாருக்கும் என் வாழ்த்துக்கள்.

இந்நூலைப் படித்து நிறையும் குறையும் எடுத்துக் காட்டப்போகும் வாசகர்கள் அனைவர்க்கும் என் நன்றியும், வணக்கமும்.

என்னை என்றென்றும் மானசிகமாக ஊக்குவிக்கும் அமரர் 'கம்பனடிப் பொடி' ஐயா அவர்கட்கு என் உள்ளார்ந்த வணக்கங்கள்.

அன்புள்ள,

பி. சி. சீதாபதி-குறளடிமை

5/128-3வது தெரு.
அண்ணாநகர்,
ஜாகிர் அம்மாபாளையம் அஞ்சல்,
சேலம்-636302.

# அணிந்துரை

'ஆகா என்ன ருசி' 'தெவிட்டாத சுவை' என்று கூறத் தக்க காவியம் ஒன்றுண்டென்றால் அது சிறந்த காவியம் தான்.

காவியத்தை இயற்றியவரின் சொல்நயம், மேற்கோள்கள், வர்ணனைகள், பாத்திரப்படைப்பு, குணநலன்களை எடுத்துக்காட்டும் சிறப்பு, இவற்றால் அந்தக் காவியம் புகழ் பெறுவது ஒருபுறமிருக்க, இராமகாவியத்தில் படைக்கப்பட்ட வித்தியாசமான பாத்திரங்களின் சிறப்பே இராமாயணத்தை உலகம் போற்றும் காவியமாகத் திகழச் செய்துள்ளது.

வான்மீகி வகுத்த இராமசரித்திரத்தை ஆசையால் எழுதத் துணிந்தார் மகாகவி கம்பர். இந்திய மொழிகளிலேயே மிகச் சிறந்தது தமிழில் எழுதப்பட்டுள்ள கம்பரின் இராம சரிதம்.

கம்ப இராமாயணச் சிறப்பைப் பற்றி நூற்றுக்கணக்கான பேரறிஞர்கள் கருத்து எழுதியுள்ளார்கள். இலக்கியத் திறனாய்வு மூலம் கம்பரின் ரசத்தை எடுத்து வழங்கியுள்ளார்கள்.

ஒவ்வொரு காண்டத்திலும், சிறந்திருக்கும் கம்பன் சொல்லும் பொருளும் விளக்கி புலவர் பி. சி. சிதாபதி அரிய கட்டுரைகள் பல எழுதியுள்ளார்கள். தொகுத்து நூல்களாகவும் வந்துள்ளன.

கம்பரின் சொல் நயத்தை மேம்போக்காகப் படிக்கும் போது நாம் உணராத நயத்தை புலவர் சிதாபதி அவர்கள்

காட்டும்போது 'ஆ, இப்படி ஒரு நயமா?' என்று வியக்கிறோம்.

வீடணன் சூழ்ச்சியை, கவிச்சக்கரவர்த்தி கம்பர் எவ்வாறு முன்கூட்டியே எடுத்துக் கூறியுள்ளார் என்பதை விளக்கி எழுதப்பட்ட கட்டுரையை ('என் பிழை') கம்பர் வாயிலாக வரும் ஒவ்வொரு சொல்லும் காரண காரியம் காட்டி வருகின்றன என்று எடுத்துக் கூறும் கட்டுரையில் சூர்ப்பனகையைப் பற்றி கும்பகர்ணன் கூறும் சொற்களில் கம்பரின் நயத்தையும் மங்கலச் சொற்களைக் கொண்டே அமங்கல விளிப்பினை ஏளன எக்காளத்தை கவிச்சக்கர வர்த்தி எவ்வாறு அமைத்திருக்கிறார் என்பதை எடுத்துக் கூறும் சிறப்பும்—இவ்வாறு பலபல கூறிக்கொண்டே செல்லலாம்—புலவர் பி.சி. சீதாபதியின் எழுத்து நயத்தை திறனாய்வுச் சிறப்பை எடுத்துக் கூற.

இந்த நூலைப் படித்து முடித்த பிறகு மீண்டும் பல முறை படிக்க வேண்டும் எனும் ஆவல் ஏற்படுகிறது. அதனால் கம்பரின் பெருமையுடன் புலவரின் ஆற்றலும் நமக்குப் புலப்படுகின்றன.

அச்சும் அமைப்பும் சிறப்புறத் திகழ்கிறது இந்த நூல்.

12.3.87 **விக்கிரமன்**

# 1. அயன் மகன் மகன் மகன் !

மயன் மகளான மண்டோதரி மாவீரன் இலங்கேசுவரன் இராவணனின் மனைவியானாள். அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்று மாப்போலே அவளின் உள்ளக் கற்பின் திறன் உறங்கும் முகத்திலும் கண்டான் அனுமன்! அவன், சீதையை இலங்கையில் தேடிச் சென்றபொழுது,

''கண்டனன், நளிர், திங்கள்
மாய நந்திய வாள் முகத்து ஒரு தனி
மயன் மகள் உறை மாடம்'' (795 / 195)

''......எரி மணி விளக்கங்கள்
எழில் கெடப் பொலிகின்ற
தன்னது இன் ஒளி தழைப்புறத் தயில்வுறு
தையலை, தகைவு இல்லான்,
'அன்னள் ஆகிய சானகி இவள்' என
அயிர்த்தான்!'' (796 / 199)

பின்னர், அவள் சீதையல்ல எனத் தெளிந்தான்.

அத்தகைய அழகொழுகும் முகத்தாளை இலக்குமிகர மான பொலிவினாளை அடுத்து நாம் காண நேர்வது ஓர் அவல நிலையில்! ஆம்; அருமை மகன் அக்க குமாரன், பெரு வீரம் காட்டிப் போர் புரிந்தானே யானாலும், இறுதியில் அனுமனால் சாய்க்கப்பட்டுவிட்டான். செய்தி அறிந்தாள் தாய். வந்தாள்; அழுதாள்; புலம்பினாள். இதனைக் கவிச் சக்கரவர்த்தி,

''கயல் மகிழ் கண் இணை கலுழி கான்று உக,
புயல் மகிழ் புரி குழல் பொடி அளாவுற,
அயன் மகன் மகன் மகன் அடியின் வீழ்ந்தனள்,
மயன் மகள்; வயிறு அலைத்து அலறி மாழ்கினாள்''
(894 / 48)

எனப் படம் பிடிக்கின்றார்!

ஏனித்துணை 'மகன்' முறை? கம்பருக்கு ஒரே மகன் இருந்தான் என்றும், அவனும் அரசனால் அகால மரணத்திற்கு ஆளாகினான் என்றும் சொல்லும் செவி வழிக் கதை உண்மை தானோ? அதனால் தான் 'இராவணன்' ஒருவனைக் குறிக்க மூன்று 'மகன்' முறை காட்டி ஆசை தீர்த்துக் கொள்கின்றாரா?

இல்லை; கவிச் சக்கரவர்த்தி அரக்க சக்கரவர்த்தியின் மனையாள் மண்டோதரியின் மாண்பினை அங்கே சொல்லாமல் சொல்கின்றார்!

தன் கணவன் சீதைபால் கொண்ட காமம் தவறானது என்பதை முன்னமேயே மண்டோதரி வன்மையாகக் கண்டித்துள்ளாள்! அவள் நாடறிய, ஊரறிய, உற்றார் உறவினர் அறிய, இலங்கை வாழ் அரக்கர் அறிய உரக்கக் கத்துவாளா? நாகரிகமாய் நாயகனைச் சினந்துள்ளாள்! அதனை தன் குடும்பத்துள் ஒருவனான கும்பகருணன் மட்டும் தெரிந்திருந்தான். அதனால் தான் அவன், இராவணனுக்கு அறிவுரை கூறும் பொழுது,

'' நல்நகர் அழிந்தது' என நாணினை; நயத்தால்
உன் உயிர் எனத்தகைய தேவியர்கள் உன்மேல்
இன் நகை தரத்தர ஒருத்தன், மனை உற்றாள்,
பொன் அடி தொழத் தொழ, மறுத்தல்
புகழ் போலாம்'' (973/50)

என ஏளனம் ஒலிக்கப் பேசுகின்றான். இராவணனின் உயிர் போன்ற தேவி மண்டோதரி என்பது உண்மை! அதனால்

அன்றோ, பின்னாளில், இராவணனாகிய உடல் இராமனின் அம்பினால் தரைமேல் வீழ்ந்திட, மண்டோதரியாகிய உயிரும் அங்கேயே உலகினை விட்டுப் பிரிந்தது எனக் காண்கின்றோம்! நிற்க,

அக்க குமாரன், தன் மகன் என்பதனால் மண்டோதரி இராவணனுடைய குலப் பெருமையைக் காட்டாமல் காட்டு கின்றாள் என்பதைக் கம்பர் சுட்டாமல் சுட்டுகின்றார்! பிரமனின் மகன் புலத்தியன்; புலத்தியன் மகன் விச்சிரவசு; விச்சிரவசுவின் மகன் இராவணன். அவனே அக்க குமார னின் தந்தை என்பதால் அவன் இறந்து கிடந்த நிலையில் அவனுடைய தந்தையிடம் அவன் இறப்பைக் குறிப்பிட்டு மண்டோதரி அழுதாள் என்பது சரி. என்றாலும், அவ்வாறு அவன்பால் சென்றவள் அவன் முகம் பார்த்தா அழுதாள்? முகம் பார்த்து அழுதிருந்தால் பிள்ளைப் பாசத்தின் விளை வாய் அழுதாள் என்பதாகும். ஆனால், அவனுடைய திருவடிகளில் வீழ்ந்து அல்லவா புலம்பினாள். அதன் நோக்கம் என்ன?

'மூன்று தலைமுறைகளாக இடையறாமல் வந்த மகன்' நிலைமாறி இப்போது உன் காம இச்சையின் அடிப் படையால் நம் மகன் அக்க குமாரன் உயிர் நீங்கி விட்டான். அவனுடைய உயிர் போன பின்னாகிலும் உன் பிடிவாதப் போக்கினை விடுத்துவிட வேண்டுகிறேன்' என வேண்டினாள் என்பதைக் காட்டவே அவள் அவனுடைய திருவடிகளில் வீழ்ந்தாள் என்பதாகும். அந்த அளவிற்கு மௌன மொழி பேசி ஆடவர் பாங்கறிந்து நடந்து கொள்ளும் பெண்மையின் மாண்பு சிறந்தவள் மண்டோதரி!

இராவணனின் மற்றொரு மனைவியாகிய தானியமாலி தன் மகன் அதிகாயன் இறந்து வீழ்ந்த நிலையில் புலம்பிய புலம்பலோடு, மண்டோதரி தன் மகனை இழந்த நிலையில் அழுததை ஒப்பிட்டுப் பார்த்தாலே மண்டோதரியின் மௌன

மொழி மாண்பு தெளிவாகும்! தானியமாலி, இராவணனையே—தன் கணவனையே—சபிக்கும் அளவில்,

''பேதை ஆய்க் காமம் பிடிப்பாய் பிழைப்பாயோ?''
(1248 / 271)

என்றும், அவனை ஏளனம் செய்யும் அளவில்......

என் கோமகனை அம்புக்கு இரை ஆக்கி, ஆண்டாய் அரசு, ஐய! (1248 / 272)

என்றும் பலர் அறிய வாய்விட்டு அலறினாள் என்னும் போழ்து மண்டோதரியின் தனித்துவம் மிளிர்கின்றது அன்றோ!

மாட்சி பொருந்தியவள் மீண்டும் வரும் காட்சியும் அவலமானதே! மகன் இந்திரசித்தன் உயிரை மட்டும் இழக்கவில்லை—தன் தலையையும் இழந்து முண்டமாய்க் கிடந்தான்; அவன் மேல் விழ்ந்து அழுது புலம்பும் அன்னையைக் காண்கின்றோம்!

குழவிப் பருவ முதல் அவனைத் தான் எவ்வாறெல்லாம் வளர்த்தாள் என்பதைச் சொல்லிச் சொல்லி அழுதாளே அன்றி, தன் கணவனை நிந்தித்துப் பேசி ஏசி அழுதாளில்லை. மாறாக, அவனுடைய எதிர்கால நிலை என்னாமோ என்று அஞ்சி, ஏங்கிப் புலம்புகிறாள்!

''அஞ்சினேன் அஞ்சினேன்; அச்சிதை என்று
அமுதால் செய்த
நஞ்சினால், இலங்கை வேந்தன் நாளை
இத்தகையன் அன்றோ?''
(10434 / 53)

என்று வாய் மடுத்து அழுகின்றாள்.

இவ்வரிகளிலேயும் அவள் தன்னலம் கருதிக் கூறவில்லை. பொது நலம் கருதி-நாட்டு நலம் கருதி-அழுதாள் என்பது

இராவணனை, 'என் கணவன்', 'இவன் தந்தை' என்றெல்லாம் குறிப்பிடாமல் 'இலங்கை வேந்தன்' எனத் தன் நாட்டின் நாயகனாகவே குறிப்பிடுகின்றாள்! இப்பர நல உணர்வும் மண்டோதரியின் மாண்பினை மிகுத்துக் காட்டுகின்றது!

மண்டோதரி இறுதியாகக் காணப்படுவதும் ஓர் இரங்கற் சூழலில். இராமன் அம்பு பட்டு இராவணன் இறந்து தரை மேல் வீழ்ந்தான். அது கண்டு நன் மனையாள் நெஞ்சம் குமுறுகின்றாள்.

இந்த கட்டத்தில் மண்டோதரியை அறிமுகப் படுத்தும் கவிச் சக்கரவர்த்தி அவளை,

''நினைந்ததும் மறந்ததும் இலாத நெஞ்சினாள்''
(1537/226)

எனக் குறிப்பிடுகின்றார்! ஆம்; அவள், தன் கணவனே கண் கண்ட தெய்வம் என்று மனத்தகத்தே கொண்டொழுகும் கற்புக்கரசி எனக் கம்பர் மறைமுகமாகப் பாராட்டு கின்றார்.

'தெய்வந் தொழா அள் கொழுநன் தொழு தெழுவாள்' என்ற திருவள்ளுவப் பெருந்தகையின் இலக்கணத்திற்கு (திரு. 55) ஒப்பவளாய்க் காண்கின்றோம்.

கணவருக்கு முன்னெழுந்து அவனைத் தொழுவது கற்புடை மாதர்க்கு நித்திய முறை. ஆனால் அவர்க்கு முன்னம் ஆவி பிரிவது தமிழ் நாட்டுப் பத்தினியர் விரும்பும் நிலை! 'மஞ்சள் குங்குமத்தோடு, பூவும் பொட்டுமாய்' இறப்பதில் அவர்கள் மன அமைதியும் பெருமையும் கொள்வர். இத்தகைய நிலையை, தான் அடைய வில்லையே, தன் கணவன் உயிர், தான் உயிரோடு இருக்கும் பொழுதே நீங்கிவிட்டதே என்று வருந்தி,

''அன்னேயோ! அன்னேயோ! ஆ, கொடியேற்கு
அடுத்தவாறு! அரக்கர் வேந்தன்

பின்னேயோ, இறப்பது? முன் பிடித்திருந்த
கருத்து அதுவும் பிடித்திலேனே''
(1539 / 236)

என ஓலமிடுகின்றாள்.

'தற்காத்துத் தற்கொண்டான் பேணி தகைசான்ற
சொற்காத்துச் சோர்வு இலாள் பெண்' (திரு. 56)

என்றார் தமிழ் மறையாளர். அதற்கு ஏற்ப, தன் கணவனின் வீரப் பெருமிதங்களையெல்லாம் பாரறியப் பகர்ந்து அழுதாள்!

''வெள் எருக்கஞ் சடை முடியான் வெற்பு எடுத்த
திருமேனி'' (1539 / 237)

தன்னை நினைவுகூர்ந்தாள்.

''தேவர்க்கும், திசைக் கரிக்கும், சிவனார்க்கும்,
அயனார்க்கும், செங்கண் மாற்கும்,
ஏவர்க்கும் வலியான்'' (1540 / 240)

என்று உறுதிப்பட உரைத்தாள்!

இராவணன் தோள் வலி மட்டும் அல்ல, வர பலமும் கொண்ட சிரிய பக்தன் என்பதையும்,

''அரை கடை இட்டு அமைவுற்ற முக்கோடி
ஆயுவும், முன் அறிஞர்க் கேயும்
உரை கடையிட்டு அளப்பு அரிய பேர் ஆற்றல்,
தோள் ஆற்றற்கு உலப்போ இல்லை;
திரை கடையிட்டு அளப்பு அரிய வரம் என்னும்
பாற்கடலைச் சிதை என்னும்
பிரை கடையிட்டு அழிப்பதனை அறிந்தேனோ,
தவப் பயனின் பெருமை பார்ப்பேன்?''
(1540 / 241)

என நினைவுறுத்துகின்றாள்!

அனைத்திற்கும் மேலாக, தன் கணவன் செய்த வினைக்கு அவன் காரணமல்லன் என்பதைப் போல, உலகிற்குச் சமாதானம் எடுத்துரைக்கின்றாள்! அவன் சீதை பால் கொண்டது 'காமம்' அல்ல; பேரன்புக் 'காதல்'; அவள் மாற்றான் மனைவி—கற்புடையவள்—என்பதையும் மறந்து அவன் அவளை விரும்பத் தூண்டியது, சீதையின் பேரழகு! அது அவளைப் பெண்டிருக்கெல்லாம் அணி போன்ற நிலையில் மிளிரச் செய்து அவனை ஈர்த்தது என்றெல்லாம் குறிப்பிடுபவள் இத்துணையும் இந்திரனின் பெருந்தவத்தால் வந்துற்றதே எனக் காரணம் காட்டு கின்றாள்! அதாவது தன் கணவன் குறையற்றவன்; சுற்றுச் சூழ்நிலை அவனைக் குற்றவாளியாக்கி விட்டது என்பதேயாகும். அந்த அளவிற்குத் தன் கணவனுடைய தகை சான்ற (புகழ்ச்) சொற்களைக் காத்து நிற்பதில் சோர்விலாத மாண்புடைய பெண் ஆனாள்!

சூழலின் சதியால், இராமனின் சதியைத் தன் கணவன் முதலில் காதலித்தாலும், அந்த நினைவை அவன் தானே அகற்றிக் கொண்டு விட்டான் என்பதை,

''கள் இருக்கும் மலர்க் கூந்தல் சானகியை
மனச் சிறையில் கரந்த காதல்
உள் இருக்கும் எனக் கருதி, உடல் புகுந்து,
தடவியதோ ஒருவன் வாளி?'' (1539 / 237)

என்னும் பாடலால் தெளிவாக்கித் தன் கணவன், தன்பால் நுழைந்து விட்ட குற்ற எண்ணத்தைப் போக்கிய பின்னும் கொல்லப்பட்டு விட்டானே எனக் குமுறுகின்றாள்!

இவ்வாறு தன் கணவனுடைய பெருமிதங்களை நினைவு கூர்ந்து வாய் விட்டு அலறி அழுதவள் அந்த இடத்திலேயே, அப்பொழுதே, அதிலும் அவனுடைய உடல்மேல் சாய்ந்த வண்ணமே உயிர் நீத்தாள் என்றால் என்னே மண்டோதரி யின் கற்பின் திண்மை! தமிழகத்துக் கோப்பெருந்தேவியும்

இலங்கைக் கோவின் பெருந் தேவியும் ஒரு நிலையராய் நம் நெஞ்சில் பெருமையுடன் நிலவுகின்றனரே!

ஆக, மண்டோதரி மனைத் தக்க மாண்புடையவளாய், மனைமாட்சி தன்னால் நிலைக்கச் செய்தவளாய், கற்பென்னும் திண்மை உண்டாக்கப் பெற்றவளாய் கொழுநன் தொழுது எழுபவளாய், தகை சான்ற சொற் காத்துச் சோர்விலாதவளாய், கணவன் நினைவாலேயே நிறை காக்கும் நீர்மையளாய், புத்தேளிர் வாழும் உலகிலும் பெருஞ் சிறப்புப் பெற்றவளாய், மனை மாட்சியின் நன் கலமென நன் மக்கட்பேறு பெற்றவளாய் மாண்போங்கி வாழ்ந்தாள்! அதனால், 'இல்லவள் மாண்பானால் இல்லது என்?' என்ற பாங்கில், புகழ் புரிந்த இல்லுடைய இராவணன், இகழ்வார் முன்னும் ஏறு போல் பீடு நடை போட்டு வாழ்ந்தான்!

எனவே, மாண்பின் மிகு மண்டோதரி, காவியத் தலைவி சீதைக்கு மேலாக என்று சொல்வது மரபு வழிக் குற்றம் என்பதனால், சீதைக்கு இணையான பெருமை பெற்றவள் என்பது மிகையாகாது, அன்றோ!

## 2. நினைவுறு காரியம் நிகழ்த்தும் நெஞ்சினான்

இராவணன் மந்திராலோசனை மண்டபத்தில் வீற்றிருந்தான். ஆலோசனைகள் ஆரம்பிக்கும் முன் அங்கிருந்து முனிவர் முதலாயினாரை விலக்கினான். இதனைக் கூற வந்த கவிச்சக்கரவர்த்தி,

''முனைவரும், தேவரும், மற்றும் உற்றுளோர்
எனைவரும் தவிர்க!' என ஏய ஆணையான்,
புனைகுழல் மகளிரொடு இளைஞர்ப் போக்கினான்—
நினைவுறு காரியம் நிகழ்த்தும் நெஞ்சினான்''

(967 / 7)

என்று, அவனைக் குறிப்பிடுகின்றார்.

நெஞ்சம் இன்றி ஒரு காரியத்தை நினைக்க முடியுமா? எனவே, 'நினைவுறு' காரியம் நிகழ்த்திட வல்லோன்' என்றது போலப் பாடியிருந்தால் சாலுமே! 'நெஞ்சினான்' என்ற சொல்லைப் பெய்திட்டது ஏன்?

அனுமன் எரித்த இலங்கைப் பகுதியை மயன் புதுப்பித்தான்; அதற்குப் பின்னர் கூடப் போகும் முதல் மந்திராலோசனைக் கூட்டம் அது. அதனில் எடுக்கப் போகும் முடிவுகளின் படி செயல்களில் ஈடுபட்டே ஆக வேண்டும் என்ற சிந்தனையோடு இராவணன் அக்கூட்டத்தைக் கூட்டியுள்ளான். எனவே, அங்கு சிந்திக்கப்படும் செயல்களைத் தெரிந்து

கொண்டவர் சிலரால் தன் திட்டங்கள் நிறைவேறாமற் போக இடையூறுகள் ஏற்பட்டாலும் ஏற்படலாம் என நினைத்தான். அதற்குத் துணையாக இருக்கக் கூடியவர்கள் அவனுடைய கருத்துக்கு ஒவ்வாதவர்களாகத் தானே இருக்க முடியும்!

முனிவர்கள் இராவணனுடைய கருத்துக்களுக்கு முழுதும் இணங்காதவர்கள். ஏற்கனவே அவனுடைய இடையூறு களுக்கு ஆளானவர்கள். அதனால் தானே, முனிவர்கள், இராமனிடம்,

''இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினர்,
அரக்கர் என்று உளர் சிலர், அறத்தின் நீங்கினார்,
நெருக்கவும், யாம்படர் நெறி அலா நெறி
துரக்கவும், அருந்தவத் துறையுள் நீங்கினேம்''
(427 / 12)

''வல்லியம் பலதிரி வனத்து மான் என,
எல்லியும் பகலும், நொந்து இரங்கி ஆற்றலெம்;
சொல்லிய அறநெறித் துறையும் நீங்கினெம்;
வில்இயல் மொய்ம்பினாய்! வீடு காண்டுமோ?''
(427 / 13)

என்றெல்லாம் முறையிட்டிருந்தனர்.

எனவே, அந்த ஆலோசனை மண்டபத்திலிருந்து அவர் களை அகற்றுவித்தான்.

அம்முனிவர்களுக்கு அவன் இடையூறுகள் விளைவித்த தற்கு அடிப்படைக் காரணம், அவர்கள் தேவர்களுடன் சார்பு கொண்டிருந்தமையே! அவன் முனிவர்களின் அற நெறியை வெறுத்தவன் அல்லன்; அவர்களுடைய தவ முறையை வெறுத்தவன் அல்லன்; சொல்லப் போனால், அவர்களுக்கெல்லாம் வழிகாட்டி போல, தானே தவங்கள் இயற்றியவன்; தவ வல்லமை கொண்டவன்.

தேவர்களுடன் போர் புரிந்தான்; இந்திரனை அடக்கி ஆண்டான்; அவனை மட்டுமா!

''அரமடந்தையர் சிலதியர், அரக்கியர்க்கு; அமரர்
உரம் மடங்கி வந்து உழையராய் உழல்குவர்;''
(768 / 9)

''தேவர் என்பவர் யாரும், இத்திரு நகர்க்கு
இறைவற்கு
ஏவல் செய்பவர்; செய்கிலாதவர் எவர் என்னின்,
மூவர்தம் முளும் ஒருவன் அங்கு உழையனா முயலும்!
தா இல் மா தவம் அல்லது, பிறிது ஒன்று தகுமோ?
(768 / 10)

என்றெல்லாம் கம்பர் படம் பிடித்து அரக்கர்பால் அமரர் படும் நிலையைக் காட்டுவார்!

அதனால் தானே, ஆதியில் அமரர் நாரணனிடம் முறையிடும் பொழுது,

''ஐ இரு தலையினோன் அனுசர் ஆதியாம்
மெய் வலி அரக்கரால், விண்ணும் மண்ணுமே
செய் தவம் இழந்தன— திருவின் நாயக!—
உய் திறம் இல்லை என்று உயிர்ப்பு வீங்கினார்.''
(34 / 17)

''எங்கள் நீள் வரங்களால், அரக்கர் என்று உளார்,
பொங்கு மூ உலகையும் படைத்து அழித்தனர்;
செங்கண் நாயக! இனி தீர்த்தல்; இல்லையேல்
நுங்குவர் உலகை, ஓர் நொடியில்'' (34 / 18)

என்றெல்லாம் எடுத்தியம்பினர்.

ஆகவே, அத் தேவர்கள் மந்திராலோசனை மண்டபத்தில் இருந்தால், அவர்கள் உளவறிந்து இடர்ப்பாடு விளைவிக்கக் கூடும் என அவர்களையும் அகற்றினான்.

அது மட்டும் அல்லாமல் பேச்சுக்களின் இரகசியத்தைப் புரிந்து கொள்ளாமல் அனைத்தையும் அம்பலமாக்குவதில் பெண்டிரே வல்லவர்கள். அதனால் அவர்களையும் அகற்றினான். அத்தோடு அழகு மங்கையர் பின்னே ஆர்ப்பாட்டம் செய்து பெண்டிரை வசியப் படுத்துவதற்கு என்றே திரியக் கூடிய இளைஞர்களையும் போக்கினான்.

பற்றாக் குறைக்கு எல்லாத் திசைகளிலும் வீரர்களை நிறுத்தி அவ்வழியில் எவரும் வாராமல் தடுத்திடக் காவல் புரியச் செய்தான்.

இத்துணையும் எதற்கு? தனக்கும் தன் நாட்டிற்கும் ஏற்பட்டுள்ள இழிவையும், இழப்பையும் பற்றிப் பேசிப் பிறர் கருத்துக்களையும் திரட்டி முடிவு எடுக்க வேண்டும் என்ற எண்ணத்தாலேயே.

அங்கு எடுத்த முடிவுகள் என்னென்ன? குரங்குப் படையுடன் வந்துள்ள இராம இலக்குவருடன் போர் புரிய வேண்டும் என்பதாகும். இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம், சிதையை அவன் கவர்ந்து வந்தது. ஆனால், அச்சிதையை திருப்பி அனுப்பிட அவன் ஒப்பவில்லை. அவளை அடைய, அவளிடம் அடிக்கடி கொஞ்சிப் பேசினான்; கெஞ்சிக் கேட்டான்; தன் வலிமை விஞ்சித் தோன்ற மிஞ்சிப் பேசிப் பார்த்தான். ஆனால், அவளோ தன் கற்பு நிலையில் கலங்காது, தடுமாறாது நின்றாள்.

அவள் கற்பை எப்படியும் சூரையாடி விடுவது என்று மூர்க்கமாய் அவன் எண்ணவில்லை; அந்த நினைவு அவன் நெஞ்சிலில் தோன்றவில்லை!

அதற்குக் காரணம், 'வேதவதி யிட்ட சாபம்— ஒரு பெண்ணை அவளுடைய இச்சைக்கு மாறாக இராவணன் தீண்டுவானேயானால் அவன் தலை வெடிக்கும் என்ற சாபம்— இருந்தது' என்பர்; அதற்கு ஆதாரமும் காவியத்தில் உள்ளது.

''தீயிடைக் குளித்த அத் தெய்வக் கற்பினாள்
வாயிடை மொழிந்த சொல் மறுக்க வல்லமோ?
'நோய் உனக்கு யான்' என நுவன்றுளாள். அவள்;
ஆயவள் சீதை, பண்டு அமுதின் தோன்றினாள்''

(977 / 81)

என்று விடணன் இராவணனிடமே நினைவூட்டியுள்ளான்.

அது உண்மையானாலும், இராவணன் கடைசி நிமிடத்திலும் கூட அவளுடைய கற்பு நிலையைக் கெடுக்க நெஞ்சம் கொண்டானில்லை; அந்த நெஞ்சினனாய் நின்றிருந்தால், தான் அந்த நினைவுறு காரியம் நிகழ்த்தியே இருப்பான்! யுத்தத்தில் தான் இறக்கும் நிலை தோன்றிய பின்னாகிலும், அங்கு இறப்பதை நீக்கி, சீதையை தொட்டிழுத்திருப்பான்; தன் தலை வெடித்தாலும் அவளுடைய கற்பு நிலை நொடித்துப் போகட்டும் என்று துணிந்திருப்பான்.

அப்படி அவன் நெஞ்சம் நினைவுறு காரியம் நிகழ்த்தி அசம்பாவித மரணம் உற்றிருப்பானேயானால், அவன் சுத்த வீரனே யல்ல. இறந்தபின் அவன் முகங்களும் மும்மடங்கு பொலிவுடன் இருந்திரா.

எனவே, கம்பர், 'நெஞ்சினான்' எனக் குறிப்பிட்டது அவன் எங்கெங்கு நெஞ்சத்தால் என்னென்ன ஆழமாகவும் உறுதியாகவும் நினைந்தானோ அவற்றின் செய்கையில் இறங்கி வென்றி கண்டானே யன்றி அற்பமாய் எதையும் நினைக்கவும் இல்லை, செயல்பாட்டில் இறங்கவும் இல்லை என்பதைக் காட்டி நிற்கின்றதன்றோ!

இந்திரசித்துவின் இறப்பிற்குப் பின் இராவணனுக்குச் சீதையின்பால் வெறுப்புத் தோன்றி விட்டது. என்றாலும், அவனுடைய பிடிவாத குணம் அவளை விடுவிக்க மறுத்து விட்டது. அப்பொழுதும் சீதையை அழித்து விட அவன் நெஞ்சம் நினைக்கவில்லை; அவ்வாறு நெஞ்சம் நினைவுறு காரியம் நிகழ்த்த அவன் முற்படவும் இல்லை! அதனால் பெருவீரன் என்ற பாங்கில், தான் போரில் மரணத்தைத் தழுவிக் கொண்டானே அன்றிச் சீதையைத் தழுவும் காமுகனாய் நிற்கவில்லை எனக் காண்கின்றோம்!

## 3. ''உன் பகை''

அனுமனால் தீக்கிரையான இலங்கையை தேவதச்சனாகிய மயன் புதுப்பித்தான். இராவணன் ஆலோசனை மண்டபம் எய்தினான்; முனிவர், தேவர், மகளிர், இளைஞர் ஆகியோரை அங்கிருந்து அகலச் செய்தான்; திசைகள் நான்கினும் காவலரை நிறுத்திப் பின் தன் ஆலோசனையை எடுத்துரைக்கலானான்.

தொடக்கத்தில் தன்னைத்தானே நொந்து கொண்டவனாய்,

''தாழ்ச்சி இங்கு இதனின் மேல் தருவது என், இனி?
மாட்சி, ஓர் குரங்கினால் அழிந்த, மாநகர்,
ஆட்சியும் அமைவும், என் அரசும் நன்று! எனா
சூழ்ச்சியின் கிழவரை நோக்கிச் சொல்லுவான்;
(967 / 11)

''சுட்டது குரங்கு; எரி சூறையாடிடக்
கெட்டது, கொடி நகர்; கிளையும் நண்பரும்
பட்டனர்; பரிபவம் பரந்தது, எங்கணும்;
இட்டது இவ்அரியணை இருந்தது, என் உடல்''
(968 / 12)

என்றான். ஆனால், அடுத்துத் தொடர்ந்து பேசிடும் பொழுது தனக்கு வந்த பகைஞரைத் தன் நாட்டின் பகையாகவே குறிப்பிட்டு,

''ஊறுகின்றன கிணறு உதிரம்; ஒண் நகர்
ஆறுகின்றில தழல்; அகிலும் நாவியும்

கூறு மங்கையர் நறுங் கூந்தலின் சுறு
நாறுகின்றது; நுகர்ந்திருந்தனம், நாம் எலாம்'' (968/13)

''மற்று இலது ஆயினும், 'மலைந்த வானரம்
இற்று, இலதாகியது' என்னும் வார்த்தையும்
பெற்றிலம்; பிறந்திலம் என்னும் பேர் அலால்,
முற்றுவது என்? இனி, பழியின் மூழ்கினாம்!''

(968 / 14)

என்று தாங்கள் அடைந்த அவமானத்தை எடுத்துக் காட்டி நொந்து இகழ்ச்சி ஒலிக்கப் பேசினான்.

இதனைப் பற்றி அவையில் இருந்தவர்கள் தங்கள் தங்கள் கருத்துக்களை எடுத்துரைக்கலாயினர்.

படைத் தலைவன் பேசத் தொடங்கியதும், தான், இராவணனுக்கு முதலிலேயே எடுத்துரைத்த அறிவுரையை நினைவுபடுத்தினான்! 'மானுடரை வஞ்சித்து சிதையைக் கவர்ந்து வருதல் சிரிதன்று என நான் உணர்த்தினேன். அதன் உண்மையை உணரவல்லவன் நீ; ஆனால், அதனை ஏற்க மறுத்து விட்டாய்; உன் தங்கையின் மூக்கை அரிந்து விட்டு, கரன் முதலாய நம்முடைய வீரர்களை அழித்த அந்த மானுடவரைக் கொல்ல இயலாத நிலையில் இன்று நீ 'அரசியல் அழிந்தது' என அயர்ச்சி உறுகின்றாய்!'' என்றெல்லாம் பேசினான்.

இறுதியில், குரங்கினால் வந்த பழி இராவணனுக்கு மட்டும் என்று நினையாது,

''உலங்கும் நம்மேல் வரின் ஒழிக்கற்பாலதோ?''

(969 / 20)

''போயின குரங்கினைத் தொடர்ந்து போய், இவண்
ஏயினர் உயிர் குடித்து, எவ்வம் தீர்கிலம;
வாயினும் மனத்தினும் வெறுத்து வாழ்து மேல்'
ஒயும் நம் வலி என,'' (969 / 21)

அனைவர்க்குமே அந்த இழிவு என உணர்ந்து கூறினான்.

வச்சிரதத்தன் பேசும் பொழுது தன் வீரம் பற்றிப் பேசி நின்றான்! 'நேர்ந்த பகை இராவணன் தனக்கேயா, இலங்கையர் முழுமைக்குமா?' என்று அவன் குறிப்பிட்டுப் பேசவில்லை.

துன்முகன், தங்கள் வீரம் பற்றிப் பேசியதோடு, 'வந்த பகைமை இலங்கைக்கே!' எனும் பாங்கில்,

"பொலிவது, பொதுவுற எண்ணும் புன்தொழில்
மெலியவர் கடன்; நமக்கு இறுதி வேண்டுவோர்
வலியினர் எனில்; அவர்க்கு ஒதுங்கி வாழ்துமோ —
ஒலிகழல் ஒருவ!—நம் உயிருக்கு அன்பினால்?"

(970 / 33)

எனக் கூறித் தொடர்ந்தான், தன் பேச்சை.

மாபெரும்பக்கன் என்னும் வீரன், குரங்கினால் உண்டான சிறுமை அனைவர்க்குமாம் எனும் நோக்கில்,

"யாவது உண்டு, இனி நமக்கு?" (971 / 38)

எனப் புகன்றான்.

பிசாசன் என்பவன் மன்னனுக்காக வீரம் காட்டிப் பகைவரை வீழ்த்தத் துடித்தான். 'சூரியப் பகைவன்' என்பவனோ 'நமது மாபெரும் மன்னன் ஒரு குரங்கின் செயலுக்காக அஞ்சி வருந்துவானேயானால், அந்தக் குரங்கையும் அதை அனுப்பிய மானுடரையும் எண்ணி இப்போழ்து மந்திராலோசனை நிகழ்கின்றது என்றால் மானிடவர்சிறந்தவர்கள் ஆக, நாம் சிறுமை உடையவர்கள் என ஆகிவிடுவோம் என்று கூறினான்.

'வேள்வியின் பகைஞன் எனப் பெயர் கொண்ட போர் வீரனும் அவ்வாறே தன் உணர்ச்சியைக் காட்டிப் பேசினான்

'புகை நிறக் கண்ணன்' என்பவனோ, தாங்கள் அம்மானிடரிடம் வலிய போருக்குச் செல்வதினும் அவர்கள்

தம்பால் போர்க்கு வர, அவர்களை அழித்தல் ஏற்புடையது என்றான்.

இவ்வாறு அவர்கள் அனைவருமே, ஏற்பட்ட பகைமை தங்களுக்கும் ஆனதாய் உணர்ந்து சிறினர் என்பதைக் கவிச் சக்கரவர்த்தி,

''மற்று அவன் பின்னுற, மற்றையோர்களும்—
'இன்றிதுவே நலம்; எண்ணம் மற்று இல்' என்று,
உற்றன உற்றன உரைப்பது ஆயினார்—
புற்று உறை அரவு எனப் புழுங்கு நெஞ்சினார்''
(912 / 46)

எனக் கவிக் கூற்றினால் காட்டுவார்!

அப்படியிருக்க 'கல் தடந்தோளினான்' (969 / 22)

ஆன மகோதரனை மட்டும், கம்பர்,

''இடுக்கு இவண் இயம்புவது இல்லை; ஈண்டு எனை
விடுக்குவையாம் எனின், குரங்கை வேர் அறுத்து,
ஒடுக்க அரு மனிதரை உயிர் உண்டு உன் பகை
முடிக்குவென் யான்'' (970 / 27)

என்று கூற வைத்தார். இராவணனுக்குப் பகை தனக்கும் பகை ஆகும் என்பதைப் படைவீரன் என்னும் பாங்கில் அவன் உணரவில்லையா? அனுமன் தீ மூட்டி இலங்கைப் பகுதியை எரித்ததால் அவனும் அவனைச் சார்ந்தவர்களும் தம் நாட்டிற்கே பகை என்பதை உணரும் நாட்டுப் பற்று தான் அவனுக்கு இல்லையா? ஒன்றும் அறியாச் சிறு வயதினனா?அப்படியானால், அவனைக் கவிச் சக்கரவர்த்தி, 'மகோதரனார்' (1210 / 92) என்று 'ஆர்' விகுதியிட்டு மரியாதைச் சொல்லால் குறிப்பானேன்?

வச்சிரதத்தன் பேசும் பொழுது தன் வீரம் பற்றிப் பேசி நின்றான்! 'நேர்ந்த பகை இராவணன் தனக்கேயா, இலங்கையர் முழுமைக்குமா?' என்று அவன் குறிப்பிட்டுப் பேசவில்லை.

துன்முகன், தங்கள் வீரம் பற்றிப் பேசியதோடு, 'வந்த பகைமை இலங்கைக்கே!' எனும் பாங்கில்,

''பொலிவது, பொதுவுற எண்ணும் புன்தொழில்
மெலியவர் கடன்; நமக்கு இறுதி வேண்டுவோர்
வலியினர் எனில்; அவர்க்கு ஒதுங்கி வாழ்துமோ —
ஒலிகழல் ஒருவ!—நம் உயிருக்கு அன்பினால்?''
(970 / 33)

எனக் கூறித் தொடர்ந்தான், தன் பேச்சை.

மாபெரும்பக்கன் என்னும் வீரன், குரங்கினால் உண்டான சிறுமை அனைவர்க்குமாம் எனும் நோக்கில்,

''யாவது உண்டு, இனி நமக்கு?'' (971 / 38)

எனப் புகன்றான்.

பிசாசன் என்பவன் மன்னனுக்காக வீரம் காட்டிப் பகைவரை வீழ்த்தத் துடித்தான். 'சூரியப் பகைவன்' என்பவனோ 'நமது மாபெரும் மன்னன் ஒரு குரங்கின் செயலுக்காக அஞ்சி வருந்துவானேயானால், அந்தக் குரங்கையும் அதை அனுப்பிய மானுடரையும் எண்ணி இப்போழ்து மந்திராலோசனை நிகழ்கின்றது என்றால் மானிடவர்சிறந்தவர்கள் ஆக, நாம் சிறுமை உடையவர்கள் என ஆகி விடுவோம் என்று கூறினான்.

'வேள்வியின் பகைஞன் எனப் பெயர் கொண்ட போர் வீரனும் அவ்வாறே தன் உணர்ச்சியைக் காட்டிப் பேசினான்

'புகை நிறக் கண்ணன்' என்பவனோ, தாங்கள் அம்மானிடரிடம் வலிய போருக்குச் செல்வதினும் அவர்கள்

தம்பால் போர்க்கு வர, அவர்களை அழித்தல் ஏற்புடையது என்றான்.

இவ்வாறு அவர்கள் அனைவருமே, ஏற்பட்ட பகைமை தங்களுக்கும் ஆனதாய் உணர்ந்து சீறினர் என்பதைக் கவிச் சக்கரவர்த்தி,

''மற்று அவன் பின்னுற, மற்றையோர்களும்—
'இன்றிதுவே நலம்; எண்ணம் மற்று இல்' என்று,
உற்றன உற்றன உரைப்பது ஆயினார்—
புற்று உறை அரவு எனப் புழுங்கு நெஞ்சினார்''
(912 / 46)

எனக் கவிக் கூற்றினால் காட்டுவார்!

அப்படியிருக்க 'கல் தடந்தோளினான்' (969 / 22)

ஆன மகோதரனை மட்டும், கம்பர்,

''இடுக்கு இவண் இயம்புவது இல்லை; ஈண்டு எனை
விடுக்குவையாம் எனின், குரங்கை வேர் அறுத்து,
ஒடுக்க அரு மனிதரை உயிர் உண்டு உன் பகை
முடிக்குவென் யான்'' (970 / 27)

என்று கூற வைத்தார். இராவணனுக்குப் பகை தனக்கும் பகை ஆகும் என்பதைப் படைவீரன் என்னும் பாங்கில் அவன் உணரவில்லையா? அனுமன் தீ மூட்டி இலங்கைப் பகுதியை எரித்ததால் அவனும் அவனைச் சார்ந்தவர்களும் தம் நாட்டிற்கே பகை என்பதை உணரும் நாட்டுப் பற்று தான் அவனுக்கு இல்லையா? ஒன்றும் அறியாச் சிறு வயதினனா?அப்படியானால், அவனைக் கவிச் சக்கரவர்த்தி, 'மகோதரனார்' (1210 / 92) என்று 'ஆர்' விகுதியிட்டு மரியாதைச் சொல்லால் குறிப்பானேன்?

வச்சிரதத்தன் பேசும் பொழுது தன் விரம் பற்றிப் பேசி நின்றான்! 'நேர்ந்த பகை இராவணன் தனக்கேயா, இலங்கையர் முழுமைக்குமா?' என்று அவன் குறிப்பிட்டுப் பேசவில்லை.

துன்முகன், தங்கள் விரம் பற்றிப் பேசியதோடு, 'வந்த பகைமை இலங்கைக்கே!' எனும் பாங்கில்,

''பொலிவது, பொதுவுற என்னும் புன்தொழில்
மெலியவர் கடன்; நமக்கு இறுதி வேண்டுவோர்
வலியினர் எனில்; அவர்க்கு ஒதுங்கி வாழ்துமோ —
ஒலிகழல் ஒருவ!—நம் உயிருக்கு அன்பினால்?''

(970 / 33)

எனக் கூறித் தொடர்ந்தான், தன் பேச்சை.

மாபெரும்பக்கன் என்னும் வீரன், குரங்கினால் உண்டான சிறுமை அனைவர்க்குமாம் எனும் நோக்கில்,

''யாவது உண்டு, இனி நமக்கு?'' (971 / 38)

எனப் புகன்றான்.

பிசாசன் என்பவன் மன்னனுக்காக விரம் காட்டிப் பகைவரை விழ்த்தத் துடித்தான். 'சூரியப் பகைவன்' என்பவனோ 'நமது மாபெரும் மன்னன் ஒரு குரங்கின் செயலுக்காக அஞ்சி வருந்துவானேயானால், அந்தக் குரங்கையும் அதை அனுப்பிய மானுடரையும் எண்ணி இப்போழ்து மந்திராலோசனை நிகழ்கின்றது என்றால் மானிடவர்சிறந்தவர்கள் ஆக, நாம் சிறுமை உடையவர்கள் என ஆகி விடுவோம் என்று கூறினான்.

'வேள்வியின் பகைஞன் எனப் பெயர் கொண்ட போர் வீரனும் அவ்வாறே தன் உணர்ச்சியைக் காட்டிப் பேசினான்

'புகை நிறக் கண்ணன்' என்பவனோ, தாங்கள் அம்மானிடரிடம் வலிய போருக்குச் செல்வதினும் அவர்கள்

தம்பால் போர்க்கு வர, அவர்களை அழித்தல் ஏற்புடையது என்றான்.

இவ்வாறு அவர்கள் அனைவருமே, ஏற்பட்ட பகைமை தங்களுக்கும் ஆனதாய் உணர்ந்து சீறினர் என்பதைக் கவிச் சக்கரவர்த்தி,

''மற்று அவன் பின்னுற, மற்றையோர்களும்—
'இன்றிதுவே நலம்; எண்ணம் மற்று இல்' என்று,
உற்றன உற்றன உரைப்பது ஆயினார்—
புற்று உறை அரவு எனப் புழுங்கு நெஞ்சினார்''
(912 / 46)

எனக் கவிக் கூற்றினால் காட்டுவார்!

அப்படியிருக்க 'கல் தடந்தோளினான்' (969 / 22)

ஆன மகோதரனை மட்டும், கம்பர்,

''இடுக்கு இவண் இயம்புவது இல்லை; ஈண்டு எனை
விடுக்குவையாம் எனின், குரங்கை வேர் அறுத்து,
ஒடுக்க அரு மனிதரை உயிர் உண்டு உன் பகை
முடிக்குவென் யான்'' (970 / 27)

என்று கூற வைத்தார். இராவணனுக்குப் பகை தனக்கும் பகை ஆகும் என்பதைப் படைவீரன் என்னும் பாங்கில் அவன் உணரவில்லையா? அனுமன் தீ மூட்டி இலங்கைப் பகுதியை எரித்ததால் அவனும் அவனைச் சார்ந்தவர்களும் தம் நாட்டிற்கே பகை என்பதை உணரும் நாட்டுப் பற்று தான் அவனுக்கு இல்லையா? ஒன்றும் அறியாச் சிறு வயதினனா? அப்படியானால், அவனைக் கவிச் சக்கரவர்த்தி, 'மகோதரனார்' (1210 / 92) என்று 'ஆர்' விகுதியிட்டு மரியாதைச் சொல்லால் குறிப்பானேன்?

மகோதரன் தன் பேச்சைத் தொடங்கும் பொழுதே,

''.........எரியும் கண்ணினால்

முற்றுற நோக்கினான்.........'' (969 | 22)

அவனுக்கு ஏன் அந்த சினப்பார்வை? இராவணன் எடுத்துரைத்த ஏளனமும் சினமும் கலந்த பேச்சால் அவனுக்குச் சினம் மீறியதா?

ஓரளவிற்கு இராவணன் பேச்சு மகோதரனை ஆத்திரத்தில் ஆழ்த்தியது என்றாலும் அவன் ஏற்கனவே ஆத்திரத்தில் மூழ்கியிருந்தான் என்பதுவும் உணர முடிகின்றது!

அவன், இராவணனை, 'கொற்றவ கேள்!' (969/22) என விளித்து, ''உன்பால் தேவரும் அடங்கினர்; இயக்கர் தோற்றனர்; அசுரர் செருக்கு ஒழிந்தனர்; அனைவருமே 'இறைவா' என்று கூறி உன்னை வணங்குகின்றனர்! உன்னை, தன்னைக் கொல்ல வந்த எமனாகவே அந்த எமனும் அஞ்சி நீ இட்ட பணிகளைச் செய்து கிடக்கின்றான்'' என்றெல்லாம் அடுக்கிச் சொன்னான். இவை அனைத்தும் இராவணன் என்னும் தனியொரு அரக்கனைத் தேவர் முதலானோர் சினத்திற்கு ஆளாக்கியதனால் ஏற்பட்ட போர்களின் பலன் அல்ல; அனைத்து அரக்கரின் உணர்ச்சியைச் சீண்டி விட்டதின் விளைவே.

ஆனால், ''இப்பொழுது நேர்ந்துள்ள அவமானமும் திமையும் உன் ஒருவனின் இச்சை உணர்ச்சியின் அடிப்படையில் நிகழ்ந்ததேயாகும்!' என்பதை அவன் சொல்லாமல் சொல்லி அவன் பார்வையால் காட்டி நின்றதுவும் அவனுடைய செங்கண் சினத்திற்குக் காரணம். இதனைத்தான் 'உன் பகை' என்ற சொற்றொடரால் இராவணனைத் தனித்துக் காரணனாக்கும் பாங்கினைக் கையாண்டுள்ளார் கவிச்சக்கரவர்த்தி.

'அப்படியானால் மகோதரன் போருக்கு உடன்படவில்லையா?' என்றால் உடன் படுகின்றான், வேறு வழி இன்மையால்! இராவணனுக்கு முதலில் அதனைத் தெரிவித்தும் விடுகின்றான்!

முதலில் படைத்தலைவன் பேசிய பேச்சை, அதாவது. தன் அறிவுரையை மீறி சீதையைக் கவர்ந்து வந்தது பிழை யென்றும், அதன் விளைவாகப் பகைமை நேர்ந்துவிட்டதால் போரிடலே தேவையானது என ஒப்பியது போலவும்,

''......................முடிவும் அன்னதால்'' (969 / 22)

என்று தான் கூறுகின்றான். மேலும், தன் பேச்சின் இறுதியில்,

''......................எனை
விடுக்குவையாம் எனின்......'' (970 / 27)

என்றுதான் கூறினானே அன்றி 'எனை விடு' என்று உறுதி காட்டிக் குதிக்க வில்லை, பிற படைவீரர் போலே!

இதனை இராவணனும் உணர்ந்து கொண்டு விட்டான்! மனோதத்துவ அடிப்படையிலான இந்த மகோதரனின் பேச்சினால், தன்னுடைய உள்ளத்து உணர்ச்சியை முழுமையாகப் புரிந்து கொண்டுள்ளவன் மகோதரன் ஒருவனே என்றும், அவன் செய்யும் செய்கைகள் எல்லாம் அவனுக்காகவோ, நாட்டிற்காகவோ அன்றி தனக்காகவே அமையும் என்றும் தெளிந்தான், இராவணன். அதனால் அவன் தான் நேரடியாகப் போரில் ஈடுபடும் வரை மகோதரனையும் போரில் ஈடுபடுத்தவில்லை. அது மட்டும் அல்ல; தன் உணர்ச்சிச் செயலில் ஒத்துழைக்கவும் மகோதரனைப் பயன்படுத்திக் கொண்டான்!

கும்பகருணன் போருக்குச் சென்ற பின், இராவணன் மகோதரனை நோக்கினான். அவன் ஒருவனே போருக்கான உண்மை அடிப்படைக் காரணம், தான் சீதைபால் கொண்ட ஆசை என்பதை அறிந்துணர்ந்தவன் என்ற காரணத்தால், அவளை அடையும் உபாயத்தை அவனிடமே கேட்டான்.

மகோதரன் 'மருத்தன்' என்பவனை மாயாசனகன் ஆக்கிச் சீதையின் முன் கொணரும் உபாயத்தைக் கூறினான்.

அது கேட்டு ஆனந்தம் மிக்கு அவனை அணைத்துக் கொண்டான், இராவணன். அவ்வாறே மாயா சனகனைக் கொணருமாறு மகோதரனிடம் பணித்து விட்டு இராவணன் சீதையிருந்த அசோகவனம் சென்றான்.

சற்று நேரம் கழித்து மகோதரனும் மாயா சனகனை அங்கு அழைத்து வந்து நிறுத்தினான். மேலும் மேலும் கெஞ்சியும் சீதை தன்னை விழையாதது கண்டு அவளைக் கொல்லச் சென்ற இராவணனை மகோதரன் தடுத்து, 'தன் தந்தை சொன்னால், அவள் ஒப்புவாள்' என்றான். ஆனால் அவள் அச்சனகனையே கடிந்துரைத்து இராவணனை வெறுத்து மறுத்தாள். இராவணனோ அந்த மாயா சனகனையே வெட்டி வீழ்த்தப் பாய்ந்தான். அங்கும் மகோதரன் இராவணனைத் தடுத்தான்; 'அவள் இணங்காததற்கு அவள் தந்தையைக் கொல்லல் ஆகாது' என்று போதித்தவனாய், தன்னுடைய பகையை வென்று விட்டால் தன் இச்சை பூர்த்தியாகும் என்று இராவணனிடம் கூறினான்.

இதன் இடையில் போரில் கும்பகருணன் மாண்டான் என்ற செய்தி வந்தது; இராவணன் போயினான்; மகோதரனும் பின் சென்றான். ஆனால் அவ்வாறு செல்லு முன் மருத்தனாகிய மாயா சனகனை வேறோர் சிறையில் வைத்திடச் சொல்லிச் சென்றான்.

"மாறு ஓர் திசை நோக்கிப் போனார் மகோதரனார்"
(1210 / 92)

என்று கவிச் சக்கரவர்த்தி குறிப்பிட்டுள்ளாரோ? என்று வியக்கத் தோன்றுகின்றது!

இதுவரை இவனைக் கம்பர்,

"கல்தடந் தோளினான், எரியும் கண்ணினால்
முற்றுற நோக்கினான்; முடிவும் அன்னதால்;
'கொற்றவ! கேள்' என, இணைய கூறினான்."
(969 / 22)

'''முடுக்குவென் யான்' என முடியக் கூறினான்''
(970 / 27)

''மாதிரம் கடந்த தோளான், மந்திர இருக்கை வந்த
மோதரன் என்னும் நாமத்து ஒருவனை'' (1197 / 2)

''என அவன் உரைத்தலோடும்'' (1198 / 4)

''ஆயது ஓர் காலத்து, ஆங்கண் மருத்தனைச்
சனகன் ஆக்கி
வாய் திறந்து அரற்றப் பற்றி, மகோதரன்
கடிதின் வந்து,
காய் எரி அனையான் முன்னர்க் காட்டினான்.''
(1201 / 31)

''தையல் மேல் ஓடலோடும், மகோதரன் தடுத்தான்
ஈன்ற (1205 / 60)
மொய் கழல் தாதை வேண்ட, இசையும்;
நீ முனியல் என்றான்''

''என்று அவன் விலக்க'' (1207 / 73)

என ஏக வசனத்தில் தான் குறிப்பிட்டு வந்தார்.

தான் கூறிய உபாயத்திற்கு ஆளாகி இராவணனால் அநியாயமாகக் கொல்லப்பட இருந்த மருத்தனைத் தானே காத்து நின்ற காருண்யத்தால் அவனை, 'ஆர்' விகுதியிட்டு மரியாதை காட்டி இந்த கட்டத்தில்,

''மாறு ஓர் திசை நோக்கிப் போனார் மகோதரனார்''
(1210 / 92)

என்று கவிச் சக்கரவர்த்தி குறிப்பிட்டுள்ளாரோ என்று வியக்கத் தோன்றுகின்றது!

கவிச் சக்கரவர்த்தி மகோதரனுக்குக் காட்டிய 'ஆர்' விகுதி மரியாதை, அவனிடம் இராவணன் போர்க்குச் செல்லும்படி பணிக்கும் வரையும் நீடித்தது என்பது,

''மன்னன், முன் நின்ற மகோதரற்கு இம்மொழி
வழங்கும்'' (1329 / 94)

என்ற வரியினால் தெரிகின்றது!

ஆனால் அவன் மீண்டும் இராவணனின் போர்த் திட்டத்திற்கு இணங்கிய காட்சியிலிருந்து கவிச் சக்கரவர்த்திக்கு மகோதரன் பால் தோன்றிய மரியாதை குன்றியது!

''நின்ற வாள் எயிற்று அரக்கனும் உவகையின்
நிமிர்ந்தான்'' (1330 / 97)

என ஏக வசனத்தில் பாடத் தொடங்கி விட்டார்.

''அனையன் நின்றனன்; அவ்வழி, மகோதரன்
அறிந்து, ஓர்
வினையம் எண்ணினன், இந்திர வேடத்தை மேவி,
துணை வலத்து அயிராவதக் களிற்றின் மேல் தோன்றி,
முனைவர் வானவர் எவரொடும் போர்செய
மூண்டான்''
(1340 / 166)

''...........எனச் சமைத்தான்'' (1340 / 167)

என்று அடுத்த காட்சிகளிலும் தொடர்ந்து பாடிச் செல்கின்றார்!

இனி மற்றொரு சூழலிலும் மகோதரன் சற்று விவேகமான காரியம் செய்கின்றான்! 'இந்திரசித்து போரில் மாண்டான்' என்னும் செய்தி கேட்டு, தந்தை,இராவணன், சோகத்தின் எல்லையில் வீழ்கின்றான். இவ்வளவிற்கும் காரணமான சீதையை வாளால் வெட்டி வீழ்த்துவேன் என ஓடுகின்றான்.

அவ்வாறு ஓடுகின்றவனை மகோதரன் தடுத்தான்! காரணம், 'இராவணன் பெண் கொலை செய்தான் என்ற

மிகப் பெரிய பழியைச் சூடப் போகின்றானே' என்ற நாண உணர்வே! எனவே, இராவணனிடம்,

''................................நின் புகழ்க்கு மன்னா!
கேடு வந்து அடுத்தது என்னா இளையன கிளத்த லுற்றான்'' (1435 / 55)

''அனைத்துப் போர்களிலேயும் வெற்றி கண்டு எல்லாப் புகழ்க்கும் ஆளாகி உள்ளவனே! நீருள்ளவரை, நெருப்புள்ள வரை, பேருலகம் உள்ளவரை, வானம் உள்ளவரை, காற்று உள்ளவரை தீராப் பழியைச் சுமக்கத் துணிந்து விட்டாயா?

போர் மறவர்களின் தலைகளையும், யானை தந்தங் களையும் சிவி எறிந்த உன்னுடைய பிரகாசம் பொருந்திய வாள் சிற்றிடை மங்கை மேல் வைத்தவுடனேயே ஆவியை உண்ணுமே!

சிறைப்பெண்ணான அந்தக் குலமகளை, தவ மங்கையை சினந்து நீ உன் வாளால் கொன்று வீழ்த்தினால், சிவனும் மாலும் பிரம்மனும் 'இராவணன் தன் குலப் புத்திக் கேற்ற செய்கை செய்து விட்ட சிறியோன்' என்று கைகொட்டிச் சிரித்து உன்னை ஏளனம் செய்வார்களே! எனவே,

''நிலத்து இயல்பு அன்று; வானின் நெறி அன்று; நீதி அன்று;
தலத்து இயல்பு அன்று; மேலோர் தருமமேல், அதுவும் அன்று;
புலத்தியன் மரபில் வந்து, புண்ணிய விரதம் பூண்டாய்!
வலத்து இயல்பு அன்று; மாயாப் பழிகொள மறுகுவாயோ?''
(1435 / 59)

இல்லை; நின் மகனைக் கொன்றவர்களைப் போரில் வெட்டி வீழ்த்த அஞ்சி, சீதையை இன்று வாளால் வீழ்த்தி விட்டு, இலங்கைக்குத் திரும்பி 'ஐயோ! அவளும் அழிந் தாளே!' என்று மனம் நொந்து கிடப்பாயோ?'' என்றெல்

லாம் கூறி, இராவணன் சீதையைக் கொல்வதைத் தடுத்து நிறுத்தினான்.

இத்தனை நற்குண நல்லுரைகள் நவின்று நாட்டு நாயகனைத் தீய செயலினின்றும் காத்தான் என்றாலும் கவிச்சக்கரவர்த்திக்கு மீண்டும் அவன் மேல் மரியாதை தோன்றவில்லை; ஏக வசனத்திலேயே குறிப்பிடுகின்றார்!

ஆனால் இறுதியில் அவனைப் புண்ணிய மூர்த்தியான இராமனாலேயே வீழச் செய்கின்றார்!

இராவணனும் இராமனும் எதிர் எதிர் போர் செய்யப் புகுந்த வேளையில், மகோதரன் தான் இக்காட்சிக்கு ஒரு சாட்சியாக மட்டும் நில்லாது அச் சூழலிலேனும் தன்னைப் போரில் ஈடுபடுத்த வேண்டும் என இராவணனிடம் கேட்கின்றான். அவனோ, இராமனுடன் தான் ஒருவனே போர் செய்யவுள்ளதாகவும், மகோதரன் இலக்குவனைத் தடுத்தால் போதும் என்றும் கூறுகின்றான். ஆனால், இராமனின் படை மகோதரனை நோக்கிப் பாய்ந்து அனைத்து வீரர்களையும் வீழ்த்தியது. ஆனால் அவன், இராமனை நேரிடையாக எதிர்த்து நின்றான். இராமன், பல கணைகள் விட்டு அவனுடைய அங்கங்களைக் கொய்து வீழ்த்தினான்!

இவ்வாறு, மகோதரன் அவ்வப்போழ்து அறைந்த அறிவுரைகளும், நீதி நெறிகளும் அவன் இராம இராவணப் போரை நாட்டின் தேவை என்ற அடிப்படையிலன்றி இராவணனின் சொந்த வியவகாரத்தால் வந்ததே என்பதை உறுதியாகக் கொண்டு முன்னும் பின்னும் செயல்பட்டான் என்பதனாலேயே தொடக்கத்திலேயே அவன் வாய் வழி 'உன் பகை' எனச் சொல்ல வைத்தார் கம்பர் என்பதை அறிகிறோம்.

சொல்லுக்குச் சொல் இவ்வளவு உட்பொருள் அமைத்துப் பாடும் கவிச்சக்கரவர்த்தியின், திறமைப் பாடல்கள் ஒவ்வொன்றுமே 'கம்ப சூத்திரம்' ஆகும் அன்றோ!

## 4. 'எம்பி எனகிற்கில்'

அனுமனால் எரியுண்ட இலங்கையை தேவ தச்சன் புதுப்பித்தான். இலங்கை மன்னன் ஆலோசனை மண்டபத்தில் அமர்ந்தான். ஒரு குரங்கினால் நடந்தேறிய அழிவுகளைக் கண்டும் அக்குரங்கினை அழித்த மன மகிழ்வாவது தோன்றும் வகையில் நடந்துகொள்ளாது பழியில் மூழ்கி விட்டதாக அகங்கலாய்த்துக் கொண்டான்.

படைத் தலைவர் முதல் பிசாசன் முதலானோர் வரை தங்கள் தங்கள் உணர்ச்சிகளைக் கொட்டிப் பேசினர்; அந்த அனுமனை ஏவிய மானுடர் மேல் போர் தொடுத்து வீழ்த்துவதே சரியானது என்று பேசியிருந்தனர்.

அப்பொழுது, கும்பகருணன் அவையில் எழுந்தான்; பிறர் பேசுவதைத் தடுத்து நிறுத்தி தான் பேசலுற்றான். அவ்வாறு, பேசத் தொடங்கும் பொழுது, இராவணனை நோக்கி,

''எம்பி எனகிற்கில், உரை செய்வல் இதம்'' (972 / 47)

என்றான்! 'தம்பி என்று என்னை நீ ஏற்றுக் கொள்வாயேயானால்' என்ற நிபந்தனையை ஏனிட்டான்?

அதற்குக் காரணங்கள் இரண்டு!

முதற் காரணம், இராவணன் தன்னைத் தம்பியென மதித்து, முதலில் நடந்த அவையில் தன் எண்ணத்தை அறிய ஏற்பாடு செய்யவில்லையென்ற ஏக்கம்! அதனை வெறுப்புணர்ச்சியோடு தக்க சமயத்தில் தன் தமையனிடமே சுட்டிக்

காட்டிப் பேசித் தன் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ள விழைந்தான்!

ஆதியில் ஆயிரவர்க்கும் மேலான படை வீரர்களோடு மைந்தன் அக்க குமாரனையும் இழந்த நிலையில் அரும்பாடு பட்டு அனுமனைத் தன் அவைக்குக் கொணர்ந்து விசாரணை நடத்தினான், இராவணன். அங்கே தம்பி வீடணன், தனயன் இந்திரஜித்து முதலாயினோர் இருந்து தம் தம் கருத்துக்களை எடுத்துரைத்தனர். ஆனால், அவ்வவைக்குக் கும்பகருணன் அழைக்கப்படவில்லை. தான் ஒருவன் தம்பி இருப்பதாக இராவணன் நினைவு கூர்ந்திருந்தால் இவ்வளவு பெரியதொரு முக்கிய நிகழ்ச்சியின் போழ்து தன்னை ஏன் அவன் அழைக்கவில்லையென அவன் மனம் உறுத்திக் கொண்டேயிருந்தது. அந்த உறுத்தலை இந்த சந்தர்ப்பத்தில் குத்திக் காட்டிக் குறிப்பிட்டு விட்டான்.

என்றாலும், தன்னைப் பொறுத்தவரை, தான் இராவணனுக்குற்றதொரு தம்பி என்பதை மனத்தகத்தின் ஆழத்தில் பதித்து வைத்திருந்ததால் தான், பின்னர் ஒரு காட்சியில், வீடணனிடம் கும்பகருணன்,

''தும்பிஅம் தொடையல் வீரன் சுடு கணை துரப்ப, சுற்றும்
வெம்பு வெஞ் சேனையோடும், வேறு உள கிளைஞரோடும்,
உம்பரும் பிறரும் போற்ற, ஒருவன் மூவுலகை ஆண்டு,
தம்பியை இன்றி மாண்டு கிடப்பனோ, தமையன் மண்மேல்?''

(1164 / 158)

என்று தன் உடன் பிறப்புப் பாசத்தைக் கொட்டிப் பேசலுற்றான்!

மேலும், 'இத்துணை படை வீரர்கள், தங்கள் தங்கள் படைத் தகுதிக்கு ஏற்பப் போர் செய்தலே சரியெனும் பாங்கில் பேசினர்; காலமெல்லாம் என்னையும் ஒரு சிறந்த போர் மறவனாய்ப் போர்க் கோலம் செய்து வைத்திருந்த காரணத்தால், நானும் அந்த அடிப்படையில் தான் பேசு வேன் என்று நீ எதிர் பார்க்கலாம்! அவ்வாறு போர் வீரனாக மட்டும் நின்று என் கருத்தைக் கூறுவதற்கு முன்னம், என் மூத்தோன் என்ற வகையில் நெறி முறையை எடுத்து விளக்குவது என் கடமை. ஆக எனைச் சற்று நேரத்திற்கு மாபெரும் படை வீரருள் ஒருவனாக மட்டும் பாராது உன் தம்பி என்ற முறையில் பார்ப்பாயாக' என்று அவன் ஒரு பீடிகை போட்டது போலாயிற்று.

அவ்வாறு அவன் தன் உறவின் அடிப்படையில் பேசிய தெல்லாம் தன் தமையனுக்கு தங்கள் குலப் பெருமைக்கு ஏற்ற நீதிகளாய் கூறியவையாக அமைந்தன.

''நீ அயன் முதல் குலம் இதற்கு ஒருவன் நின்றாய்''
(972 / 48)

என்று தொடங்கியது முதல்,

''சிட்டர் செயல் செய்திலை; குலச்சிறுமை செய்தாய்''
(973 / 53)

என்பது வரை, தன் தமையனைத் தம்பி கும்பகருணன் எவ்வளவு இடித்துரைத்து ஏளனமாகப் பேசினான் என்பது தெளிவாகும்!

ஆனால், 'இவ்வுரையைக் கூறிய நிலையில் கும்பகருணன் தன் தமையனின் முகம் பார்த்தான்; அவன் தன் சினத்தை யுணர்ந்தான்; அடுத்த வரியிலேயே இராவணனுக்குச் சாதக மான கருத்துகளைக் கூற ஆரம்பித்து விட்டான், தமை யனின் சீற்றத்திற்கு அஞ்சி' யென ஆன்றோர் கூறுவர்.

என்றாலும், இராவணன் அவ்வாறு சினமுகம் காட்டினான் என்பதற்கு எங்கும் குறிப்பு இல்லை; இடையிட்டு சினந்து பேசினதால் கும்பகருணன் தன் பேச்சு தடுமாறினான் என்று சொல்வதற்கும் ஆதாரம் இல்லை.

மாறாக இராவணன் கும்பகருணனின் ஆலோசனைப் பேச்சை முழுதுமாய்ப் பொறுமையுடன் கேட்டிருந்தான் என்பதனையே, அவன் தன் தம்பி பேசி முடித்தபின்,

''நன்று உரை செய்தாய்!— குமர! — நான்
அது நினைந்தேன்;
ஒன்றும் இனி ஆய்தல் பழுது; ஒன்னலரை எல்லாம்
கொன்று பெயர்வோம்;'' (974 / 57)

என்று கூறிய கூற்று நமக்குக் காட்டுகின்றது.

இந்திரசித்து பேசியதைத் தடுத்துப் பேசிய வீடணனை இடையிடை சினந்து கடிந்து பேசிய இராவணனுக்குக் கும்பகருணனை இடைமறித்துக் கடிந்து பேசியிருக்க முடியாதா? வீடணன் தன் தமையன் கடிந்துரைத்தும் கதை கதையாய்ப் பேசிச் சென்றானே— இரணியன் வதை முழுதும் பகர்ந்து பேசிச் சென்றானே—அதுவரை சகித்துக் கொண்டு கேட்டிருந்த இராவணனுக்கு, கும்பகருணன் தன் சிற்றுரையை முடிக்கும் வரை சகிப்புத் தன்மை தான் இருந்திருக்காதா?

எனவே, நீதி நெறிகளைப் புகட்டிப் பேசிக் கொண்டே வந்தவன் திடீரென மன்னன் மனத்திற்கேற்பப் பேச்சை மாற்றிக் கொண்டதற்கு ஏதோ காரணம் இருக்க வேண்டும்! அதுதான், 'எம்பி — எனகிற்கில்' என அவன் தன் பேச்சைத் தொடங்கியதன் இரண்டாவது காரணம் ஆகும்.

தம்பி என்ற நிலையில் நின்று பேசித் தன் கருத்துக்களை உரைத்து முடித்ததும், தான் ஒரு படைத் தலைவன் என்ற எண்ணமும் நினைவும் வந்தது. அப்பதவிக்கேற்ப

நாட்டு மன்னனுக்குத் தான் என்ன உறுதிமொழி கூற வேண்டுமோ அதனைக் கூறத் தொடங்கி விட்டான். அதனால் தான் பின்னர் அவன் வீடணனிடம் பேசிய பொழுது,

''கருத்து இலா இறைவன் தீமை கருதினால், அதனைக் காத்துத்
திருத்தலாம் ஆகின் அன்றோ திருத்தலாம்? தீராது ஆயின்,
பொருத்து உறுபொருள் உண்டாமோ? பொரு தொழிற்கு உரியர் ஆகி,
ஒருத்தரின் முன்னம் சாதல், உண்டவற்கு உரியது அம்மா''

என்று கூறினான், (1164/ 157)

ஆக, தன்னுடைய இருநிலை காட்டி, இதயத்தில் இருந்த ஏக்கத்தையும் கூட்டித் தன் தமையன் இராவணனிடம் 'நின் தம்பி என எனைக் கொள்வாயே யானால்' என்ற நிபந்தனையிட்டுப் பேச ஆரம்பித்தான் எனக் கண்டு வியக்கின்றோம்!

# 5. 'நெறி பிறந்தும் இலேன்'

இராவணன் மந்திராலோசனை மண்டபத்தே இருந்து ஒவ்வொருவர் கருத்தையும் கேட்டு அறிகின்றான். கும்பகருணன்,

''ஊறுபடை ஊறுவதன் முன்னம், ஒரு நாளே,
ஏறுகடல் ஏறி, நரர் வானரரை எல்லாம்
வேறு பெயராதவகை, வேரொடும் அடங்க
நூறுவதே கருமம்'' என்பது நுவன்றான் (973 / 56)

தன் இளவலின் கூற்றிற்கு இசைந்து,

''நன்று உரை செய்தாய்!-குமர!-நான் அது
நினைந்தேன்
ஒன்றும் இனி ஆய்தல் பழுது; ஒன்னலரை எல்லாம்
கொன்று பெயர்வோம்; நமர் கொடிப் படையை
எல்லாம்,
'இன்று எழுக' என்க! என இராவணன் இசைத்தான்''
(974 / 57)

இவ்வாறு, இராவணன் தானே போர்மேற் செல்லத் தயாராகி விட்டதைத் தடுத்துரைத்தான், இந்திரசித்து. 'அற்ப மானிடரை வெல்வதற்கு, அரசனே! நீயே செல்ல வேண்டுமா? இது என்ன வீரம்!' என்று ஏளனமாய்ச் சிரித்தான்.

'பற்பல ஆயுதங்களைச் சுமந்த வீரர்கள் இருக்கின்றார்களே! யானும் ஒருவன் உளன் அன்றோ! அப்படியிருக்க நீங்கள் செல்வது சரியா?' என்றெல்லாம் கேட்டான். மேலும்,

''முற்றும் முதலாய் உலகம் மூன்றும், எதிர் தோன்றிச்
செற்ற முதலாரொடு செறுத்தது ஓர் திறத்தும்,
வெற்றி உனது ஆக விளையாது ஒழியின், என்னைப்
பெற்றும் இலை; யான் நெறி பிறந்தும் இலென்
என்றான்'' (174 160)

மூன்று உலகங்கள் இணைந்து வந்தாலும் அவர்களோடு சண்டையிட்டு இறுதி வெற்றியைத் தன் தந்தைக்கு ஆக்குவதாக வீராப்புப் பேசினான். அவ்வாறு பேசிய பொழுது, 'என்னைப் பெற்றும் இலை; யான் நெறி பிறந்தும் இலென்' என்றுரைத்தானே அதன் பொருள்?

கவிச்சக்கரவர்த்தி கம்பர் பற்பல இடங்களில் பழகு மொழிச் சொற்களை - உலகியல் உணர்ச்சி வயப்பட்ட சொற்களை—நாகரிக நடையில் கையாண்டுள்ளார் என்பது உண்மை. இந்த அடிப்படையில் சிலர், அவனுடைய அந்தச் சொற்களுக்கு, 'நீ என்னைப் பெற்ற தந்தையுமில்லை, நான் உனக்கு முறையாகத் தோன்றிய மகனும் இல்லை' என்ற பாங்கில் பொருள் பகர்வர். இதனையே சற்று எளிய உலக நடைப்பேச்சில் சொல்லப் போனால், 'நீ எனக்கு அப்பனுமில்லை, நான் ஒரு அப்பனுக்கே பிறக்காதவர் ஆவேன்' என்று கொச்சையாக-அநாகரிகமாக அமைகின்றது!

இந்திரசித்து என்கிற மாபெரும் வீரனை—
வீரத்தின் பன்மை தீர்ப்பானை (900 / 39)—

ஈன்றவன் யார்?

இந்திரசித்துவை ஈன்றவன் இராவணன் என்பதை எல்லோரும் தெள்ளத் தெளிவாக உணர்ந்திருந்தனர்!

கவிச் சக்கரவர்த்தியே,

'இராவணன் மகன்' (1262 / 80)

'தசமுகன் தோன்றல் (1266 / 100)

'தசமுகன் தனயன்' (1267 / 111)

'இராவணன் புத்திரன்' (1269 / 123)

'இராவணன் தனயன்' (1324 / 59)

'இராவணன் தோன்றல்' (1325 / 60)

'இராவணன் சிறுவன்' (1326 / 69)

'இராவணன் காதல்' (1339 / 162)

'திசைமுகன் மகன்' (1420 / 25) என்ற

சொற்றொடர்களால் கவிக் கூற்றாக இந்திரசித்து இராவணின் மகன் எனக் காட்டுவார். அதுவேயன்றி, இராவணன்; 'காட்டாதன காட்டிய தாதை' (1249 / 3) எனக் குறிப்பிடுவார். மேலும், 'தந்தையை' (1281 / 207) 'மகன்' (1293 / 279) 'மைந்தன்' (1296 / 299), 'தந்தை' (1329 / 91) 'தாதை' (1342 / 185), 'மதலை' (1343 / 186), 'மைந்தன்' (1376 / 1379 / 18), 'தாதை (1427 / 1), 'நன் மகன்' (1430 / 23), ' தன் மகன்' (1431 / 26), 'என்னுடைய மகன்' (1416 / 1) என்ற படர்க்கை நிலைச் சொற்றொடர்களைப் பெய்து இராவணனின் மகன் இந்திரசித்து எனக் காட்டி நிற்பார்.

இனி, இராவணன் வாயிலாக 'இந்திரசித்து என் மகன்' எனச் சொல்லாமல் சொல்லிக் காட்டுவார்! 'என் மகன்' (1316 / 1), 'மறு இல் மைந்தன்' (1432 / 35), 'என் மதலை' (1432 / 36), 'மைந்தவோ! மாமகனே' (1429 / 10), 'என் காதலன்' (1429 / 14), 'மைந்தன்' (1436 / 61) என்ற சொற்றொடர்களே அதற்குச் சான்றாகும்!

இந்திரசித்துவும் தான் இராவணனின் மைந்தனே என்பதைச் சொல்லிக் காட்டாமல் இல்லை!

'எந்தை' (895 / 5, 1329 / 91, 1381 / 30, 1382 / 36)

'எந்தாய்' (896 / 10, 1281 / 207), 'இராவணன் மகன்' (1325 / 66) என்ற பற்பல சொற்றொடர்களால் எடுத்து ரைப்பான்!

இந்திரசித்துவின் சிற்றப்பனாகிய வீடணனோ, 'இராவணற்கு அரும் பெறல் புதல்வன்' (1040 / 51) என்பான்! மேலும், அவன் 'இந்திரசித்தனார்க்கும்'' (1240 / 207) என்று மரியாதைச் சொல்லைப் பெய்வான்.

தூதுவர்களோ, இராவணனிடம் 'நின் காதலன்' (910 / 26) என்று இந்திரசித்துவையும் இந்திரசித்துவினிடம், 'நுந்தை' (1316 / 2) என்று இராவணனையும் குறிப்பிட்டுப் பேசுவர்.

இத்துணைக்கும் மேலாகச் சொல்லின் செல்வனாகிய அனுமன் இந்திரசித்துவை, 'இலங்கைக் கோ மகன் (1253 / 33), 'தீயோன் சேய்' (1383 / 47) என்றெல்லாம் குறிப்பான்! அது மட்டுமல்ல; இந்திரசித்துவினிடம் பேசும் பொழுது இராவணனைச் சுட்டிக் காட்டி, 'உன் தந்தை, (1261 / 75) என்றும் குறிப்பிடுவான்.

காவிய நாயகனான இராமனே இந்திரசித்துவை, 'இலங்கை வேந்தன் மைந்தன்' (1283 / 226) என்று குறிப்பிடு கின்றான்! இராவணற்கேத் தோன்றிய மகன் இந்திரசித்து என்பதற்கு ஐயம் திரிபற்ற உறுதியான சாட்சி இதனினும் வேண்டுமோ!

இந்திரசித்து போர்க் களத்தில் விழ்ந்து பட்டதும் அவன் உடலை ஏந்தி இராவணன் அழும் பொழுது,

''எனக்கு நீ செய்யத்தக்க கடன் எலாம், ஏங்கி ஏங்கி,
உனக்கு நான் செய்வதானேன்!''

(1433 / 39)

என்று அரற்றுகின்றான்!

இராவணன் 'இந்திரசித்துவே, ஆகும் உரிமைக்கு' என்று மன உறுதியோடு இருந்தான் என்றால் அவனுடைய பிறப்பில் களங்கம் காணும் சொற்களைக் கவிச் சக்கரவர்த்தி கையாள்வாரா?

ஆழ் பொருளற்ற சொற்கள் அவை என்று கொண்டாலும், அச் சொற்களின் கருத்தால் தோன்றும் இழிவு யாரைச் சாரும் என்பதையும் சற்றே மனத்தில் கொள்ள வேண்டும். ஒரு எளிமையான தாயையா சென்று சேரும்? கற்பின் கனலி, காவிய நாயகி, காகுத்தன் மனைவியான சிதைக்கு இணையான கற்புடையாளை, கணவன் இறந்து பட்டதும் அவன் உடல் மேல் சாய்ந்ததும் தன் உயிர்போம் அளவிற்குப் பெண்மையின் சிகரமாய்த் திகழ்ந்த மாதரசி மண்டோதரித் தாயை அல்லவோ சென்றடையும். இது எள்ளளவும் பொருந்துமா?

இந்நிலையில் அம் மாதரசி இந்திரசித்து இறந்து கிடந்தமை கண்டு மைந்தன் மேல் வீழ்ந்து புலம்புவதையும் சற்றே பார்ப்போம்.

''மலையின் மேல் மயில் வீழ்ந்தென்ன,
மைந்தன் மேல் மறுகி வீழ்ந்தாள்'' (1433 / 45)

எனக் கவிச் சக்கரவர்த்தி அவளைப் படம் பிடிக்கிறார்!

''ஐயனே! அழகனே! என் அரும் பெறல் அமிழ்தே!''
(1434 / 48)

என்றெல்லாம் அவனை விளித்து அரற்றுகின்றாள். இறுதியில் இவனை ஈன்றெடுத்த என் கணவர் இராவணற்கு என்ன நேருமோ என்று மனம் தளர்ந்தவளாய்,

''அஞ்சினேன் அஞ்சினேன்; அச் சிதை என்று
அமுதால் செய்த
நஞ்சினால், இலங்கை வேந்தன் நாளை
இத்தகையன் அன்றோ?''
(1434 / 53)

என்று புலம்புகின்றாள்!

இந்தக் காட்சியின் உணர்ச்சிகளைப் புரிந்து கொண்டவர்கள், விளையாட்டிற்காக—வஞ்சினத்திற்காக—உலக நடைக்காக—வீரப் பேச்சிற்காக கூட பிறப்பின் அடிப்படையில் மாசு தோற்றுவிக்கும் சொற்றொடர்களைக் கையாள முடியுமா?

அப்படியானால், 'இந்திரசித்து கூறிய வார்த்தைகளின் உட்பொருள் என்ன?' என்று வினவத் தோன்றும்! அவ்வினாவிற்குக் கவிச் சக்கரவர்த்தியின் சொற்களாலேயே விடை காண முயல்வோம்!

போர்க் களத்தில் அனைவருமே மாண்டு கிடப்பது போல் மயங்கிக் கிடந்தனர். மாருதி மருந்து மலையைக் கொணர்ந்தான்; யாவரும் உயிர் பெற்று எழுந்தனர்! எல்லோரும் மறுபிறப்பு எடுத்ததாய் நினைந்தனர். அதனை நன்றியுணர்வுடன் போற்றிய இராமனே, அனுமனிடம்,

''முன்னின் தோன்றினோர் முறையின் நீங்கலாது,
என்னின் தோன்றிய துயரின், ஈறு சேர்
மன்னின் தோன்றினோம் முன்னம்; மாண்டுள்ளோம்!
நின்னின் தோன்றினோம், நெறியின் தோன்றினாய்!''
(1372 / 110)

என்கின்றான்.

இந்தப் பாடலில் இந்திரசித்துவின் பாடலில் பெயப் பெற்றுள்ள சொற்கள் ஒரு சில வந்துள்ளதைக் கண்டு வியக்க வேண்டியுளது! இராமன், தாங்கள் மறுபிறவி எடுத்துள்ளது அனுமன் தன்னால் என்கின்றான்! அப்பயடிானால்

அதற்கு அபத்தமான கற்பனை மேற்கொண்டு அவனுடைய பிறப்பில் அசூயை அடையத் தோன்றுமா?

வேத முறைப்படி பிதிருக்களுக்கு அமாவாசை முதலிய நாட்களில் தர்ப்பணம் செய்து பிண்டம் இடுவோர், 'நான் எந்த பிரஜாபதிக்குப் பிறந்தேனோ, அந்த பிரஜாபதியாள னுக்கு இந்த பிண்டம் சமர்ப்பணம்' என்பார்கள் என அறிகின்றோம். அந்த வகையில் அவமானமான பிறவியா எடுத்தனர் இராம இலட்சுமணர்கள்! அனுமனால் மறுபிறவி என்று எடுத்துக் கூறுவதால் அவர்கள் தசரதனுக்கே பிறந்த வர்கள் என்ற உண்மை மாறி விகற்ப எண்ணத்திற்கு இடம் கொடுக்குமா? அதே போல் தான் இந்திரசித்தின் உரைக்கும் உரை காண வேண்டும்.

ஈண்டு திருவள்ளுவப் பெருந்தகையின்,

"தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை ஒன்று."

(திரு. 236)

என்ற அறிவுரையின் அடிப்படையை நோக்குதல் சிறிது.

ஒருவன் குழந்தையாகப் பிறக்கும் பொழுதே புகழுடைய வனாக எப்படித் தோன்ற இயலும்? ஒருவேளை புகழ் பெற்ற பெற்றோர்க்குப் பிள்ளையாய்ப் பிறந்தவனும் நாள டைவில், பருவ வளர்ச்சி பெற்றிட்ட போது தியனாக மாறுதல் இயலாதோ? ஆக, தமிழ் மறையார் கூறியுள்ளதின் அடிப்படை நோக்கம் ஒருவன் எங்கு எப்படிப் பிறந்திருந் தாலும் அவன் வளர வளர அவனுடைய பண்பு நலன்கள் சிராக மேலோங்கி வளர்ந்து, அவன் மக்களிடையே தோன்றும் பொழுது பிறர் போற்றும் வகையில் குண நலன் வளர்ந்தோங்க வேண்டும் என்பதேயாகும்.

இந்த அடிப்படையில் தோன்றியவன் தான் இந்திர சித்தன். அவன், சிறு வயது முதலே வீரமும், விவேகமும் மிகுந்தவனாய் வளர்ந்தான்; வீரத்தின் திரத்தால்

இந்திரனையே வென்று 'இந்திரசித்து' என்ற காரணப் பெயர் விளங்கத் தோன்றினான்; தன் விவேகத்தின் விளை வாய் யாகங்கள் புரிந்து அவற்றின் பலன்கள் எய்தப் பெற்றுத் தோன்றினான்.

இவ்வாறாக நெறி முறையில் வழி வகையால் நான் பல்லோரும் போற்றப் பிறந்திருந்தும், அப்போற்றுதலுக்கு அருகதையற்றவன் ஆவேன் என்று சூளுரைத்தான் எனப் பொருள் கொள்ளுதல் போற்றத் தகுந்தது. இவ்வாறான பொருள் வலிந்து வருவித்துக் கொள்வதாகும் என சிலர் வாதிடலாம்! ஆனால், அவர்கள் நம் செந்நாப் போதாரின்

''ஒழுக்கம் உடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்''

(திரு. 139)

என்ற இலக்கண அடிப்படையில் கவிச் சக்கரவர்த்தியைப் பார்ப்பார்களேயானால் இந்திரசித்துவின் வாயிலாகக் கூட கம்பர் அவ்வாறான இழி பொருட் சொற்களைப் பெய்திட மாட்டார் என்பதைப் புரிந்து கொள்ள முடியும்!

## ௬. என் கிளை - என் களம்!

இராவணனின் மந்திராலோசனை சபையில், இந்திர சித்து, தாங்கள் இராம இலக்குவருடன் போர் மேற் செல்லலே ஏற்புடையது என்று கூறித் தன் கருத்தினை வெளியிட்டான். அவனைத் தடுத்து, வீடணன் தன் கருத் துக்களைக் கூறினான். அவனுடைய பேச்சு முழுமையும் கேட்டிருந்த இராவணன் வீடணனைக் கடிந்து பேசலா யினான்.

அவ்வாறு இராவணன் எள்ளி நகையாடிப் பேசும் பொழுது,

"சொல்லும் மாற்றங்கள் தெரிந்திலை;
பன்முறை தோற்று,
வெல்லும் ஆற்றலும் ஒருமுறை பெற இலை; விண்ணைக்
கல்லும் ஆற்றல் என் கிளையையும்என்னையும் களத்தில்
கொல்லும் மாற்றலர் உளர் எனக் கோடலும்
கொண்டாய்" (982/104)

என வீடணனிடம் கூறினான்.

ஏன் இவ்வாறு வீடணனைத் தனிப்படுத்தி இராவணன் பேசினான்?

வீடணன் யார்? ஆம்; அன்று போர்க் களத்தில் கண்ட கும்பகருணனை, 'இவன் யார்?' என இராமன் வீடணனிடம் கேட்டான்; அதற்கு விடை இறுத்தானே வீடணன், அதனைக் கொண்டு வீடணன் யார் எனப் பார்ப்போமே.

''பேர் இயல் இலங்கை வேந்தன் பின்னவன்;
எனக்கு முன்னோன்'' (1158/114)

அதாவது வீடணன் இராவணனின் இளையோன்தான்- அவ்வுறவை இராவணன் ஏற்கவில்லையோ? அந்த அண்ணன்- தம்பி உறவு சுற்றி வளைத்து வந்த ஒன்றோ! இல்லவே இல்லை: எப்படியென்றால், இராவணன் வீடணனிடமே,

''..............என்னோடு இங்கு ஒரு வயிற்று உதித்த
உனக்கு மானிடர் வலியர் ஆம் தகைமையும் உளதோ?''
(982 / 103)

என்று கேட்கின்றான். அதனால், இராவணன்—வீடணன் இருவரும் ஒரு தாய் மக்களே என்பது தெளிவு.

இந்த உண்மை அந்த சுக்கிரீவக் குரங்கும் அறிவானே! அதனாலன்றோ இராமன் வீடணனுக்கு அடைக்கலம் தரலாமா என்று கேட்டபொழுது,

''தம்முனைத் துறந்தது, தரும நீதியோ?'' (1019 / 59)

என்று தன் கருத்தை வெளியிடுகின்றான்! அதாவது வீடணன் இராவணனுக்குத் தம்பி என்பது உறுதிப்படு கின்றது.

அது மட்டுமா? இந்திரசித்து ஆத்திரத்துடன் தன் தந்தையினிடம்,

''சூழ்வினை மாயமெல்லாம் உம்பியே துடைக்க''
(1417 / 3)

என்று வீடணனைக் குறிப்பிடுகின்றான்! இப்படியெல்லாம் அனைவராலும் உணரப்பட்ட தன் தம்பியை இராவணன் ஏன் தனிமைப்படுத்திப் பேசினான்?

இராவணன் போர்க்களத்தில் இராமன் அம்பால் வீழ்ந்து பட்டு மாண்ட பின், வீடணன் அவன் மேல் வீழ்ந்து அழுது புலம்பினான்! அப்போழ்து,

''என் இல் ஆற்றல் அண்ணாவோ! அண்ணாவோ!''
(1535/218)

என அரற்றினான். என்றாலும், அவன் அவையில் தன் கருத்தைச் சொல்லத் துவங்கும் பொழுதே,

''......................................என் உரை
எள்ளலையாம் எனின் இயம்பல் ஆற்றுவென்''
(975 / 72)

எனப் பகர்ந்தான். 'தன் தாய்நாட்டின் நிலையும் அங்கிருப்போர் அனைவரின் மனநிலையும் இருந்த பாங்கில் தான் கூறப்போவது எடுபடக்கூடியது அல்ல' என்பதை விடணனே உணர்ந்திருந்தான் என்பதை இது காட்டுகின்றது! இருப்பினும் இராவணனை அவன்,

''எந்தை நீ; யாயும் நீ; எம்முன் நீ, தவ
வந்தனைத் தெய்வம் நீ; மற்றும் முற்றும் நீ;''
(976 / 73)

என்று விளித்து,

''இந்திரப் பெரும் பதம் இழக்கின்றாய்'' (976 / 73)

என்று உறுதியாகவும் கூறி விடுகின்றான்! என்னதான் நியாய அநியாயங்களை அறிந்திருந்தாலும் தன் தமையனுக்கு அவனுடைய செயல்களினால் கேடு வருவது திண்ணம் எனத் தோன்றினாலும் அவ்வாறான கேடு வரக்கூடும் எனத் தான் எண்ணுவதாக—அனுமானிப்பதாக—எடுத்துக் கூறுவது தான் முறையே அன்றி, தான் கருதும் கேட்டினை நேரிடையாக — வெளிப்படையாகக் கூறுவது என்பது சாலச் சிறந்தது அன்று.

மேலும், விடணன், தொடர்ந்து பேசும் பொழுது,

''கோநகர் முழுவதும் நினது கொற்றமும்,
சானகி எனும் பெயர் உலகின் தம்மனை
ஆனவள் கற்பினால், வெந்தது'' (976 / 75)

என்றான்.

இதனில் இரு கூறுகளைக் கவனிக்க வேண்டும். ஒன்று, தம்முடன் இணைந்தவனின் புகழ்— வெற்றி— அடிப் படைச் சக்திகளை— நற்குணம், வீரம் முதலியவற்றை— அவனுக்கே ஆக்கிப் புகழ வேண்டுவதும், அவன் தாழ்வுற நேர்ந்தால் அத் தாழ்வினை மட்டும் அல்ல, அதற்கான அடிப்படைக் காரணங்களையும் அவன் மேல் மட்டும் அல்லாது தங்கள் மேலும் (தாங்கள் அவ்வடிப் படைக் காரணங்களுக்குத் தொடர்பின்றி இருந்தாலும் கூட அவற் றிற்கு விரோத உணர்வு கொண்டிருந்தாலும் கூட) ஏற்றிக் கொண்டு பன்மையில் பேசுவது அன்றோ நாகரிகமான நடை; அதனை விட்டு விடணன் 'நினது கொற்றமும்' என்று இராவணனைத் தனிமைப் படுத்திப் பேசினான்!

இரண்டாவது, இராவணன் ஆலோசனை சபையைக் கூட்டி, பிறர் கருத்துக்களையும் கேட்டறிந்து பெரும்பான்மை யினரின் எண்ணத்தைத் திரட்டும் கொள்கை உள்ளவன்; என்றாலும், இறுதியில் தன்னிச்சையாக நடப்பவன் என்று அவனை யதேச்சாதிகாரி எனும் பாங்கில் அவனைச் சுட்டிக் காட்டுவது போலும் ஆகின்றது, வீடணன் 'நமது கொற்றமும்' என்னாது 'நின் கொற்றமும்' என்று கூறியது!

மற்றும், அவன், இராவணனை,

''எம் பெரும!'' (978 / 85) எனப் பெருமையாக விளித்தாலும், ''உன் பகைஞரானவரை'' (978 / 85) என்று சுட்டுகின்றான்! ஏன் ''நம் பகைஞரானவரை'' என்று கூறக் கூடாது? அப்படிக் கூறினால் நாட்டின் நன்மையிலும் தீமையிலும் தனக்கும் பங்கு உண்டு என்ப தனையும் வீடணன் உணர்ந்திருந்ததாக எடுத்துக் காட்டி நிற்காதோ! முன்பின் அறிமுகமில்லாத, தன் இனத்திற்கும் மாறுபட்ட ஒரு குரங்கினிடமே ஒரு மனிதன்— சக்கர வர்த்தித் திருமகன்— இராமன்,

''உன் தனக்கு உரிய இன்ப
துன்பங்கள் உள்ள, முன்நாள்
சென்றன போக, மேல்வந்து
உறுவன நிர்ப்பல்; அன்ன
நின்றன, எனக்கும் நிற்கும்
நேர் என'' (606 /26)

மொழிந்ததோடு அல்லாமல்,

''மற்று இனி உரைப்பது என்னே?
வானிடை, மண்ணில், நின்னைச்
செற்றவர் என்னைச் செற்றார்;
தீயரே எனினும், உன்னோடு
உற்றவர் எனக்கும் உற்றார்;
உன் கிளை எனது; என் காதல்
சுற்றம், உன் சுற்றம்; நீ என்
இன் உயிர்த் துணைவன்'' என்றான் (606 / 27)

அந்தஅளவில் தன்னொடு இணைந்தவனை அணைத்துக் கொள்ளும் பாங்குடைய இராமனின் பெருமைகளை உணர்ந் தவன் — இராவணனுக்கும் உணர்த்திப் பேசுபவன்— தன்னை அணைத்துக் கொண்டிருக்கும் தமையனை இணைத்துக் கொண்டு பேசத் தெரியாதவனா? அந்த அளவிற்கு அவன் உள்ளம் பண்பட்டது இல்லையா?

ஆக, தன்னையும் தன் தமையனையும் இரு பிரிவினர் ஆக பேசத் தொடங்கியவனே வீடணன்தான்! அதே முறையில் இராவணனும் விடணனைத் தனிமைப் படுத்தி பேசலாயினான்!

ஆனால், 'விடணன் துரோகியல்ல' என்று வாதிடு பவர்கள், அவன் இராவணனிடம் தன்னையும் உள்ளிட்டுப் பன்மையிலும் பேசியுள்ளான் எனக் காட்டக் கூடும். அதனையும் ஆய்ந்து பார்த்து விடுவோம்!

''நினைவு அருந்தகையர்; நம் வினையினால்
மனிதர் ஆய், எளிது நின்றார்'' (978 / 85)

என இராம இலக்குவரை, இராவணனிடம் குறிப்பிட்டான்.

வீடணன், 'வினை' எனக் குறிப்பிட்டது 'ஊழ்' என்ற பொருளதாய்த் தோன்றினாலும், அச் சொல் ஈண்டு இரு பொருள் கூட்டி நிற்கக் காண முடிகின்றது!

'நான் செய்த புண்ணியம் ஆகிய வினை மனிதராய் இவ்விரு அவதாரங்கள் வந்துள்ளன' என்று வீடணன் மனப் பக்குவத்திற்கு ஏற்ப நிற்பது ஒன்று;

'நீ இயற்றியுள்ள தீச் செயலாகிய மாற்றான் மனைவியைக் கவர்ந்து வந்துள்ள வினையால் தங்கள் பெண்ணை மீட்டுச் செல்லும் மானமுடைய மனிதர்களாய் அவ்விருவர் வந்துள்ளனர்' என இராவணனின் செய்கைப் பாதகத்திற்கு ஏற்ப நிற்பது மற்றொன்று.

எனவே, 'நான் செய்த நல்வினை, நீ செய்த தீ வினை' என்று சொல்ல வேண்டிய வீடணன் 'நம் வினை' எனப் பன்மையில் புகன்றான் எனக் காண்டல் வேண்டும்.

இனி, 'நம்முடைச் சிலைகள் போல் நலிவ ஆமோ?''
(979 / 89)

என்கின்றான்?

இராவணனும் போர் வீரர்களும் மட்டுமா வில்லேந்தி யுள்ளனர்! வீடணனிடத்தும் அரச மரியாதையாகவாவது வில் இருக்கத் தானே செய்யும். அதனால் தன்னுள்ளிட்ட அனைவரும் கொண்டுள்ள விற்கள் என்பதைச் சுட்டிக் காட்டும் பொழுது அதிலும் அவ்விற்களின் அழி தன்மையை எடுத்து இயம்பும் பொழுது—'நாம்' என்று பன்மையில் தானே காட்டியாக வேண்டும்! ''உங்கள் சிலைகள் போல் நலிவ ஆமோ?'' என்று கேட்டல் சரியலவே!

''பேர் சனகி ஆம் நெடியது ஆய
நஞ்சு தின்றனர்கள் தாம் நண்ணுவார்
நரகம் என்று எண்ணி, நம்மை
அஞ்சுகின்றலர்கள்—நின் அருள் அலால்
சரண் இலா அமரர் அம்மா!'' (979 / 92)

என்கின்றான், விடணன்.

உண்மை நிலை அது, நாட்டின் சக்கரவர்த்தியாய் நிற்பவனைக் கண்டு அஞ்சாதவர்கள் அவனுடைய உற்றார் உறவினரைக் கண்டு மட்டும் அஞ்சுவரோ? அதனால், அமரரின் அஞ்சாமையைக் கற்பனை செய்யும் விடணன் தன்னிடத்தும் அவர்கள் அஞ்சப் போவதில்லை என்று எண்ணுவது மனோ இயல் முறைப்படி சரியேயாகும்! ஆக, அவன் தன்னையும் தமையனோடு சேர்த்துக் கொண்டு 'நம்மைக் கண்டு தேவர்கள் அச்சம் இலராகின்றனர்' எனப் பன்மையில் பேசியதில் வியப்பில்லை. அதனால் அவன் தன் அண்ணனைத் தனித்துப் பேசவில்லை என்று கொள்ள முடியாது!

விடணன் தான் கண்ட தீய நிமித்தக் கனவு பற்றி இராவணனிடம் எடுத்துக் கூறுகின்றான்.

,,சொலத் தகாத் துன்னிமித்தங்கள்
எங்கணும் வரத் தொடர்வ; ஒன்னார
வெலத் தகா அமரரும் அவுணரும்,
செருவில் விட்டன விடாத
குலத்த கால் வய நெடுங் குதிரையும்,
அதிர் குரல், குன்றும், இன்று
வலத்த கால் முந்துறந் தந்து, நம்
மனையிடைப் புகுவ மன்னோ'' (980 / 95)

என்றும்,

''வாயினும் பல்லினும் புனல் வறந்து
உலறினார், நிருதர்; வைகும்

பேயினும் பெரிய பேம் நரிகளும்
புரிதரும்; பிறவும் எண்ணின்,
கோயிலும் நகரமும், மடநலார்
குழலும், நம் குஞ்சியோடும்,
தியின் வெந்திடுமலால் ஒரு
நிமித்தம் பெறும் திறனும் உண்டோ? (980 / 96)

என்றும் கூறும் பொழுது, 'நம் மனை', 'நம் குஞ்சி' எனப் பகர்கின்றானே! ஆம், மிருகங்களுக்கும், அஃறிணைப் பொருட்கும் வேற்றுமை தெரியாது என்ற அடிப்படையில் அவ்வாறு பொதுவாகத் தான் சொல்ல வேண்டிய கட்டாயம் ஏற்படுகின்றது!

இறுதியாக, வீடணன் தன்னையும் இணைத்துக் கொண்டு சொல்லும் செய்தி,

''இன்னம் ஒன்று உரை செய்தால்;
இனிது கேள், எம்பிரான்! இருவர் ஆய
அன்னவர் தம்மொடும் வானரத்
தலைவராய் அணுகி நின்றார்,
மன்னும் நம் பகைஞர் ஆம்
வானுளோர்; அவரொடும் மாறுகோடல்
கன்மம் அன்று; இது நமக்கு உறுதி
என்று உணர்தலும், கருமம் அன்றால்'' (981 / 98)

என்பதாகும்.

உண்மை! தேவர்கள் அனைவருமே இராவணனால் அடக்கி ஆளப் பெற்றவர்கள்; அவர்களோ, இராவணன் மீது பெரும் காழ்ப்புணர்ச்சி கொண்டனரேனும் இலங்கை யினர் எவரையுமே தமக்குச் சாதகமானவராகக் கருதவு மில்லை;ஏற்றுக் கொள்ளவுமில்லை. எனவே, வீடணனையும் அவர்கள் விரும்பியதாகக் காட்டிக்கொள்ளவே இல்லை. அதனால் தேவர் அனைவரும், இலங்கையர் அனைவர்க்கும் 'பகைஞர்' என்ற பாங்கில் பார்த்தோமானால்வீடணனுக்கும் அவர்கள் விரோதிகளே! ஆக, வீடணன் தேவர்களின்

விரோத போக்கைக் கொண்டு ''நம் பகைவர் எனக்கூறியதில் வியப்பில்லை; தமையனைத் தழுவப்பேசியதாகவும் இல்லை.

இவ்வாறெல்லாம் பேசிச் சென்ற விடணன், முடிவாக இராவணனிடம்,

''இசையும் செல்வமும் உயர் குலத்து
இயற்கையும் எஞ்ச,
வசையும் கீழ்மையும் மீக்கொள, கிளையொடும்
முடியாது,
அசைவு இல் கற்பின் அவ் அணங்கை விட்டருளுதி;
இதன் மேல்
விசையம் இல்'' எனச் சொல்லினன். (981 / 99)

இந்தப் பாடலில், 'நீ', 'நான்' என்று வேறுபாடு இல்லை. அதனால் சிலர் இப்பாடலுக்குப் பொருள் உயர் குலத்துப் பெருமையும் தாழும்படியாகவும், இகழ்ச்சி அழிந்து போகாமல் 'என்றோ' நின் புகழும் பொருளும், நம் உயர்ந்த குலத்துப் பெருமையும் தாழும்படியாகவும், இகழ்ச்சியும், சிறியோரின் பண்பும் மிகுந்து நீ சுற்றத்துடன் அழிந்து போகாமல்' என்றோ சுட்டிப் பேசுவர்—

முதலாவது முழுதும் பொருந்தாது; பின்னதில் மூன்றாவதாக வரும் 'நீ' மட்டும் பொருந்தும்; எப்படி? இதனைச் சரியாகப் புரிந்து கொள்வதற்காகத்தான், கவிச் சக்கரவர்த்தி தம் கூற்றாக வீடணனுக்கு, 'அறிஞரின் மிக்கான்' என்ற பட்டப் பெயரை இதே பாடலின் இறுதியில் அமைத்துள்ளார் என்பதனைக் கூர்ந்து நோக்குதல் வேண்டும்!

பின்னாளில் கும்பகருணன் வீடணனைப் பார்த்து,

''கவிஞரின் அறிவு மிக்காய்'' (1160 / 31) என்றும்,

''நீதியும், தருமம் நின்ற நிலைமையும், புலமை தானும்,
ஆதி அம் கடவுளாலே அருந்தவம் ஆற்றிப் பெற்றாய்!''
(1161 / 135)

என்றும்

''யாரும் தொழ நிற்பாய்'' (1165 / 164)

என்றும் கூறுவான்!

ஏன்? இதற்கு முன்னமேயே வீடணன் இராமனிடம் அடைக்கலம் புகும் முன்னர் அவனைக் கண்ட அனுமன் என்ன கூறினான்?

''நிந்தனை நறவமும், நெறி இல் ஊன்களும்,
தந்தன கண்டிலேன்; தரும தானமும்,
வந்தனை நீதியும், பிறவும் மாண்பு அமைந்து,
அந்தணர் மனை எனப் பொலிந்ததாம் அரோ''
(1024 / 97)

என்று புகழ்ந்தானே!

ஆக, இலங்கை வேந்தனாய் இராவணன் பிறரால் தூற்றப்பட்டாலும், அவனுடைய இளவலான வீடணன் மட்டும் ஆதி முதலே இசை படப் பொருளோடு வாழ்ந்திருந்தான், என்றாகின்றது! அதனால், வீழ்ந்து அழியும் படியான இசையும் பொருளும் இராவணனிடம் இல்லை என்றாகின்றது! அப்படியானால் வீடணன் குறிப்பிட்ட இசையும் பொருளும் தன்னதேயாகும். இங்கு இனியும் ஒன்றைச் சிந்திக்க வேண்டும். காலமெல்லாம் உண்டு உடுத்து உறங்கிக் கிடந்தவன் கும்பகருணன். அவன் இசையும் பொருளும் பெறவில்லை—வசையும் வறுமையும் பெறவில்லை. எனவே,

''(என்) இசையும் செல்வமும் எஞ்ச'' என அமைகின்றது.

அடுத்து, 'உயர்குலம்' ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகளாய்ப் பிறந்ததனால் வீடணன், இராவணனைப் பார்த்து,

'உன், உயர்குலம்' என்று உரைத்தல் ஏற்புடைத்து அன்று.

'நம் உயர் குலம்' என்பது தான் அங்குப் பொருந்தும்?

இனி, 'கிளை'! இருவர் குலமும் ஒன்று என்பதனால் 'நம் குலம்' என ஆய்ந்த நாம் 'கிளைஞர்' என்பார் இருவர்க்கும் ஒன்றாய்த் தான் பொருந்துவர் என்ற அடிப் படையில், 'நம் கிளைஞர்' என்று தான் கொள்ளத் தோன்றும்! ஆனால் வீடணன் கருதியது அஃதன்று. 'நின் எண்ணங்களுக்கு ஏற்ப, இச்சைகளுக்கு இசைய அறமலா நெறியில் செல்பவர்கள் எல்லாம் என் கிளைஞர் ஆகார்; உன் வரையில் அவர்களின் உறவை வைத்துக் கொள்' என்று சொல்லாமல் சொல்பவன் வீடணன்! இதனைச் சற்று விரிவாய்க் காண்போம்.

கும்பகருணன் யார் என இராமனிடம் கூற வந்த வீடணன், 'அவன் என் அண்ணன் இராவணனுக்கும் இளை யோன்; எனக்கும் மூத்தோன்' என்று சொல்லியிருந்தால் தங்கள் உறவின் முறையைச் சீராகக் கூறியதாகும். அதனை விட்டு, இராவணனுடைய நிலையை மன்னவன் எனக் காட்டி,

''பேர் இயல் இலங்கை வேந்தன் பின்னவன்'' (1158 / 114) என்கின்றான்! ஏன்? தன் நெறிமுறைக்கு ஒவ்வாத தமையனையும் உறவல்லவெனத் துறந்து விட்டான்!

ஆனால், மேலும் சொல்லும் பொழுது,

''ஆழியாய்! இவன் ஆகுவான்;
ஏழை வாழ்வுடை எம்முனோன்;
தாழ்வு இலா ஒரு தம்பியோன்;
ஊழி நாளும் உறங்குவான்'' (1158 / 116)

என்கின்றான்.

இப்பாடலில் இரண்டாம் வரிக்கு, 'எளிமை வாழ் வுடைய என் பெரியோனான இராவணன்' என்று பொருள் கொண்டு அவனுக்கு அமைந்த தாழ்ச்சி ஏதும் பெறாத தம்பி (கும்பகருணன்) என்பாருமுளர். அது பொருந்தாது!

'ஏழை வாழ்வு' என்றால் எளிமையான வாழ்வு தான். ஆனால், அத்தகைய எளிய வாழ்வையா கொண்டிருந்தான் இராவணன்? அவன் வாழ்ந்த பெருமையும், பெருமிதமும் வர்ணிக்கப் போனால் ஒரு பெரு நூலாக அமையுமே! ஆனால், அவன் காமவயத்தனாய்ச் சீதையை அபகரித்து வந்த ஒரு காரணம் கொண்டு அவன் வாழ்வு எளிமைப் பட்டது என்று கூறுதல் அச் சொல்லாட்சிக்கு முழுமை தராது!

''பிறந்தோம்; வளர்ந்தோம்; உண்டோம்; உறங் கினோம்; காலம் முடிய இறப்போம்'' என்ற நிலையில் ஒரு சிறப்புக் குறிக்கோளும் இன்றி வாழும் வாழ்க்கையே எளிய—எளிமைப்பட்ட—வாழ்வாகும். அவ்வாறு வாழ்ந்தவன், கும்பகருணன். அவனோ,

ஆறு நூறு சகடத்து அடிசிலும்,
நூறு நூறு குடம் களும் நுங்கி
ஏறுகின்ற பசியை எழுப்பிக் கொள்பவன் (1150 / 60)

''ஊழி நாளும் உறங்குவான்'' (1158 / 116)

அதனால் அவனை எழுப்ப வந்தவர்கள், அடுத்த காரியமாக இறக்கப் போகின்றவன் என்று எண்ணி,

''உறங்குகின்ற கும்ப கன்ன! உங்கள் மாய வாழ்வு எலாம்
இறங்குகின்றது! இன்று காண்; எழுந்திராய்! எழுந்திராய்!
கறங்கு போல வில் பிடித்த காலதூதர் கையிலே,
உறங்குவாய், உறங்குவாய்! இனிக் கிடந்து உறங்குவாய்!''

என எழுப்பப்படுகின்றான்! (1148 / 45)

ஆக, கும்பகருணன் அன்றோ எளிய வாழ்வு உடைய விடணனின் முன்னோன்! அப்படியானால்,

''தாழ்வு இலா ஒரு தம்பியோன்''

என்பது யாரைக் குறிக்கும் என்ற வினா தோன்றத் தான் செய்யும்!

'நின் சரண் அடைந்து விட்டதால் தாழ்ச்சி என்பதே இல்லாத என்னை ஒரே தம்பியாகப் பெற்றவன், அவன் (கும்பகருணன்)' என அவ்வரி வீடணன் தன்னையே குறித்து நிற்கும்!

நிற்க,

வீடணன், நெறியலா நெறி செல்வார் உறவையும் துறப்பவன் என்பதைக் கும்பகருணன் உறுதியாக நம்பி யவன். அதனால் தான் வீடணன் போர் முனையில் தன்னைக் காண வந்த பொழுது,

''பிறர் மனை நோக்கு உறவு எனப் பெறுதி போலாம்?''

என ஐயுற்றது போல் வினவுகின்றான். (1161 / 134)

வீடணன், கும்பகருணனிடத்தில் வெளிப்படையாகவே கூறுகின்றானே!

''தீயவை செய்வர் ஆகின், சிறந்தவர், பிறந்த உற்றார்,
தாய் அவை, தந்தைமார் என்று உணர்வரோ தருமம்
பார்ப்பார்? (1162)

என்று எடுத்துரைத்ததனால் அவன் தன் உறவுகளையும் துண்டித்துக் கொள்ளும் தன்மையன் என்றாகின்றது.

கும்பகருணன் இறந்த பொழுதுகூட வீடணன் துக்கித்ததாகவோ அழுததாகவோ தெரியவில்லை! உண் மையில், சுக்கிரீவன் தூண்ட, இராமன் அன்புக் கட்டளை யிட, வீடணன் போர்க்களத்தில் கும்பகருணனைப் பார்க்கச் சென்றானேயன்றி அவனாக அண்ணன் உறவால் உந்தப் பெற்றுச் செல்லவில்லை. எவ்வளவு தான் உறவி னருக்குள் வேற்றுமை உணர்வு இருந்தாலும்,

ஒருவருக்கொருவர் விரோதத்துடன் இருந்தாலும் அவர்கள் நேருக்கு நேர் சந்திக்க நேர்ந்து விட்டால் அந்த இரத்த பாசத்தின் உந்துதல் ஒருவரை ஒருவர் அணைத்துக் கொள்ளும் உளவியல் உண்மையின் அடிப்படையினால்தான் விடணன் கும்பகருணனுடன் பேசினான்!

அதே போலத்தான் இராவணன் இறந்து கிடந்த பொழுதும்! இராமன், உண்மை உணராது இராவணனைச் சற்று ஏளனமாகப் பேசக் கேட்டு கிடந்த தன் தமையனை நேரில் கண்டு விட்டதால் வீடணன் கண்ணீர் விட்டுக் கதறினான்!

ஆக, 'கிளையோடும்,' 'என்பது' 'நின் கிளையோடும்' என்று தான் பொருள் படும்! அதாவது 'நின்னைச் சார்ந்தவரொடு நீயும் இறவாது' என நிற்கின்றது.

இதனை மீண்டும் வீடணன்,

''புத்திரர் குருக்கள் நின் பொரு இல் கேண்மையர்''
(1012/11)

என்று சுட்டிக் காட்டுவான்

இவ்வாறு தன்னை இலங்கையருடன் ஒருவனாக்கி விடாமல் ஒதுங்கிக் கொண்டு, 'நீ நான்' என்ற வேறுபாட்டுடன் முதலில் பேசியவன் 'வீடணன்'. அதைப் பின்பற்றியே இராவணனும் 'என் கிளை என் களம்' என்று வீடணனை ஒதுக்கிப் பேசினான் எனத் தெளிகின்றோம்!

இராவணன் தொடர்ந்து பேசும் பொழுது,

''தேவரின் பெற்ற வரத்தினது என் பெருஞ் செருக்கேல்''
(982/105)

என்கிறான். ஆம்; தான் பெற்றுள்ள தனி வலிமை தன்னதேயாகுமன்றிப் பொதுமை ஆகாது என்ற காரணத்தால் அவ்வாறு 'என்' என்றான்.

ஆயின், வாலி யென்னும் குரங்கு தன் வலிமையைக் காட்டியது இராவணன் பால் மட்டும் என்றாலும், அதனை வீடணன் உட்பட அனைவரும் கண்டனர். எனவே, வீடணன் இராவணனிடத்து,

''நந்தி சாபத்தின் நமை அடும் குரங்கு'' (982/106)

எனப் பொதுமையாகக் கூறியுள்ளான் எனத் தெரிகின்றது. அதே, பொதுமை நிலையில் இராவணனும் வீடணனிடம்,

''.......................................நம்பால்
வந்த சாபங்கள் எனைப் பல; அவை செய்த வலி என்?
இந்திராதியர், சித்தர்கள், இயக்கர், நம் இறுதி
சிந்தியாதவர் யார்? அவை நம்மை என் செய்த?''
(982/106)

எனக் கேட்டான்.

தொடர்ந்து அந் நிகழ்ச்சி பற்றிக் குறிப்பிடும் பொழுது இராவணன், வாலியும் இராவணனும் நேருக்கு நேர் பொருத தனால்—பிறர்க்கு இதனில் பங்கு இல்லை என்பதனால்—தன்னை மட்டும் உட்படுத்தி வீடணனிடம்,

அரங்கில் ஆடுவார்க்கு அன்பு
பூண்டுடைவரம் அறியேன்;
இரங்கியான் நிற்ப, என் வலி அவன் வயின் எய்த
வரம் கொள் வாலிபால் தோற்றனென்;
மற்றும் வேறு உள்ள
குரங்கு எலாம் எனை வெல்லும் என்று
எங்ஙனம் கோடி? (982 / 107)

எனவும் கேட்டான்.

தொடர்ந்து பேசிச் சென்ற பொழுது, இராவணன்,

''நன்று, போதும் நாம்; எழுக!'' (983 / 110)

என்றும்,

''..................................நாம் தின்னும்
ஒயும் மானுட உருவு கொண்டனன் கொலாம்—
உரவோன்?'' (983 / 115)

என்றும்,

''வெஞ்சினம் தரு போரின் எம்முடன்
எழ வேண்டா'' (984 / 117)

என்றும் கூறியவை, அரசப் பெருமிதத்தால் வந்த பன்மைச் சொல் ஆகும். (Royal 'we')

இதே, பெருமித நிலை இராவணன் பேச்சு முழுதிலும் வராமல், ஒரோ இடத்தில் 'நான்' என்ற பாகுபாட்டோடு ஏன் வந்தது என்றால், உரையாடல் காட்சிகளில், இவ்வாறு மாறி மாறி வரும் என்னும் இலக்கணத்தைக் காட்டவே அங்ஙன் கவிச்சக்கரவர்த்தி அமைத்துள்ளார் என்பதாகும். அதற்கும், ஓர் அடிப்படைக் காரணம் உண்டு! அது தான் பேசுவோரின் உணர்ச்சி வேகத்தால் நிகழும் சொல் மாற்றம்! என்றாலும், அத்தடுமாற்றத்தைக் கவிச்சக்கரவர்த்தி ஏற்புற, தக்க இடங்களிலேயே அமைத்துள்ளார் என் பதையும் கூர்ந்து நோக்கி இன்பம் எய்தப் பெறுகின்றோம்!

இறுதியாக ஒன்றினை நோக்குவோம்.

விடணன்,

''தன்னின் முன்னிய பொருள் இலா ஒரு தனித்
தலைவன்,
அன்ன மானுடன் ஆகி வந்து, அவதரித்து
அமைந்தான்,
சொன்ன நம் பொருட்டு, உம்பாதம் சூழ்ச்சியின்
துணிவால்;
இன்னம் ஏகுதி போலும் என்று அடி தொழுது
இரந்தான்'' (983 / 111)

எனக் காண்கின்றோம்.

இப்பாடலில் அவன் கையாண்ட 'நம்' என்பதின் நோக்கு என்ன? பெருமிதப் பன்மையா-அனைவரையும் இணைத்துக் கொண்ட பான்மையா?

வீடணனைப் பொறுத்த வரை,

''அறவினை இறையும் இல்லா, அறிவு இலா,
அரக்கன் என்னும்,
பிறவியின் பெயர்ந்தேன்; பின்னும், நரகினின்
பிழைப்பதானேன்'' (1029 / 126)

என்று அவனே சொல்லிக் கொண்ட வகையில் அரக்கரினின்றும் மறு பிறப்பு எடுத்து விட்டான்.

கும்பகருணன், இறுதியில் இராமனிடமே ஒரு வரம் கேட்டான்; இராமனும் அவ்வரம் அளித்து அவனை அழித்தான்.

இராவணன் இறுதியில் இ ர ா ம ன் யாரெனத் தெளிந்தான்.

''சிவனோ? அல்லன்; நான்முகன் அல்லன்; திருமாலாம்
அவனோ? அல்லன்; மெய் வரம் எல்லாம் அடுகின்றான்;
தவனோ என்னின் செய்து முடிக்கும் தரன் அல்லன்;
இவனோ தான் அவ்வேத முதல் காரணன் என்றான்''
(1522 / 134)

இறுதியில், அவன்

''மும் மடங்கு பொலிந்தன, அம் முறை துறந்தான்
உயிர் துறந்த முகங்கள் அம்மா (1532 / 194)

என்னும் அளவிற்குப் பெருமை பட இராமன் கைகளால் மடிந்தான்.

ஆக, வீடணன் 'நம் பொருட்டு' என்றது இராமனால் மூவருமே பயனுறப் போகின்றனர் என்னும் கருத்துப்படவே வந்தது! தன் தமையன்மார் இருவரும் மடிய தான் மட்டும் அரச பெரும் பதவி அடைய இருக்கும் பொழுது அவன் எங்ஙன் தமையன்மாரைத் தள்ளி வைப்பான்?

# 7. என் பிழை

இராவணனுடைய மந்திராலோசனை மண்டபத்தே வீடணன், தன் கருத்துக்களை வெளியிட்டான். சீதையை விட்டு விடுதலே சிரியது என்றான். இன்றேல் இராமன் அரக்கர் அனைவரையும் அழித்தே திருவான் என்றும் எச்சரித்தான். ஆனால் இராவணன் தன் பிடிவாதத் தினின்று மாற வில்லை.

வீடணன், பிரகலாதன் சரிதத்தைக் கூறினான். நாரண னுடைய வலிமையைக் கூறினான். அதே நாரணன் இப் பொழுது இராமனாய் அவதாரம் செய்துள்ளான் என்றும் திமைகளை ஒழிப்பதில் அவன் மாற மாட்டான் என்றும் விளக்கினான். அப்பொழுதும் இராவணன் அவனுடைய அறிவுரைகளை ஏற்றுக் கொள்ளவில்லை. அவனைச் சினந்து பேசினான்.

பற்பல சொல்லியும் மனம் மாறாத தமையனை விட்டு நீங்க வீடணன் முடிவு கொண்டான். அப்பொழுது,

''அத்த! என் பிழை பொறுத்தருளுவாய்''

(1012 / 12)

என்றான்!

வீடணன் மந்திராலோசனை மண்டபத்திற்கு வந்தது பிழையா? அறவுரைகளை செப்பியது பிழையா? அறிவுரை கள் புகன்றது பிழையா? தமையனோடு ஒத்துழையாமை எண்ணத்தை ஏற்றது பிழையா? இவற்றில் ஒன்றிலுமே நாம் பிழை காண இயல வில்லையே! அப்படியிருக்க வீடணன்

தானே தமையனிடம் தன் பிழையைப் பொறுத்துக் கொள்ளுமாறு ஏன் கேட்டுக் கொண்டான்?

துவக்கத்திலேயே, இந்திரசித்து பேசிய பேச்சுக்கள் முறையற்றவை என வீடணன் கடிந்துரைத்தான். இராம இலக்குவர் எப்படிப்பட்ட வீரர்கள் என்பதை விளக்கி அரக்கரை அவர்கள் அழித்து விடுவர் என உறுதியாகக் கூறினான்.

அவையனைத்தையும் கேட்ட பின்னரும், இராவணன், ஒவ்வொரு கருத்திற்கும் மாறுபாடான தன் எண்ணத்தை எடுத்தியம்பினான். இறுதியில் இளவலை ஏளனம் செய்து, அவன் அச்சம் கொண்டுள்ளான் என நகைத்தான். மேலும்,

''வெஞ் சினம் தரு போரின் எம்முடன்
எழ வேண்டா;
இஞ்சி மா நகர் இடம் உடைத்து,
ஈண்டு இனிது இருத்தி;
அஞ்சல்! அஞ்சல்! என்று அருகு
இருந்தவர் முகம் நோக்கி,
நஞ்சின் வெய்யவன் கை எறிந்து, உரும் என நக்கான்''
(984 / 117)

எனக் கம்பர் படம் பிடிக்கின்றார்.

இதன் பின்னர் தான், வீடணன், இரணியன் வதை பற்றி இயம்புகின்றான். எதுவும் பயன்பட வில்லை. இராவணன் மனம் மாற வில்லை; பிடிவாதம் தளரவில்லை. வீடணனைக் கண்டவாறு ஏசினான். பேசினான். இறுதியாக,

''பழியினை உணர்ந்து, யான் படுக்கிலேன் உனை;
ஒழி, சில புகலுதல்; ஒல்லை நீங்குதி;
விழி எதிர் நிற்றியேல் விளி'' (1012 / 8)

என்று சினத்தோடு செப்பினான்!

அண்ணன் அவ்வாறு அச்சுறுத்தும் பொழுது, அகலாமல் அங்கேயே நின்றிருத்தல் ஆபத்தானது அல்லவா? ஆக, வீடணன், தமையனின் பிடிக்கு அகப்படாத வண்ணம் வானில் தாவி நின்றான்! அது அவன் பிழையா? அவ்வாறு வானில் எழுந்து,

''நின்றவன்; பின்னரும், நீதி சான்றன,
ஒன்று அல பலப்பல, உறுதி ஓதினான்''

(1012 / 9)

எனவே, அதுவும் பிழை யல்ல! இறுதியில்,

''எத்துணை வகையினும் உறுதி எய்தின,
''ஒத்தன, உணர்த்தினேன்; உணரகிற்றிலை''

(1012 / 12)

என்று கூறி அவ்விடம் விட்டு நீங்க முடிவு செய்தான்; அதுவும் பிழையல்ல. ஆனால், ஏற்கனவே, 'இந்த இலங்கை மா நகரம் விசாலமான இடம் கொண்டது; நீ அஞ்சாமல் இங்கோர் மூலையில் கிட; எங்களுடன் போருக்கு வர வேண்டியது இல்லை என்று நீ கூறியிருந்தாலும், நான் இந்த நகரையே விட்டு நீங்குகின்றேன்: அது தேவையற்ற ஒரு செய்கை தான்; ஆக, அந்தப் பிழையை— நகரையே விட்டு நீங்கும் பிழையை—நீ மன்னிப்பாயாக' என்று வீடணன் இராவணனிடம் எடுத்துரைத்தது போலாகும் இக் கூற்று.

இராவணன் முன்னமேயே வீடணனிடம்,

''நண்ணின் மனிதர் பால் நண்பு பூண்டனை;
எண்ணினை செய்வினை; என்னை வெல்லுமாறு
உன்னினை; அரசின் மேல் ஆசை ஊன்றினை
திண்ணிது உன் செயல்; பிறர் வெறுநர் வேண்டுமோ?''

(1012 / 6)

என்று சினந்து கூறினான் அல்லவா? அதன் ஒவ்வொரு அம்சத்தையும் மெய்ப்பிக்கப் போகின்றான் வீடணன் என்ப

தனைக் கவிச் சக்கரவர்த்தி கூறாமல் கூறுவதற்கு அமைத்த வாசகமே இது என்பதில் ஐயமில்லை!

அங்கிருந்து, அனலன், அனிலன், அரன், சம்பாதி ஆகிய நால்வருடன் புறப்பட்டு எங்கே சென்றான்? நகர்ப் புறத்தே ஒதுங்கினானா? இல்லையே! நேராக இராமன் பால் அடைக் கலம் புக—நன்னின மனிதர் பால் நண்பு பூண—அன்றோ சென்றான்! அதனால்தான் எண்ணிய வகையிலேயே வினை செய்து விட்டான்!

போரின் ஒவ்வொரு கட்டத்திலும் இராவணனின் ஆட்களை, இராவணனை எவ்வாறு அம்பெய்து வீழ்த்தி னால் அவர்கள் இறப்பார்கள் என்று தக்க வழிவகைகளைத் தக்க சமயத்தில் தக்க முறையில் எடுத்தோதி இராவணன் படுதோல்வியடைய இராமனுக்கு உதவியாக நின்றவன் வீடணன். அதனைப் போற்றி இராமனே, இந்திரசித்து வதைப்பட்டு வீழ்ந்த கட்டத்தில்,

''ஆடவர் திலக! நின்னால் அன்று; இகல்
அனுமன் என்னும்
சேடனால் அன்று; வேறு ஓர் தெய்வத்தின்
சிறப்பு அன்று;
வீடணன் தந்த வென்றி, ஈது'' (1427 / 70)

என்று கூறுவான்! இந்த முறையில் இராவணன், 'எனக்கு வேறு பகைஞரும் வேண்டுமோ?' என்று ஏளனமாய்க் கேட்டதையும் வீடணன் உண்மையாக்கி விட்டான்!

இராமனிடத்தில் வீடணன் அடைக்கலம் நாடிச் சென்ற பொழுதே,

''கருத்து உற நோக்கிப் போந்த காலமும்
நன்று; காதல்
அருத்தியும் அரசின் மேற்றே'' (1026 / 104)

எனக் கருதப்படுகின்றான்! அக்கருத்து தவறு என்று வீடணன் நிலை நிறுத்த முயலவில்லை!

வீடணனுக்கு முடிசூட்ட இலக்குவனை இராமன் பணித்தபொழுது, வீடணன் பரதனுக்குப் போலே தனக்கும் திருவடி சூட்டும்படி வேண்டினானேயன்றி, அந்தக் கட்டத்தில் தனக்கு ஏதும் மரியாதை வேண்டா என்று சொன்னானில்லை!

ஆக, தன் தமையனுக்கு எதிராக வீடணன் இத்துணை சூழ்ச்சிகளையும், வீழ்ச்சிகளையும் நிகழ்த்தப் போகின்றான் என்பதை அறிந்திருந்த கவிச்சக்கரவர்த்தி, அவன் வாயாலேயே முன்கூட்டி மன்னிப்புக் கோரும் சொற்களைப் பெய்துள்ளார் என அறிந்து வியக்காமல் வியக்கின்றோம்! வீடணனை நிந்திக்காமல் நிந்திக்கின்றோம்!

# 8. தானையைக் கண்ணின் நோக்கினான்!

வீடணன் தன் அமைச்சர் நால்வருடன் இலங்கையை விட்டு வான்வழிச் சென்றான். இராம இலக்குவராகிய மனிதர்கள் குரங்குக் கூட்டத்தோடு கடற்கரையில் வந்து தங்கியுள்ளனர் எனக் கேட்டிருந்ததனால் அவர்கள் இருக்கும் இடம் நாடி அக்கரைக்குச் சென்றனர்.

அவ்வாறு,

''அக்கரை கடந்து, மேல் அறிந்து, நம்பியும்,
விளக்கு ஒளி பரத்தலின் பாலின் வெண்கடல்
வளத் தடந் தாமரை மலர்ந்ததாம் என,
களப் பெருந் தானையைக் கண்ணின் நோக்கினான்''
(1013 / 15)

எனப் பாடுகின்றார் கம்பர்.

ஒரு சேனை தங்கியிருந்தது வீடணன் கண்களில்பட்டது என்பது உண்மை. அவ்வாறு, கண்களில்பட்டதைக் காணாது இருக்க இயலாது. இது இயற்கை. ஆனால் கவிச்சக்கரவர்த்தி,

'தானையைக் கண்டு நின்றான் (நின்றனன்)

என்றோ 'தானையைக் கண்டு வியந்தான் (வியந்தனன்) என்றோ எழுதியிருக்கலாமே! 'கண்ணின்' என்று இடல் வேண்டுமோ! கண்களால் காணாமல் எவ்வுறுப்பால் காண முடியும்! அதுவும் கண்டான் என்று எழுதாமல்,

'நோக்கினான்' என்று ஏன் எழுதினார்? 'நோக்குதல்' என்றால் கூர்ந்து கவனித்தல் என்ற பொருளாயிற்றே.

அந்த சேனையைப் பார்த்ததும் சிந்தை வேலை செய்வ தாயிற்று. 'முன்னை நினைவுகள் வந்தன', வீடணாற்கு.

அச் சேனையுள் ஒரு குரங்காகிய அனுமனின் காட்சி வீடணனுடைய நினைவிற்கு வந்தது. இந்திரசித்து இட்ட பிரம்மாத்திரத்துக்குக் கட்டுப்பட்ட அனுமன் இராவண னுடைய அவைக்குள் வெகு கம்பீரமாகச் சென்றான். அவனை இலங்கை வேந்தன் இராவணனுக்கு அறிமுகப் படுத்தும் பொழுது,

''... ... ... ... ... ... அரி உருவான ஆண்தகை,
சிவன் எனச் செங்கணான் எனச் செய் சேவகன்,
இவன்'' (915 / 67)

எனக் கூறி நின்றான்.

அனுமனால் இலங்கை மாநகரில் ஏற்பட்ட இடிபாடு களையும், அழிவுகளையும் அறிந்திருந்த இராவணன் நோக்கி 'யார் நீ?' என்று மட்டும்அவனை கேட்டிருக் கலாம். ஆனால் அவன் இவனிடம்,

''நேமியோ? குலிசியோ? நெடுங்கணிச்சியோ?,
தாமரைக் கிழவனோ? தறுகண் பல்தலைப்
பூமி தாங்கு ஒருவனோ! பொருது முற்றுவான்;
நாமமும் உருவமும் கரந்து நண்ணினாய்'' (916 / 70)

''நின்று இசைத்து உயிர் கவர் நீலக் காலனோ?
குன்று இசைத்து அயில் உற எறிந்த கொற்றனோ?
தென் திசைக்கிழவனோ? திசை நின்று ஆட்சியர்
என்று இசைக்கின்றாவர் யாருள், யாவன் நீ?''
(916 / 71)

''அந்தணர் வேள்வியின் ஆக்கி ஆணையின்
வந்துற விடுத்தது ஓர் வய வெம் பூதமோ?

முந்து ஒரு மலருளோன், 'இலங்கை முற்றுறச்,
சிந்து, எனத் திருத்திய தெறுகண் தெய்வமோ?''
(916 / 72)

என்றெல்லாம் வியப்புத் தோன்றக் கேட்டு, இறுதியில்,

'நீ யார்?' என வினவினான் என்றால் அந்த ஒரே குரங்கின் வல்லமையும் மாட்சியும் தெரிகின்றதன்றோ!

இந்த வினாவிற்கு விடையிறுத்த அனுமன்,

''நீ எதிர்பார்த்ததுபோல் நான் தேவனோ மற்றுவனோ இல்லை; திசையானை அல்ல; அட்டதிக்குப் பாலகர்களுள் ஒருவன் அல்ல; கைலை மலை அல்லன்; பிரம்மா, விஷ்ணு சிவன் ஆகிய மூவருள் ஒருவனும் அல்ல, முனிவர்களுள் ஒருவனும் அல்ல,

''மூலமும் நடுவும் ஈறும் இல்லது ஓர் மும்மைத்து ஆய
காலமும், கணக்கும், நீத்த காரணன்-கைவில் ஏந்தி,
சூலமும் திகிரி சங்கும், கரகமும்-துறந்து, தொல்லை.
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு-
அயோத்திவந்தான்''
(917 / 80)

அறம் தலை நிறுத்தி, வேதம் அருள் சுரந்து
அறைந்த நீதித்
திறர் தெரிந்து, உலகம் பூணச் செந்நெறி,
செலுத்தி, தீயோர்
இறந்து உகநாறி, தக்கோர் இடர் துடைத்து,
ஏக, ஈண்டுப்
பிறந்தனன்-தன் பொன்-பாதம் ஏத்துவார்
பிறப்பு அறுப்பான்'' (917 / 81)

''அன்னவற்றுகு அடிமை செய்வேன், நாமமும்
அனுமன் என்பேன்'' (917 / 82)

என்று சொல்லிய அடக்கம் வீடணனின் நினைவிற்கு வரவில்லை! ஒரு குரங்கின் நிலையே அது என்றால்,

அங்கிருந்த அப்பெரிய குரங்கு சேனை முழுமையின் வலிமையும் நிலையும் என்னே என்று வியந்தான்.

ஊழிக் காலத்திலேயும், தன்னுடைய நிலையிலிருந்து பெயர்ந்திடாத மாபெரும் மேரு மலையும், தண்ணீர் என்றும் வற்றிடாத கடலும், இப் பூ உலகும், வட புறத்தே வானைத் தொடும் வகை, எழும்பிட, தென் பகுதியில் உள்ள மலைகளும், பூமியும் தாழ்ந்து போகும் வண்ணம், விரிந்து தோன்றிய எழுபது வெள்ளம் சேனை ஆயிற்றே அச்சேனை! (963/51) அதனைக் கண்டு யார்தான் வியந்திட மாட்டார்! ஆக, வீடணன் அதனைக் கண்டு மலைத்து நின்றான்!

அது மட்டுமா! அனுமன் வாலில் இராவணனுடைய ஆணையால் இடப் பெற்ற தீ இலங்கை நகர் முழுவதையும் எரிக்கக் கண்ட இராவணன்,

''இன்று புன் தொழில் குரங்கு தன் வலியினால் இலங்கை
நின்று வெந்து, மாநீறு எழுகின்றது''

(932 / 46)

என ஏளனமாகக் கூறினானே அந்த இனம் இவ்வளவு கூட்டமாகக் கூடிச் செயலாற்றினால் இலங்கை என்ன ஆகும் என்று அதிர்ச்சி கலந்த வியப்புக் கொண்டான் வீடணன்!

இராவணன் அப்போது அங்கு அவ்வாறு கூறி மட்டும் நின்றானா? தன்னுடைய மந்திராலோசனை சபையில் எவ்வாறு எடுத்துரைத்தான்? அங்கு இருந்த பிறர் என்னென்ன கூறினர்? என்றெல்லாம் வீடணன் மனத் தகத்தே தோன்றியது!

'இலங்கை மாநகரின் பெருமை—அழகு, செல்வம், வலிமை அனைத்தும்—ஒரு குரங்கினால் அழிந்துபட்டது.

இதைவிடக்கேவலம் வேறு என்ன இருக்கின்றது?என்னுடைய அரசாட்சியும் அமைப்பும் நன்று!நன்று!' (967 / 11) என்றும்,

'ஒரு குரங்கு நகரைச் சுட்டது; இக்
'கொழுந்து விட்டெறிய நகரமே அழிந்துவிட்டது;
சுற்றத்தார் நண்பர்கள் பலர் வீழ்ந்து பட்டனர்:
அவமானம் விரிந்தது; அப்படியிருந்தும் என்னுடல்
இந்த சிம்மாசனத்தில் வீற்றிருக்கின்றதே!' (968/12)

என்றும், இராவணன் தன்னைத்தானே நொந்து கூறினான்.

மந்திராலோசனை சபையில் பேசிய அனைவருமே அனுமனைப் பற்றி குரங்கு எனச் சுட்டிக் காட்டி இழிவாகப் பேசாமல் இல்லை!

'நாம் சென்று பகைவரைக் கொன்று வீழ்த்தாமல் இலங்கையில் இருந்து இன்பம் துய்த்துக்கொண்டிருப் போமேயானால் நம்மை எதிர்த்து குரங்கு மட்டுமா வரும்! கொசுவும் கூட நம்மை எதிர்க்கத் துணியும்!' என்றான் படைத் தலைவன். அதாவது அனுமக் குரங்கைக் கொசு விற்கு இணையாக்கித் தாழ்வாகப் பேசினான்! (969 / 20)

மேலும், 'சென்று விட்ட அக்குரங்கைத் தொடர்ந்து போய் அதனை அனுப்பியவரின் உயிர் குடித்து மீள்வோம்' (969 / 21) என்றான். அவன் எண்ணியது போல் ஒரு குரங்கா இருந்தது? பல்லாயிரக்கணக்கானவை யன்றோ படையாய் திரண்டிருக்கின்றன என்று வீடணன் அயிர்த் தான்.

''மரக்கிளைகளில் வாழும் குரங்கின் தோள் வலிமைக்கு முன்னே உன்னுடைய தோள் வலிமையை எங்களுடைய வீரத்துடனேயே சேர்த்து இகழ்வாய் போலும் (969 / 25) என்றான் மகோதரன். மரக்கிளைகளில் வசிக்கும் சாதாரண குரங்கு என நினைத்து விட்டான், அனுமனை, மகோதரன்! இங்கு வந்துபார்த்தால் அல்லவா தெரியும், அவன் வாழும் வாழ்க்கை!'' என்று வீடணன் பெருமிதம் கொண்டான்.

அது மட்டுமா? மகோதரன், 'மன்னவனே! என்னை அனுமதிப்பாயேயானால் அக்குரங்கையும் அதன் கூட்டத்தையும் அழித்து, ஒழித்து, அவற்றை அனுப்பிய மனிதரைக் கொன்று வீழ்த்தி உன்னுடைய பகைவரைப் போக்கி வருவேன்' என்று கூறினான். 'அந்தோ பரிதாபம், இவன் பிடிக்குள் அகப்படும் அளவிற்கான சிறிய குரங்குக் கூட்டமா வந்துள்ளது?' என்று வீடணன் சிந்தித்தான்.

வச்சிரதத்தன், 'சென்று அந்த மனிதரையும், குரங்கையும் பூமியோடு பூமியாகத் தேய்த்துத் தள்ளுங்கள், கைகள் கொண்டு; தேய்க்கப் பெற்ற அவர்களைத் தின்று விடுங்கள் என்று எங்களை அனுப்பாமல் இன்னமும் என்ன யோசனை செய்கின்றீர்கள்?எங்களிடத்தில் ஐயம் தோன்றிவிட்டதோ?' (970 / 29) என்று கேட்டு நின்றான். 'ஐயமே இல்லை, அவன் வரின் அவனே பூமியோடு பூமியாகத் தேய்க்கப்படுவான்!' என்று வீடணன் உறுதியாய் இப்பொழுது நம்பினான்.

அட்டதிக்குப் பாலகர்களும் வலிமை குன்றிப் போயினர்! தேவர்களும் நலிந்தனர்; சிவபெருமானின் கயிலயங்கிரியும் ஒடுங்கியது! ஆனால் அந்த மனிதர்களும் குரங்கும் மட்டும் வல்லமை பெற்றுள்ளனர் என்றால் இராவணற்கு அமைந்த ஆற்றலை என்னென்பேம்! (970 / 32) என்று எள்ளி நகையாடிப் பேசினான் துன்முகன்.

மேலும், மனிதர்களும் குரங்குகளும் அரக்கர் உண்பதற்காகவே தோற்றுவிக்கப்பட்டவை. அத்தகைய உணவுப் பொருட்சே அஞ்சியிருப்போமேயானால் நம்மை விட வீரம் கொண்டவர் யாரோ! (971 / 34) என்று எக்களித்தான், ஏளனம் தொனிக்க!

'ஒரு குரங்கு நமது ஊராகிய இலங்கைக்கு வந்து, எரியூட்டி, எதிர்த்தவர் பலர் வீழ சண்டையிட்டுச் செல்லும் பொழுது, கடல் கடந்துசென்று அவர்களைத் தாக்கி வீழ்த்து

வது அரக்கர்களுக்கு இயலாத காரியமா?' எனவும் வினவி நின்றான்.

அவன் கூறிய வண்ணம் கடலைக் கடந்தாலும் இந்தக் குரங்குப் படைக் கடலை அரக்கரால் தாண்ட முடியுமோ? என வீடணன் அயிர்த்தான்.

மாபெரும் பக்கன் என்ற வீரன் எழுந்தான்; துன்முகன் பேசிக் கொண்டேயிருக்கக் கைகாட்டி அமர்வித்துப் பேசலாயினான்! ஒரு குரங்கின் செயலுக்காக நாம் ஆலோசனை நடத்திக்கொண்டிருப்போமேயானால் நமக்கு இனிமேல் என்ன பெருமை காத்துள்ளது! (971 / 38) அந்தக் குரங்கின் சேட்டைகளை அடக்கச் சென்ற சில வீரம் இல்லாத அரக்கர் அழிந்து பட்டனர் என்றால் அவர்களோடு அனைத்து அரக்கர்களின் வீரமும் அழிந்து போயிற்று என்று பொருளா? இல்லை; அக்குரங்கு இட்டத் தீயில் இலங்கை நகர்ப் பகுதி மட்டும் அன்றி அவர்களின் வீரமும் வெந்து போயிற்றா? (971 / 39).

மனிதர்கள் அனுப்ப குரங்கு வந்து நகரில் தீ வைப்பது! அதுகண்டு அரக்கர் சேனையே வருந்தி நிற்பது! அப்படியென்றால் இனிமேல் நடக்கப் போவதைப் பற்றி என் சொல்ல! (971 / 40) சரி சரி! இன்னமும் இதுபற்றி நாம் ஒவ்வொருவராக பேசிக்கொண்டிருப்பது பொறுத்துக் கொள்ளக்கூடியது அல்ல; அந்த மனிதரையும் குரங்கையும் அடையாளம் தெரியாமல் கொன்று தின்றாலொழிய நம் எண்ணம் நிறைவேறுவதேது? (941 / 41) என்றெல்லாம் கண் சிவக்க ஏளனமும் வீரமும் கோபமும் தொனிக்கப் பேசினான்!

'இங்கிருக்கும் சேனையின் நிலை கண்டால் அந்த மாபெரும் பக்கன் எந்த ஒரு பக்கத்திலும் ஓடித் தப்பித்துவிட முடியாமல்—அம்மனிதர்களேயல்ல— அவர்கள் இன்றி— குரங்குகளே கொன்று விடுமே!' என்று வீடணன் எண்ணிப் பார்த்தான்.

அவ்வாறே பிசாசன் முதலியோர் கூட்டமாகவே இருந்து வாழக்கூடிய குரங்கு இனத்தினைத் துணையாகக் கொண்டு வந்துள்ள அந்த மனிதர்களை ஏளனமாகப் பேசினர். அவர்களைத் தேடித் தாங்கள் சண்டைக்குச் செல்வது தங்கள் வீரத்திற்குத் தேவையற்றது என்றும் அவர்களாகவே சண்டைக்கு வந்தால் போர் செய்வதே தேவையானது என்றும் பேசினர்! ஆனால் வீடணன், எவர் முதலில் மோதத் தொடங்கினாலும் முடிவுபெறப் போவது அரக்கர்களே என எண்ணினான்.

இராவணன் பிள்ளை இந்திரசித்து வீராவேசத்துடன் பேசலானான். இராமனோடு நாம் போர் தொடுத்தலே சரி; படை திரண்டு எழுக, என்று கூறிய தந்தையைத் தடுத்து 'அந்த எளிய மனிதர்களையும், குரங்குக் கூட்டத்தையும் எதிர்க்கத் தாங்கள் எழ வேண்டுமோ? தங்கள் மகன்; ஒருவன் நானிருந்து என்ன பயன்? நான் போர் மேற் சென்று வென்று வருவேன்' என்றெல்லாம் பேசிச் சென்றான். தன் பேச்சின் இடையில், அவன், அரசனிடம், ''குரங்குகளை வீழ்த்துவேன், உலகமே நடுங்கும் படியாக பகைவர் அனைவரையும் கொன்று குவித்து பிணக்காடு ஆக்குவேன்; அந்த மனிதர்கள் இருவரின் தலைகளைக் கொய்து வந்து தங்கள் முன் மலைகள் போல் காட்டுவேன்! (947 / 61) என்னுடைய வில்லின் ஒலி கேட்டு ஒரு நிமிடமும் தாமதியாது, குரங்குகள் ஓடி ஒளிவதைப் பாருங்கள். (974 / 62) யானைப் படை குதிரைப் படை முதலாய பெரும் படைகள் ஏதுமின்றி நமக்கு உணவாகக் கூடிய நிலையிலான மனிதர்கள் கூனல் முதுகு குரங்குகளைக் கொண்டு நம்மை வெல்வர் என்று கருதினால், என்னே வீரத்திற்கு ஏற்படும் இழுக்கு! (974 / 63) இயற்கையே ஒரு நாளில் மாறிப் போகும் படியான அளவிற்கு நிலைமாற்றி அந்த மனிதர்களும் குரங்குகளும், ஒன்றுகூடத் தப்பியோடிட முடியாமல் அழித்து வென்றியோடு நான் திரும்புவேன்'' (974 / 64) என்றெல்லாம் வீரம் பேசினான்.

'அந்த மனிதரின் தலைகளை இவன் கொய்து வருவானோ, அவர்கள் இவனுடைய தலை இருக்கும் இடமே தெரியாமல் வெட்டி வீழ்த்தி எறிவார்களோ!' என்று வீடணன் இந்திரசித்துவை ஏளனமாய்க் கருதி நின்று சிந்தித்தான். அவனுடைய பேச்சின் வேகத்தை விரும்பாமல் தானே அதுவரை அனைவர் கருத்துக்களையும் கேட்டிருந்த வீடணன் அவனை இடைமறித்துத் தான் பேசத் தொடங்கினான்.

பிறிதொன்றும் வீடணனின் சிந்தையில் பட்டது. இராவணனின் ஆலோசனை மண்டபத்தே பேசிய அனைவருமே மனிதர்களையும் குரங்குகளையும் ஏளனமாகக் கருதிப் பேசினார்கள். ஆனால், கும்பகருணன் மட்டும் அந்த மனிதரையோ குரங்கினத்தையோ தாழ்த்திப் பேசவில்லையே! மாறாக,

''.................................வளமை கூரப்
பேசுவது மானம், இடைபேணுவது காமம்,
கூறுவது மானுடரை, நன்று, நம் கொற்றம்!'' (973 / 52)

என்றும்,

''வென்றிடுவர் மானுடவரேனும்......'' (973 / 55)

என்றும் அந்த மனிதர்களின் பெருமை தொனிக்கப் பேசித் தங்கள் தமையன் இராவணனின் பிழையை எடுத்துக் காட்டி அவனுக்கு அறிவுரையும் அன்றோ சொன்னான்!

இதன் அடிப்படையையும், ஆதார 'உண்மைகளையும் வீடணன் யோசித்துப் பார்த்தான்!

சபையில் இராவணனிடம். 'தான் கூறிய சொற்களை அந்த ஆதார காரணங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தான். 'இலங்கைமாநகரமும், இராவண ஆட்சியும் வெந்தது சானகி என்னும் மாதரசியின் கற்பினாலேயன்றி ஒரு குரங்கு சுட்டதால்அல்ல!' (976 / 75). என்ற உண்மையைக் கும்பகருணன்

கூற்றோடு இணைத்துச் சிந்தித்தான். கயிலை மலையை இராவணன் பெயர்த்த நாளில் அவனுடைய ஆட்சி ஒரு குரங்கினால் மாட்சி குன்றும் என்ற சாபம் நேர்ந்தது. அது உண்மையானதை வாலி இராவணனை வாலில் கட்டி இழுத்துச் சென்ற விளையாட்டே நிரூபித்து நின்றது! அது போதாதென்று அனுமக்குரங்கும் அவமானப் படுத்திச் சென்றுள்ளது!' (976 / 80) என்றெல்லாம் வீடணன் மனத்தில் படம் ஓடியது!

அவ்வளவு பெரிய வீரம் பொருந்திய வாலியின் மார்பே இராமனின் அம்பால் பிளவு பட்டதே! (979 / 90) வாலி முதலியோர்களே அழிக்கப்பட்டனர் என்றால் இராமனுக்கு ஒப்பானவர் யார்? எவருமில்லை! (981 / 97) அந்த மனிதர்களோடு வானரத் தலைவர்களாய் வந்திருப்பவர்களோ நம்முடைய பகைவர்களான தேவர்களே ஆவர்! அவர்களோடு மாறுபடுதலோ போர் ஏற்றலோ சரியானதன்று. (981 / 98) என்றெல்லாம் தான் எடுத்துக் கூறியதை மீண்டும் நினைத்துப் பார்த்தான்.

மேலும், வீடணன் தான் இராவணனிடம் 'நந்தி' சாபத்தின்படி குரங்கு நம்மை எதிர்க்கும் என்று சொன்னதை ஏளனம் செய்து அவன் 'நமக்கு எத்துணையோ சாபங்கள் வந்தன; அவற்றினால் என்ன ஆகிவிட்டது. அதுபோல் இதுவும் ஒன்று' (982 / 106) என்று கூறி உதாசினப்படுத்திய பேச்சும், 'எதிர் வருவார் பலத்தில் பாதி தன்னைச் சென்றடையும் வரத்தை வாலி பெற்றிருந்ததால் அவனிடம் நான் தோற்றேன். எல்லாக் குரங்குகளின் வல்லமையையும் அப்படி என்ன முடியுமோ' (982 107) என்று கேட்ட கேள்வியும், வாலியினுடைய அந்த வரபலம் தெரிந்து தானே இராமனும் அவனை மறைந்திருந்து கொன்றான்! (982 / 108) என்று எடுத்துக் காட்டிய விளக்கமும் அவன் கருத்தில் ஊசலாடின.

இவ்வாறு, குரங்குப் படையைக் கண்ட வீடணன் கருத்தால் நடந்ததையும், நடக்கப் போவதையும் ஆழமாகச் சிந்தித்துப் பார்த்தான் என்று கவிச்சக்கரவர்த்தி சொல்லாமல் சொல்ல வந்த கூற்றே 'தானையைக் கண்ணின் நோக்கினான்' என்ற சொற்றொடர் என்பதனை நாமும் கருத்தால் நோக்கித் தெளிகின்றோம்!

# 9. அகலிகை அனைய நங்கை

இராமன் சேது சமுத்திரத்தைக் கடந்து இலங்கைக் குள் வந்துவிட்டான். அங்கு, இலங்கை நகரை முழுமையாய்க் காண்பதற்கு வசதியாக சுவேல மலையின் உச்சியில் ஏறி நின்றான். அவ்வாறு, தன் தம்பியும் படைவீரர்களும் தன்னைச் சுற்றிவர மலையேறிச் செல்லப் போகும் காட்சி யைக் கம்பர்,

''அருந்ததி அனைய நங்கை
அவ்வழி இருந்தாள் என்று
பொருந்திய காதல் தூண்ட,
பொன்நகர் காண்பான் போல,
பெருந்துணை வீரர் சுற்ற,
தம்பியும் பின்பு செல்ல,
இருந்தமால் மலையின் உச்சி
ஏறினன் இராமன், இப்பால்'' (1079 / 1)

என்று பாடுகின்றார். இந்தப் பாடலில் 'அருந்ததி'யை நீக்கி 'அகலிகை' என்று கொண்டு சற்று ஆய்ந்து பார்ப் போமா?

இங்கே, கவிச்சக்கரவர்த்தி சீதையை 'அருந்ததி அனைய நங்கை' எனக் குறிப்பிடுகின்றார்! அகலிகை, மாசுபட்டவள்! இந்திரனால் இன்பம் துய்க்கப்பெற்றவள்; அதுவும், அவளுடைய இருப்பிடத்திற்கே சென்று அவன் ஆலிங்கனித்துக் காமக் கள் குடித்தான், அவளிடம்! அவளும் மனமறிய மாற்றானுடன் இன்பம் துய்க்க வில்லை என் றாலும், அவன் ஊட்டிய மயக்கத்தில், மாந்திய சுகத்தை

இடையில் உதறித் தள்ளி, உண்மை அறிந்த பின்னும் எழ வில்லை! முழு சுகத்தில் — மோகக் களியாட்டத்தில் ஆழ்ந்து—தன் கணவர் வந்த பின் எழுந்தாள்! அதனைக் கம்பரே,

''புக்கு, அவளோடும், காமப்
புதுமண மதுவின் தேறல்
ஒக்க உண்டு இருத்தலோடும்,
உணர்ந்தனள்; உணர்ந்த பின்னும்,
'தக்கது அன்று' என்ன ஒராள்;
தாழ்ந்தனள் இருப்ப, தாழா
முக்கணான் அனைய ஆற்றல்
முனிவனும், முடுகி வந்தான்'' (78 / 19)

எனப் படம் பிடிப்பார்!

ஆனால், சிதையின் கற்பு நிலை வேறு; அது சற்றும் மாசு படாதது. அதனை அனுமனே படம் பிடித்து வந்து இராமனிடம் சொல்லோவியமாய்க் காட்டுவான்! தான் சிதையைக் கண்டதை அனுமன் இராமனிடம் சொல்ல வந்தவன், அவளை வேறு எந்த சொந்த பந்தச் சொற் றொடராலும் குறிப்பிடாமல்,

''கண்டனென், கற்பினுக்கு அணியை, கண்களால்''
(938 / 25)

என்று சுட்டுவான். தொடர்ந்து பேசும் பொழுது அவன்,

''நற்பெருந் தவத்தள் ஆய
நங்கையைக் கண்டேன் அல்லேன்;
இற்பிறப்பு என்பது ஒன்றும்,
இரும் பொறை என்பது ஒன்றும்,
கற்பு எனும் பெயரது ஒன்றும்,
களி நடம் புரியக் கண்டேன்'' (938 / 29)

என அவளுடைய கற்பு நிலையை விளக்குவான்.

மேலும், சிதையை இராவணன் தன் கைகளால் தீண்ட வும் இல்லை என்பதை, அனுமன்,

''மண்ணொடும் கொண்டு போனான்—
வான் உயர் கற்பினாள் தன்
புண்ணிய மேனி தீண்ட அஞ்சுவான்'' (939 / 34)

என எடுத்துக் கூறுவான்.

ஆக, அகலிகை வேறோர் ஆடவனால் ஆசைப்படப் பெற்றாள்; சீதையும் வேறோர் ஆடவனால் ஆசைப்படப் பெற்றாள்! அகலிகையை ஆசைப்பட்டவன் அவளை நாடிச் சென்று அரவணைத்து அவளைப் பாபமேனியள் ஆக்கினான்; சீதையை விரும்பியவன் அவளை அணுகவும் முடியாமல் போக அவள் புண்ணிய மேனியளாகவே இருக்கின்றாள் என்பது தெளிவாகின்றது.

அப்படியிருக்க, மாசு மறுவற்ற கற்புச் சீதையைக் கவிச்சக்கரவர்த்தி மாசுற்ற (கற்பினாளை!) அகலிகைக்கு ஒப்பிட்டு,

'அகலிகை அனைய நங்கை'

எனக் கூறல் பொருந்துமா? பொருந்தாத ஒன்றைக் கம்பர் கையாள்வாரா?

தன்னிடமிருந்து பிரிக்கப்பட்ட மனைவிக்காக ஏங்கி, வருந்தி, மனமொடிந்து தேடித் திரிபவன், இராமன். அவனோ காமச் செயல்பாட்டில் குற்றம் பெற்றுவிட்ட அகலிகையை,

'அன்னையே அனையாள்' (77 / 16)

என்றவன், அவளுடைய வரலாற்றை அறிந்த பின்னும் அவன் அவளை,

'மாசு அறு கற்பின் மிக்க அணங்காகவே' (79 / 28)
கண்ட நோக்குடையவன்.

எனவே, இராமனிடம் சீதையைப் பற்றிய—அவளுடைய உன்னத கற்பு நிலை பற்றிய தெளிவும்

இருந்தது; அதே சமயத்தில் மானுடக் கண்ணோட்டத்தில்— உணர்ச்சி வயப்பாட்டில்— உளவியல் உந்துதலில்— அகலிகைக்கு ஏற்பட்டது போல் சீதைக்கும் கட்டாயச் சூழல் ஏற்பட்டிருக்குமோ என்ற ஐயமும் மின்னலாய்த் தோன்றித் தோன்றி மறைந்தது! இந்த வேண்டாத சந்தேகம் தோன்றா விட்டால் இராமனைத் தான் மானுடனாகவே படைத்து மானுடனாகவே வளர்த்து, மானுடம் வெல்லும் தகைமைக்கு மேம்படுத்தும் வல்லமை மாறி, கம்பர் இராமனையும் சீதையையும் தெய்வங்களாகத் தான் படைத் துள்ளார் என்றாகி விடும் அல்லவா?

ஆக, பிழை புக முடியாத நிலையிலான கற்புடைச் சீதையை, மனித இராமனின் மனத்தகத்தே உலகியல் நோக்கில் தோன்றக் கூடிய ஐயத்திற்கு ஆளாக்கி, பிழை புகுந்துவிட்ட அகலிகைக்கு ஒப்பிட்டு எழுதியுள்ளார்!

இராமன் மனத்தில் இந்த ஐயம் தோன்றியது என்பதை அல்லது அவன் ஐயம் உற்றதாகக் கொண்ட பாவனையைக் க்விச்சக்கரவர்த்தி நேரிடையாக உறுதிப்படுத்தவும் மறக்க வில்லை! சீதையை மீட்டபின் அவளை நோக்கி, இராமனே- கற்புக் கரசியின் கணவனே—

''பெண்மையும், பெருமையும், பிறப்பும், கற்பு எனும்
திண்மையும், ஒழுக்கமும், தெளிவும், சீர்மையும்,
உண்மையும், நீ எனும் ஒருத்தி தோன்றலால்,
வண்மை இல் மன்னவன் புகழின் மாய்ந்தவால்''
(1550 / 66)

என்பான்!

இவ்வாறு எளிய மனிதனின் உளவியல் கூறுகளுக்கும் இடம் அளித்து ஏற்ற முறையில் சொற்களையும் சொற் றொடர்களையும் பெய்து நம்மைத் தமிழின்பக் கடலில் மூழ்கடித்துத் திணற வைக்கும் கவிச்சக்கரவர்த்தியின் திறன் என்னென்பேம்! என்னென்பேம்!

## 10. மன்னவர் மன்னன்!

சுவேல மலை மேல் நின்று கொண்டு இராமன் இலங்கையை நோக்கினான். அங்கிருந்த அரக்கர்கள் கண்ணில் பட்டனர். இராமன் வீடணனிடம் அவ் வரக்கர்கள் யார் யாரென விளக்கச் சொன்னான். வீடணனும் அவர்களைத் தெரிவிக்கத் தொடங்கி இராவணனை அடையாளம் காட்டினான்.

இதனைச் சுக்கிரீவன் கேட்டுக் கொண்டிருந்தான், இராவணனை அடையாளம் காட்டிச் சொன்னதும், வேறு எந்த செய்தியையும் கேட்டுக் கொண்டிருக்கவில்லை. சுக்கிரீவன்; திடீரெனத் தாவிச் சென்றான்; இராவணன் இருந்த மலைக் குன்றில் குதித்தான். இராவணனுடன் சண்டையிட்டான். இருவரும் ஒருவரை ஒருவர் இடைவிடாது மாறி மாறி அடித்தும், உதைத்தும், கைகளால் குத்தியும் நெடு நேரம் சண்டையிட்டனர். இதனை வர்ணிக்க வந்த கவிச்சக்கரவர்த்தி தாமும் தம் பாடலில் இடையறுப்பு இல்லாமல் அந்தாதிப் பாடல்களாகவே பாடி யுள்ளார் என்றால் அவ்விருவரின் அடிதடி வேகத்தைக் கூறவும் வேண்டுமா? இறுதியில், சுக்கிரீவன் இராவண னுடைய மகுடமணிகளைப் பறித்துக் கொண்டு இராமனிடம் ஓடி வந்து விட்டான்!

சுக்கிரீவனைக் காணாமல் இராமன் புலம்பிக் கொண் டிருந்தான்; தான் தனியனாகி விட்டது போல் துடித்துக் கொண்டிருந்தான். அந்த சமயத்தில் தான் சுக்கிரீவன்,

இராவணனுடைய மகுடத்தைப் பறித்தவனாய் இராமனை அடைந்தான்.

இராமன், தான் சுக்கிரீவனைக் காணாது தவித்ததை வாய் விட்டுக் கூறி நொந்தான். சுக்கிரீவனோ, தான் இராவணனுடன் கை கலந்தும் அவனைக் கொல்லாமல் திரும்பி வந்ததற்காக தன்னைத் தானே நொந்து பேசினான். இவ்வாறு இருவரும் பேசிக் கொண்டிருந்த வேளையில் விடணன் அவர்களிடம் வந்தான். இந்தக் காட்சியைக் கம்பர்,

''இன்னன பலவும் பன்னி, இறைஞ்சிய முடியன் நாணி,
மன்னவர் மன்னன் முன்னர், வானர மன்னன் நிற்ப,
அன்னவன் தன்னை நோக்கி, அழகனை நோக்கி, ஆழி
மின் என விளங்கும் பைம்பூண் விடணன் விளம்பலுற்றான்''

(1093 / 43)

என்பார்.

கைகேயி பெற்ற வரங்களால் இராமன் அரசிழந்தான்; ஆண்டியாய்க் கானகம் வந்துள்ளான். ஆக, அவன் கோசலத்திற்கே மன்னன் அல்ல. எவ்வளவு தான் பரதன் வாதாடியும் இராமன் நாட்டிற்குத் திரும்பவோ, ஆட்சியை ஏற்கவோ மறுத்து விட்டான். பதினான்கு ஆண்டுகள் வனவாசம் முடிந்த பின் என்னவாகுமோ? நந்தியம் பதியில் அரியணையில் இருந்த இராமனின் திருவடிகளே நீடுத்திருக்குமோ என்னவோ?

இந்த நிலையில், கவிச்சக்கரவர்த்தி இராமனை 'மன்னவர் மன்னன்'' என்று குறிப்பிட்டது சரியா?

காவிய தொடக்கத்திலிருந்து இந்தக் கட்டம் வரை கவிச்சக்கரவர்த்தி இராமனை நூற்றுக்கணக்கான சொற்

களாலும், சொற்றொடர்களாலும் குறிப்பிட்டுள்ளார். கவிக் கூற்றாக மட்டு மல்லாமல் பிற பாத்திரங்கள் வாயிலாகவும் அவனை அடையாளம் காட்டியுள்ளார்!

அந்த சொற்களும், சொற்றொடர்களும் ஏற்றபொருளை ஏற்று வந்திருக்கின்றன! ஆனால், 'மன்னவர் மன்னன்' என்ற சொற்றொடர் மட்டும் ஏலாப் பொருளதாய்த் தோன்றுகின்றதே! அவ்வாறு, சரியான பொருள் அற்ற சொற்றொடரைக் கம்பர் கையாள்வாரா?

இனி, அந்த நூற்றுக் கணக்கான சொற்றொடர்களுள் இந்த, 'மன்னவர் மன்னன்' என்பதுவும் வந்துள்ளதா என்று நோக்குவோம். அவ்வாறு வந்திருப்பின் இடம், பொருள், காலத்திற்கேற்ற கருத்தைக் காட்டுகின்றதா? என்பதையும் ஆய்வோம்!

அயோத்தியா காண்டத்தில் கோசலை வாயால், 'மன்னர் மன்னவா' என்ற சொற்றொடர் வருகின்றது. அஃது அவள் பரதனை அழைக்கும் வகையாய் அமைந்துள்ளது. (356 / 119)

பரதன் சொல்லிய சூளுரைகளையெல்லாம் கேட்டு நின்ற கோசலைத் தாய், அவனுடைய குற்றமற்ற நெஞ்சைக் கண்டு வாழ்த்துகின்றாள். அப்பொழுது, அவனைப் பார்த்து, 'உன் குலத்துதித்த மன்னவர்களுள் யாரே உனக்கு ஒப்பு ஆவார்!' என்று வியக்கின்றாள். எனவே, அதுவரை தோன்றிய மன்னவர்களில் எல்லாம் சிறந்தோனாகப் பரதன் மிளிர்கின்றான் என்ற பொருளில் 'மன்னவர் மன்னவா' என்ற சொற்றொடர் ஏற்புடைப் பொருளில் அமைந்துள்ளதை அறிகின்றோம்!

சுமித்திரை, இராமனை, 'நம் மன்னவன்' எனக் குறிக்கின்றாள்! இராமனுடன் தானும் கானகம் ஏகுதற்கு இலக்குவன் அன்னையின் ஒப்புதலைக் கேட்கின்றான்.

அந்த இலக்குவனோ முன்னமேயே ஆத்திரத்தின் உச்சத்தில் நின்று யார் எவ்வாறு தடுத்தாலும், தான், இராமனுக்கே முடி சூட்டுவதாகக் கொதித்து எழுந்தவன். ஆக, அவனுடைய மனோநிலையையும் அனுசரித்து, தன்னைப் பொறுத்த வரையில் இராமனுக்கு முடிசூட்டு விழா இல்லை என்பதை ஒப்ப முடியாது என்ற பாங்கில் சுமித்திரை இராமனைத் தங்களுடைய — சுமித்திரையினுடையவும் இலக்குவனுடையவும் ஆன — மன்னனாக உறுதிப் படுத்தி, 'நம் மன்னவன்' என்றாள்! அதுவும் உளவியல் முறையில் தக்க சொற்றொடராய் அமைந்துள்ளது!

இலக்குவன் தன் ஆத்திரத்தைக் காட்டிச் சுமந்திரனிடம் செய்தி சொல்லும் பொழுது இராமனை, 'என் மன்' (என்னுடைய மன்னன்) என்றே குறிப்பிடுகின்றான்! இராமன் மன்னன் ஆகாமல் கானகத்திற்குச் செல்கின்றான் என்பது உண்மையே யானாலும் இலக்குவனுக்குத் தன் உளப் பாங்கின்படி இராமன் 'மன்னவனே' என்ற உணர்ச்சியை எடுத்துக்காட்டுகின்றது. ஆக, அச் சொல் அங்கு உளவியல் கோணத்தில் பார்க்கும் பொழுது ஏற்புடையதாகவே இருக்கின்றது!

இராமன்—சிதை உரையாடலைக் காட்ட வந்த கம்பர் கவிக் கூற்றாக இராமனைக் 'கொற்றவன்' எனக் குறிப் பிடுகின்றார்.

''கொற்றவன் அது கூறலும், கோகிலம்
செற்றது அன்ன குதலையள் சிறுவாள்''

(301 / 228)

என்பார்.

ஒரு மனைவிக்கு மன்னவன் அவள்தன் கணவனே அன்றோ! அதனால், சீதையினோடு இராமனை இணைத்துப் பேசும்பொழுது அந்தக் கணவனை அவளுடைய 'கொற்றவனாக,' 'மன்னராக'க் குறிப்பிட்டது நம் நாட்டு தர்மப்படி தகுதியானதே!

இனி, பரதனும் இராமனைக் 'கொற்றவன்' (347 / 56) என்றும், 'மன்னன்' (372 / 33) என்றும், 'மன்ன!' (394 / 112) என்றும், குறிப்பிடவும், விளிக்கவும் காண் கின்றோம்.

முதலில், கோசலத்தில் என்ன நிகழ்ந்தது என்று அறி யாத நிலையில்,

''கொற்றவன் முடி மணக் கோலம் காணவும்
பெற்றிலை போலும், நின் பெரிய கண்களால்''
(347 / 56)

என்று தன்னைத் தானே கீழ்மைப்படுத்திக் கொள் கின்றான்! மூத்தவன் முடிசூட்டிக் கொண்டு கொற்றவன்- மன்னவன்— ஆக வேண்டியது முறைமை ஆகும் அன்றோ! ஆதலால், பரதன் தன் தமையவனைக் 'கொற்றவன்' என்றது முறைப்படி சரியே.

என்ன நடந்தது என்பதைத் தன் தாய் மூலமே தெரிந்து கொண்டான் பரதன். அந்த நிலையில் குகன் பரதனைப் பார்த்து கங்கைக் கரைக்கு வந்ததின் நோக்கம் என்ன என்று கேட்கின்றான். அதற்குப் பரதன்,

''முழுது உலகு அளித்த தந்தை
முந்தையோர் முறையினின்றும்,
வழுவினன்; அதனை நீக்க, மன்னனைக்
கொணர்வான்'' என்றான்.
(372 / 33)

ஆக, பரதனைப் பொறுத்தவரை தந்தை தசரதனே ஆணை பிறப்பித்தாலும் முறைப்படி இராமனே பட்டத் திற்கு உரியவன் என்ற பாங்கில் அவனை 'மன்னன்' என் கின்றான் என்றால் அது அவனுடைய மனோ திட்பத்தைக் காட்டி வந்த சொல் என்றாகி நிற்கின்றது!

மேலும், பரதன், இராமனை நேரிலேயே 'மன்ன!' என்று அழைக்கும் காட்சியைக் காண்கின்றோம்!

தந்தை தந்த வண்ணம் கோசல நாடு பரதனதே என இராமன் கூறுகின்றான். 'அப்படி அது என் நாடு ஆனால், நான் தர அந்நாட்டை நீ ஏற்று முடிசூடுவாயாக' என்று பரதன் இராமனிடம் கூறித் தான் கூறியதை உறுதிப்படுத்துவான் போலே தன் தமையனை தன் நாட்டு மன்னவன் என்ற பாங்கில் 'மன்ன!' என விளிக்கின்றான்.

''முன்னர் வந்து உதித்து, உலகம் மூன்றினும்
நின்னை ஒப்பு இலா நீ, பிறந்த பார்
என்னது, ஆகில், யான் இன்று தந்தனென்;
மன்ன! போந்து நீ மகுடம் சூடு''

(394 / 112)

என வேண்டுகின்றான்!

இந்தச் சூழலிலும் பரதன் இராமனை ''மன்னவனாய்க்' கருதியது குற்ற மற்ற தாகின்றது!

இவ்வாறு, இராமன்—பரதன் வாக்கு வாதம் தீர்ந்து இறுதியில் பரதன் அன்பின் பெருக்கால், அண்ணல் மாட்டு கொண்ட அளவற்ற மரியாதையால் இராமனுடைய பாதுகைகளைப் பெற்றுச் சென்று நந்தியம்பதியில் அவற்றினை அரியணை ஏற்றும் வரை 'என்ன ஆகப் போகின்றதோ? — யார் மன்னனாய் மகுடம் சூடப் போகின்றாரோ?' என்று தெரியும் முன்பு கவிச் சக்கரவர்த்தியும் இராமனைக் 'கோன்' என்று குறிப்பிடுதலை ஒருவாறு ஏற்றுக் கொள்ளலாம்! அவர்,

''சேனை வீரரும், திரு நல் மா நகர்
மான மாந்தரும், மற்றுளோர்களும்
ஏனை வேந்தரும் , பிறரும், யாவரும்—
கோனை எய்தினார்—குறையும் சிந்தையார்''

(391 / 93)

என்று பாடுகின்றார், யாவருடைய சிந்தையிலும் நிரம்பி விட்ட குறையின் பிரதிபலிப்பாக!

காவியப் போக்கை அறிந்திருக்கக் கூடிய கம்பரே இராமனை இன்னமும் மன்னனாகக் குறிப்பிடுகின்றார் என்றால் மந்திரியாகிய சுமந்திரன் — இராமனைக் கானில் விட்டுவரத் தேரோட்டியாகச் சென்ற சுமந்திரன் — தன் ஏக்கத்தால் — இராமன் மீண்டும் நாடு திரும்ப மாட்டனா என்ற பேராவலால் — அவ்வாறு அவன் நாடு திரும்பினால் அவன்தான் கோசல நாட்டு மன்னன் என்ற உறுதியால்,

''கோவினை உடன் கொடு குறுகினேன்
என்கோ?'' (305 / 20)

என்று தனக்குத் தானே வினவிக் கொண்டதில் வியப்பு இல்லை யல்லவா!

இனி, நாமும் இராமனைத் தொடர்ந்து ஆரணியத்திற்குச் சென்று காண்போம்! அங்கேயும் கவிச் சக்கரவர்த்தி நான்கு முறை, 'மன்னவர் மன்னவன்' அல்லது 'மன்னர் மன்னவன்' என்ற சொற்றொடரைக் கையாண்டுள்ளார்.

முதலில், அகத்தியர் ஆசிரமத்தில் இருந்த இராமனைக் குறிக்க வந்த கம்பர், அவனை 'மன்னர் மன்னவன்' எனக் கூறவில்லை; அவனைத் தயரதனின் புதல்வன் எனக் காட்ட வந்தவர், 'மன்னர் மன்னவன் மைந்தன்' (429 / 25) என்றார். அதனால், ஈண்டு அச் சொற்றொடரைக் கையாண்டதில் சிக்கல் இல்லை!

அதேபோல் மீண்டும் சடாயுவின் வாயிலாகவும் இராமனைத் தயரதன் புதல்வன் என்று சொல்விக்க,

''மன்னர் மன்னவன் மைந்த!'' (439 / 36)

என விளிக்க வைக்கின்றார்! ஈண்டும் சிக்கல் இல்லை. வருணன் இராமனிடத்தில் ஒரு வில்லைக் கொடுக்கின்றான்; அதனைத் தயரதன் புதல்வன் பெறுகின்றான். அக்காட்சியைக் கவிச் சக்கரவர்த்தி,

''மன்னர் மன்னவன் செம்மல், மரபினால்,
பின் உறத் தன் பெருங்கரம் நீட்டினான்.'' (485 / 177)

என்பார்; இங்கும் சிக்கல் இல்லை!

ஆனால், சீதையின் பிரிவைச் சகிக்காமல் இராமன் துயர்ப்பட்டு அகங்கலாய்க்கின்றானே, அப்பொழுது, கம்பர், இராமனை, 'மன்னவர் மன்னவன்' எனக் குறிப்பிடுகின்றார்! அந்த மைந்தனுடைய மதிமயக்கம் மாபெரும் கவிச்சக்கரவர்த்தியையும் பற்றிக் கொண்டதோ!

''இன்னன இன்னன பண்ணி, ஈடு அழி
மன்னவர் மன்னவன் மதி மயங்கினான்;
அன்னது கண்டனன் அல்கினான் என,
துன்னிய செங்கதிர்ச் செல்வன் தோன்றினான்''
(569 / 101)

என்ற அப்பாடலில் வரும் பிற சொற்களையும் சற்று ஆய்ந்து பார்ப்போம்.

'அல்கினான்' என்பது சுருங்கினான்—மெலிந்தான்—என்று பொருள் பெறும். சூரியன் தன் ஒளியாலும், உருவாலும் மெலிந்து சுருங்கினானோ இல்லையோ, கவிச்சக்கரவர்த்தியின் எண்ண ஓட்டம்—விளக்கத் தெளிவு—சற்றே மெலிந்து தன்னையும் அறியாமல், இராமனை, 'மன்னவர் மன்னவன் மைந்தன்' என்று குறிப்பிடுவதற்குப் பதிலாக, அவனையே, 'மன்னவர் மன்னவன்' என்று குறிப்பிட்டுத் தம் சொல்லொளி குன்றினார்—சொற்றொடரை மெலிவித்தார் — என்று கருதுவதிலும் பிழையில்லை.

ஆனால், அந்த 'மன்னவர் மன்னவன்' என்ற சொற்றொடர்க்கு 'ஈடு அழி' என்ற அடைமொழியை இடுகின்றார்! 'தனக்கு இணை இல்லாத மன்னவர் மன்னவனாகிய இராமன்' எனப் பொருள் கொள்ளுதலே எல்லோர் கருத்

திலும் படும், என்றாலும் சற்றே ஆழப் பார்த்தால் கவிச் சக்கரவர்த்தியின் சொல்லாற்றால் தெளிவாகும்! தான் மதி மயங்கவில்லை என்பதைக் காட்டி நிற்கும்! தன் சொல்லில் ஒளி மங்கவில்லை, மாறாக உட்பொருள் மிளிர்கின்றது என்பதைத் தோற்றுவித்து விளங்கும்!

பன்னிப் பன்னிப்பேசுவதும்—அகங்கலாய்ப்பதும்—புத்தி தடுமாறுவதும் சாதாரண மனிதனின் செயல். எவ்வளவு துயர்பட்டாலும், பட்டும் படாமலும் துயர் உறுவது ஆன்றோர், சான்றோர், மன்னர், மன்னவர் மனோ நிலை. அந்த தாமரை இலைத் தண்ணீர் போன்ற நிலை மாறி துன்பம் என்னும் சேற்றிலேயே இராமன்—வேண்டுதல் வேண்டாமையிலான், சிற்றன்னை கைகேயி செப்பிய அவ் வாசகம் உணரக் கேட்ட அப்பொழுது, அலர்ந்த செந் தாமரையினை வென்ற திருமுகச் செவ்வியோன் மூழ்கி' எளிய உணர்ச்சிகளுக்கு ஆட்பட்டு அமுங்குகின்ற நிலை பெற்று விட்டான். ஆக, தனக்குத் தானே ஈடானவன் என்ற நிலை அழிந்து இராமன் சிந்தை மயங்கினான் என்னும் பொருளையும் உட்கொண்ட அடைமொழியாக 'ஈடு அழி' எனப் பெய்கின்றார், கவிச் சக்கரவர்த்தி.

தன்னுடன் கானகம் வருவதாகக் கூறிய கோசலைத் தாயைத் தேற்றும் பொழுது இராமன் தன் தந்தையை, 'மன்னர் மன்னன்' (273 / 19) என்று குறிப்பிட வைத்த, கம்பரா அந்த இராமனையே 'மன்னவர் மன்னவன்' என்பார்! அந்தந்தப் பாத்திரங்களின் உணர்ச்சிகளோடு கவிஞன் ஒன்றி விடலாம். அதன் விளைவாக சொல் தடுமாற்றமும் பெறக் கூடும். ஆனால், கவிக் கூற்றாக தன் நினைவோடு பாடும் பொழுது சொல் தடுமாற்றம் வரலாமா? அவ்வாறு வந்து விட்டால் அக் கவிஞரின் நற்றமிழ் ஆற்றலுக்கே இழுக்கு வந்து விடுமே! அவ்வாறான இழுக்குகள் ஏதும் இன்றி முழுக் காவியம் படைத்த கம்பர், கவிச்சக்கரவர்த்தி' எனும் பட்டம் பெறுகின்றார்.

கிட்கிந்தையில், சுக்கிரீவன் இராமனைப் புகழ்கின்றான்; இராமன் சுக்கிரீவனையே கிட்கிந்தையின் மன்னனாய் ஆக்குவதாக உறுதி கூறிய பின் புகழ்கின்றான்.

''அன்னை ஒப்புடைய உன் அடியருக்கு
அடியேன் யான்;
''மன்னவர்க்கு அரச!'' என்று உரை செய்தான்''
(617 / 20)

அடக்கத்தின் காரணமாகத் தன்னையே இராமனுடைய அடியவர்களின் அடியவனாகக் கூறிக் கொள்ளும் ஒரு மன்னவன்—இன்றின்றேனும், இராமன் வாக்குப்படி நாளை மன்னவன் ஆகப் போகும்—சுக்கிரீவ அரசன் தனக்கும் உயர்ந்தவனை — தனக்கு மன்னன் பதவி தரப் போகின்றவனை—இராமனைத் தன்னுடைய அரசன் எனக் கூறுவது தானே புகழ்ச்சியுரைக்குப் பொருந்திய உச்ச கட்டம்! அதனால், இராமன் மன்னவன் என்ற நிலையோ, மன்னவர் மன்னவன் என்ற நிலையோ எய்தி விடுவானா, சிரையுடுத்திய செய்தவத்தோனாய் விளங்கும் பொழுது!

எனவே, 'மன்னவர்க்கு அரச' என்ற சுக்கிரீவன் வாய்ச் சொற்றொடரும் பழுதுறவில்லை!

இராமன் எந்த நிலையனாய் இருந்தாலும் சிதையைப் பொறுத்தமட்டில் அவன் அவளுடைய மனம் மணந்த மன்னவனே என முன்னமேயே மொழிந்துள்ளோம். அது மட்டும் அல்ல; தன் மணாளனை மாற்றானுடன் குறிப் பிடும் பொழுது தங்கள் காம்பீர்யத்தைக்காட்டிக் கழறுவதும் தேவையானது, உளவியல் உண்மை. அந்தப் பாங்கில் இராவணனுக்குக் கடுமையான பதில் சொல்லும் அந்தப் பத்தினி,

''ஏழை! நின் ஒளித் துறை இன்னது ஆம் என,
வாழி எம் கோமகன் அறிய வந்த நாள்,
ஆழியும் இலங்கையும் அழியத் தாழுமே!''
(821 / 124)

என்று கூறும் பொழுது, இராமனை 'என் கோமன்' என்றே குறிப்பிடுகின்றார்.

அதே போல், இராமனை மிக மிக உயர்த்தியே தன்னிடம் பேசிக் கொண்டிருக்கும் அனுமனிடம் சீதை தன் கணவனைக் குறிப்பிடும் பொழுது அவனை ஓர் எளிய மனிதனாகக் காட்டிப் பேசுதல் நெறியன்று; உரையாடலின் இணை நிலைக்கும் ஏற்றதன்று. எனவே, அவள்,

''...........நீயே எம் கோன் துணை...'' (842 / 112)

என்றும்,

''பூண்டேன் எம்கோன் பொலங் கழலும்..............'' (842 / 113)

என்றும்,

''.............................................................. அந்த
மன்னன் ஆணை; ..............................'' (847 / 29)

என்றும், அனுமனிடம் நேரில் குறிப்பிட்டாள். மேலும், அனுமனை நினைந்து புலம்புகையிலும்,

''மண்டு போரில் அரக்கனை மாய்த்து, எனைக்
கொண்டு மன்னவன் போம் எனும் கொள்கையைத்
தாண்டினாய்.................... ... .........................''
(911 / 35)

என அரற்றுகின்றாள்!

'எம்கோன்' என்று அன்னையே அனையாள், அத்தனே அனையானை, குறிப்பிட்டதற்கு ஏற்ப அனுமனும் இராமனை, ''மருளும் மன்னவர்'' (846 / 28) என்றும் ''எம் கோனும் வில்லோடும் செல வேண்டாவோ?'' (848 / 42) என்றும் குறிப்பிட்டுச் சீதையிடம் பேசியதில் வியப்போ, தவறோ ஒன்றும் இல்லை. மீண்டும் அவன் இராமனைக் ''கோமான்'' (853 / 76) என்று சீதையினிடமும், 'எங்கள்

கோமான்' (918/ 86) என்று இராவணனிடமும் குறிப்பிடு கின்றதையும் காண்கின்றோம்!

அம்மட்டோ! சீதையைக் கண்டு வந்த பின் இராமனிடம் பேசி நிற்கும் அனுமன் இடையில் அவனை 'மன்ன!' என்று விளிக்கின்றான். (940 / 44) மன்னன் சுக்கிரீவனே இராமனை மன்னனாய்ப் பேசும்பொழுது மந்திரியும் அவனை அவ்வாறு அழைத்தல் தேவையற்றது அல்லவே!

இராமன் சீதையின் மனத்திற் கேற்ற மன்னவன் என்ற அடிப்படையில்,

''வாங்கினாள்; தன் மலர்க்கையில்; மன்னனை
முன்னா,
ஏங்கினாள்; (853 / 80)

என்று கம்பரும் பாடியுள்ளார். ஆனால் சுந்தர காண்டத்தில் அவர் எங்கும் இராமனை 'மன்னர் மன்னவன்' எனக் குறிப்பிடவில்லை என்பது குறிப்பிடத்தக்க உண்மை!

இராமனிடம் பேசிக் கொண்டிருக்கும் பொழுது, வருணன் அவனை, 'மன்னவ'! (1054 / 78) என்று அழைக்கின்றான். காரணம் அவனே,

''...... ...... ........... ...... ...... ஏழாம் செறி திரைக்
கடலில் மீனின்
போர்த் தொழில் விலக்கப் போனேன் அறிந்திலேன்
புகுந்தது ஒன்றும்''
(1054 / 76)

எனக் கூறுவதால் இராமனாகிய மன்னவன் தன்னிடம் என்னிலையில் வந்துள்ளான் என்பதே அவனுக்குத் தெரியாது என்றாகின்றது!

ஆனால், 'வலிய மால்' (1079 / 90)

என்று இராமனை அடையாளம் கண்டு கொண்ட பின் இராமனை, 'மன்னவர்க்கு அரசன் வந்தான்' என்று கவிச் சக்கரவர்த்தியே பாடுகின்றார்! (1079 / 90)

இவ்வாறெல்லாம் காரண காரியங்களுக்கு ஏற்ப இராமனை, 'மன்னன்', 'மன்னவர் மன்னன்', 'கோமான்' என்றெல்லாம் குறிப்பிட்டு வந்த கம்பர் இந்த கட்டத்திலும், 'மன்னவர் மன்னன்' என்று குறிப்பிடுவது ஒப்புமா? கோசலத்தின் மன்னனாகவோ இலங்கை மன்னனுடன் இராமன் போர் செய்ய வந்துள்ளான்? தனி மனிதனான இராமன் தன் மனைவியை மீட்டுச்செல்வதற்காகத் தானே இராவணனுடன் சண்டையிட வந்துள்ளான்! அப்படியிருக்க, கவிக்கூற்றாக கம்பர், இராமனை 'மன்னவர் மன்னவன்' என்றது ஏன்?

கவிச் சக்கரவர்த்தி அப்பாடலிலேயே அதற்குக் காரணத்தையும் குறிப்பால் உணர்த்துகின்றார்!

சுக்கிரீவனைக் காணாது வருந்தி நிற்கும் இராமனிடம் அந்த சுக்கிரீவன் வந்தடைந்தான் என்று கூற வந்த கம்பர் அவனை 'வானர மன்னர்' எனக் குறிப்பிடுகின்றார். இவர்கள் இருவரையும் பார்த்துப் பேசலுற்றவனோ இராமனால் இலங்கை மன்னன் என்று முடிசூட்டுவிக்கப்பட்டு விட்டவனாகிய வீடணன். அவனை, 'அரக்கர் தம் அரசன்' எனக் குறிப்பிட்டிருக்கலாம்.

கிட்கிந்தையைப் பொறுத்த வரையில் மூத்தோனான வாலியைக் கொன்றாகி விட்டது! எனவே சுக்கிரீவன் ஒருவனே உள்ளான். அதனால் வானரர்க்கு மன்னனாய் இருப்பவன் சுக்கிரீவன் தான்; ஆக, 'வானர மன்னன்' என்றால் அவனைத் தான் சுட்டும்.

ஆனால் இலங்கையின் நிலை அவ்வாறு அல்ல. வீடணனை இலங்கை மன்னன் ஆக்கும் உறுதியைக் காட்டி அவனுக்கு இராமன் முடிசூட்டி விட்டாலும், இலங்கையில்

மூத்தோனாகிய வணங்கா முடி மன்னனான இராவணன் இன்னமும் ஆட்சி பீடத்தில் இருக்கின்றான்; மேலும் அவனுக்கு இளையனான, வீடணனுக்கு மூத்தவனான கும்பகருணன் இருக்கின்றான். இந்த நிலையில், 'இலங்கை மன்னன்' என்றோ, 'அரக்கர் அரசன்' என்றோ குறிப் பிடுதல் வீடணனை என விளங்காது; எனவே, அவனை 'ஆழி மின் என விளங்கும் பைம்பூண் வீடணன்' என்றே கம்பர் காட்டியுள்ளார்.

'இலங்கை வேந்தன்' என்று கூறினால் இராவணனை யும் குறிக்கும், வீடணனையும் குறிக்கும் என்ற தடுமாற்றத் தைத் தானே காட்டாமல் காட்டியுள்ளார், கவிச் சக்கர வர்த்தி, அடுத்தடுத்து வரும் மூன்று பாடல்களில் அச் சொற்றொடரைக் கையாண்டு!

''இன்னது ஓர் செவ்வித்து ஆக, இராமனும்,
'இலங்கை வேந்தன்—
தன் நெடுஞ் செல்வம் தானே பெற்றமை
பலரும் கேட்ப,
பல் நெடுந்தானை சூழ, பகலவன் சேயும் நீயும்,
மன் நெடுங் குமர! பாடி வீட்டினை
வலம் செய்க' என்றான்''
(1032 / 148)

என்னும் பாடலில் வீடணனைக் குறிக்கின்றது.

''இற்றிது காலம் ஆக, இலங்கையர்
வேந்தன் ஏவ,
ஒற்றர் வந்து அளவு நோக்கி, குரங்கு
என உழல்கின்றாரைப்
பற்றினன் என்ப மன்னோ—பண்டு
தான் பல நாள் செய்த
நல்தவப் பயன் தந்து உய்ப்ப, முத்துறப்
போந்த நம்பி'' (1069 / 23)

என்னும் பாடலில் 'நம்பி' என்ற சொல் வீடணனைக் குறிக்க, இலங்கையர் வேந்தன்' என்ற சொற்றொடரோ இராவணனைக் குறித்து நிற்கின்றது! அதேபோல்,

''அரவ மாக் கடல் அஞ்சிய அச்சமும்,
உரவு நல் அணை ஓட்டிய ஊற்றமும்,
வரவும் நோக்கி, இலங்கையர் மன்னவன்,
இரவின், எண்ணிட, வேறு இருந்தான் அரோ''

(1071 / 39)

என்ற பாடலிலும் இராவணனைக் குறிக்கின்றது, 'இலங்கையர் மன்னவன்' என்ற சொற்றொடர்.

ஆக, அவ்விடத்தில் இராமனுடன் நின்ற இருவரும் மன்னர்கள் என்பதை நினைவுபடுத்தும் வகையில் இராமனை, 'மன்னவர் மன்னன்' என்கின்றார்! ஆம்; அவ்விருவரையுமே மன்னர்கள் ஆக்கியது-முடி சூட்டு வித்தது இராமனேயன்றோ. எனவே, அங்கு இரு மன்னவர் களும் அவர்களால் தங்களுக்கு மன்னன் என்று தொழு தேத்தப்படும் இராமனும் இருந்த சூழலில் அவனைக் கவிச் சக்கரவர்த்தி, 'மன்னவர் மன்னன்' எனக் குறிப் பிட்டுள்ளார் என்று நோக்கும் பொழுது, கம்பர் வாயால் வரும் சொல் — சொற்றொடர் —எதுவானாலும் காரண காரியம் காட்டி வந்து பெருமை பெறும் என்பதை உணர்ந்து உள்ளம் பூரிக்கின்றோம்!

# 11. தன் புகழ் என இழிந்து போனான்

இலங்கையில் நின்று இராவணன் வானரப் படையினைக் கண்டு கொண்டிருந்தான். சுவேல மலையில் நின்று இராமனுக்கு வீடணன் இலங்கையில் இருப்போரைக் காட்டி அவர்களின் வீரம் முதலியன பற்றி விளக்கிக் கொண்டிருந்தான். அவன் இராமனிடம் இராவணனை அடையாளம் காட்டிப் பேசத் தொடங்கியதும் சுக்கிரீவன் இராவணனை நோக்கித் தாவிச் சென்றான்; அவனோடு சண்டையிட்டான்! இறுதியில் இராவணனுடைய மகுடத்தைப் பறித்துத் திரும்பினான்.

இராமனும் இராவணனும் தத்தம் இருக்கைக்கு திரும்பினர். அவ்வாறு திரும்பிச் செல்லும் இராவணன் தலை குனிந்து நாணி நடந்தான். அதனை வர்ணிக்கும் கவிச்சக்கரவர்த்தி,

''என்றானும் இனைய தன்மை எய்தாத இலங்கை வேந்தன்,
நின்றார்கள் தேவர் கண்டார் என்பது ஓர் நாணம் நீள,
அன்று ஆய மகளிர் நோக்கம் ஆடவர் நோக்கம் ஆக
பொன்றாது பொன்றினான், தன் புகழ் என இழிந்து போனான்.
(1094 / 51)

எனப் பாடுகின்றார்.

இராவணன் என்ற பெயரைக் கேட்ட மாத்திரத்தில் அவன் ஒரு கொடியவன், காமுகன் என்றெல்லாம் எண்ணும் அளவிற்குக் காவியத்தில் அவனைக் காட்டும் கம்பர் இந்தப் பாடலில் இராவணன் புகழ் பெற்றிருந்தவன் எனும் கருத்தில் உரைக்கின்றாரே! இது சரியா?

காவியத் தொடக்கத்திலேயே - இராவணன் யார் எனத் தெரியும் முன்பே—கூனியின் வருகையைக் கம்பர் இராவணன் செய்த தீமைக்கு ஒப்பிடுகின்றார்!

''இன்னல் செய் இராவணன் இழைத்த தீமைபோல்
துன்ன அருங் கொடு மனக் கூனி தோன்றினாள்.''

(249 / 47)

எனப் பாடுகின்றார்!

இராவணன் இன்னல் புரிபவன் என்பதைக் கவிச் சக்கரவர்த்தி எவ்வாறு அறிந்தார்? இராம வதாரத்திற்கே அடிப்படைக் காரணமாய் நின்றது தேவர்களின் முறையீடு! அவர்கள், நாரணனிடம்,

''இருபது கரம், தலை ஈர் ஐந்து, என்னும் அத்
திருஇலி வலிக்கு, ஒரு செயல் இன்று, எங்களால்,
கருமுகில் என வளர் கருணை அம் கடல்
பொருது, இடர் தணிக்கின் உண்டு'' (33 / 10)

என்றார்கள். மேலும்,

''ஐ - இரு தலையினோன் அனுசர் ஆதியாம்
மெய் வலி அரக்கரால், விண்ணும் மண்ணுமே
செய் தவம் இழந்தன;— திருவின் நாயக!—
உய்திறம் இல்லை என்று உயிர்ப்பு வீங்கினார்''

(34 / 17)

இவ்வாறு, தேவர்கள் விட்ட பெரு மூச்சின் வழியாய்க் கம்பர் அறிந்த செய்தி, இராவணனால் தேவர்கள் துன்பப் படுகின்றனர், என்பது!

அவர்கள் ஏன் துன்பப் பட்டனர்? இராவணன் அவர்களை முழுமையாய் அடக்கி வைத்திருந்ததனால், அவர்கள் தங்கள் சுதந்திரத்தை இழந்திருந்தனர்; அதுவே அவர்கள் பட்ட துயரம்.

அந்த அளவிற்குத் தேவர்களை அடக்கி வைத்திருந்தவனாக இராவணனைக் கவிச்சக்கரவர்த்தி அவனுடைய மணி மண்டபத்தில் வீற்றிருந்த காட்சியைக் கண்டார்! ஆனால் அவனைக் கொடுரமானவனாக அவரால் காண முடியவில்லை. அவன் வீற்றிருந்த பெருமிதத்தைத் தெளிவாகப் புகழ்ந்து பாடி விட்டார், சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலத்தின் துவக்கத்திலே! (448 / 2—491 / 23)

அவனுடைய அத்தகைய கம்பீரத்தின் அடிப் பீடம் என்ன என்று கம்பர் ஆய்ந்தார்! அதற்கு முதலில் உதவியது, இராமனிடத்தில் சூர்ப்பணகை இராவணனைப் பற்றிக் கூறிய அறிமுகம்! அவள்,

''........................................திக்கின்
மாஎலாம் தொலைத்து, வெள்ளி மலை
எடுத்து, உலகம் மூன்றும்
காவலோன்'' (446 / 39)

என்று இராவணனைக் குறிப்பிட்டாள்.

இதனை உறுதிப்படுத்தி, அவள் தன் அங்கங்கள் கொய்யப் பெற்ற பின்,

''..............................................தேவர் எதிர்
தலையெடுத்து விழியாமைச் சமைப்பதே! தழல்
எடுத்தான்
மலை எடுத்த தனி மலையே!'' (455 / 101)

என இராவணனை விளித்து ஓலம் இடுகின்றாள்! மேலும்,

''.............................................. ஊழியினும்
சலியாத மூவர்க்கும், தானவர்க்கும், வானவர்க்கும்,
வலியானே!'' (455 / 102)

என்கின்றாள். இன்னமும் இவ்வாறு பலபடக் கூறித் தன் தமையனின் புகழையும் பெருமையையும் குறிப் பிடுகின்றாள்.

'தேவர்களை அடக்கி ஆளும் வல்லமை இராவணற்கு எவ்வாறு உண்டாயிற்று?' என சிந்தித்துக் கொண்டிருக்கும் பொழுது, மாரீசன் இராவணனிடமே அதன் ஆதாரத்தை எடுத்துக் காட்டிப் பேசியது கம்பர் காதில் வீழ்ந்தது! மாரீசன், இராவணனைக் கண்டித்து—சீதையை அபகரிக்கும் செயலைக் குறை கூறிப் — பேசுகின்றான்! அப்பொழுது, அவன்,

''அற்ற கரத்தோடு, உன் தலை நீயே அனல் முன்னில்
பற்றினை உய்த்தாய்; பற்பல காலம் பசி கூர
உற்று, உயிர் உள்ளே தேய, உலந்தாய்; பினை
அன்றோ
பெற்றனை செல்வம்? பின் அது இகழ்ந்தால் பெறல்
ஆமோ? (512 | 9)

என இராவணனைக் கேட்கின்றான்.

இதிலிருந்து இராவணன் எப்படிப்பட்ட தவ வலிமை யுடையவன் என்று எண்ணும் பொழுது அவனுடைய புகழ் கவிச் சக்கரவர்த்திக்குத் தோன்றாமல் இருக்க முடி யாது! எனவே, இராவணனுடைய புகழில் பெருமை கொண்டார். இலங்கை மக்கள்,

''அங்கையின் அரன் கயிலை கொண்ட திறல் ஐயன்''
(494 | 43)

என்று அவனைக் குறிப்பிட்டுப் பேசிக் கொள்வதையும் கண்டார். அது மட்டுமா!

கும்பகருணன், இராவணனிடம் நேரிடையாகவே,

''நீ அயன் முதல் குலம் அதற்கு ஒருவன் நின்றாய்;
ஆயிரம் மறைப் பொருள் உணர்ந்து, அறிவு
அமைந்தாய்'' (972 | 48)

என்று அவனுடைய பெருமையைக் குறிப்பிடுகின்றான்.

எடுத்த எடுப்பிலேயே இராமனிடம்,

''நாறு தன் குலக் கிளை எலாம் நரகத்து நடுவான்
சேறு செய்து வைத்தான், உம்பர் திலோத்தமை
முதலாக்
கூறும் மங்கையர் குழாத்திடைக் கோபுரக் குன்றத்து
ஏறி நின்றவன், புன் தொழில் இராவணன்''
(1087 / 2)

எனத் தன் தமையனை அவனுடைய பெருமையும் சிறுமையும் ஒன்றாய்க் காட்டி அறிமுகப் படுத்திய வீடணன், சுக்கிரீவன் இராவணனுடைய மணி மகுடத்தைப் பறித்துத் திரும்பி வந்தவுடன், அவனுடைய வீரத்தைப் பாராட்டு கின்றான். அப்பொழுது,

''வீங்கிய புகழை எல்லாம் வேரொடும் வாங்கி
விட்டாய்!'' (1093 / 44)

என்று கூறுமுகத்தான், இராவணனுடைய புகழின் மேன்மையை வெளிப்படுத்துகின்றான்! மேலும்,

''வடி மணி வயிர ஒள் வாள் சிவன்வயின் வாங்கிக்
கொண்டான்
முடி மணி பறித்திட்டாயோ'' (1094 / 47)

என்று சுக்கிரீவனிடம் கேட்கும் வகையில், இராவணனின் சிவ பக்திப் பெரும் புகழைச் சுட்டுகின்றான்.

இவ்வாறெல்லாம் பல்லோர் வாயிலாகவும் இராவணனின் பெருமைகளைத் தெரிந்து கொண்ட கவிச் சக்கரவர்த்தி கம்பர் அவன் புகழை உணராமல் இருக்க முடியாது! அவ்வாறு உணர்ந்தபின் இராவணனை புகழ் அற்றவன் எனக் கூறினால், அவருடைய மன சாட்சியே அவரை உறுத்தும். என்றாலும், அவனை புகழ் உடையவனாகவே சித்தரித்து விட்டால், தம்முடைய காவியப் போக்கிற்கு மாறுபட்டுப் போகும். எனவே, அவன் தன் புகழ் குன்றிப் போயது, சீதையை அபகரித்த செயலால், எனும்

பொருள்பட, 'தன் புகழ் என இழிந்து போனான்' என்னும் சொற்றொடரைப் பெய்துள்ளார்!

இதனை உறுதிப்படுத்துவது போலவே, இந்நிகழ்ச்சிக்குப் பின்னரும், கவிச் சக்கர வர்த்தி இராவணனுடைய புகழ் நிலைகளை எடுத்துக் காட்டி அது குன்றிய பாங்கினையும் பகர்வார்!

முதற்போரில், இராவணன் இராமனிடம் தோற்றுத் திரும்பிய காட்சியைக் கம்பர்,

''வாரணம் பொருத மார்பும், வரையினை
எடுத்த தோளும்,
நாரத முனிவற்கு ஏற்ப நயம் பட உரைத்த நாவும்,
தார் அணி மவுலி பத்தும், சங்கரன் கொடுத்த வாளும்,
வீரமும், களத்தே போட்டு, வெறுங் கையே
மீண்டு போனான்''
(1142 / 1)

எனப் படம் பிடிக்கின்றார்!

இராவணன் இறந்த பின், வீடணன் அவன் மேல் விழ்ந்து அழுது புலம்புகின்றான்! அப்பொழுது,

''போர் மகளை, கலை மகளை, புகழ் மகளை
தழுவிய கை பொறாமை கூர,
சீர் மகளை, திரு மகளை, தேவர்க்கும்
தெரிவு அரிய தெய்வக் கற்பின்
பேர் மகளை, தழுவுவான் உயிர் கொடுத்து,
பழி கொண்ட பித்தா! பின்னைப்
பார் மகளைத் தழுவினையோ, திசை யானைப்
பணை இறுத்த பணைத்த மார்பால்?''
(1537 / 224)

என இராவணனின் புகழ் நிலைகளை யெல்லாம் காட்டி, சீதையின் மேல் கொண்ட காமத்தால் அவை

யெல்லாம் குன்றிப் பித்தனாய்ப் பழிக்கு ஆளாகியுள்ள நிலையைக் குறிப்பிடுகின்றான்!

நற்குடியிற் பிறந்த ஒரு பெண் தன் கணவனைப் புகழ்ந்து பேசுவது இயற்கை; அந்த வகையில் பத்தினித் தங்கமாகிய மண்டோதரி தன் கணவனைப் புகழ்கின்றாள் என்பது பெரிதல்ல. அந்தப் புகழ் குன்றியதைக் கூறத் தயங்காத பொழுது அவள் தன் கணவன் புகழ் எல்லையை எவ்வாறு நிர்ணயிக்கின்றாள் என்பது தெரிய வருகின்றது! மாண்டு கிடந்த தன் கணவன் இராவணன் உடலின் மேல் வீழ்ந்து புலம்புகின்றாள். அந்த அழு குரலில் ஒன்று,

''தேவர்க்கும், திசைக் கரிக்கும், சிவனார்க்கும்,
அயனார்க்கும், செங்கண் மாற்கும்,
ஏவர்க்கும், வலியானுக்கு என்று உண்டாம்
இறுதி? என ஏமாப்புற்றேன்;
ஆவற் கண் நீ உழந்த அருந் தவத்தின்
பெருங்கடற்கும், வரம் என்று ஆன்ற
காவற்கும், வலியான் ஓர் மானுடவன்
உளன் என்னக் கருதினேனோ?''

(1540 / 240)

என்பதுவும் ஒன்று. இராவணன் எத்துணை தவ வலிமை பெற்றவன்; எவ்வளவு உடல் வலிமை பெற்றவன் என்பதைச் சுட்டிக் காட்டி அவற்றின் பலன் ஒரு மானுடவனால் குன்றியதே என்பதையம் சுட்டிக் காட்டினாள்; அவன் மேல் அப்படியே வீழ்ந்தாள்; உயிர் துறந்தாள்!

இந்த அளவிற்கு எல்லோராலும் இராவணன் புகழப்படுகின்றான்— ஆனால், அத்துணை புகழும் அவனுடைய ஒரு சிறு பிழையால் குன்றியடங்கியது என்பதனால், கவிச் சக்கரவர்த்தி, 'இராவணன் தன் புகழ் என இழிந்து போனான்' என்று பாடியது முற்றிலும் சரியே என உணர்ந்து மகிழ்கின்றோம்!

# 12. உன் அரசு உனக்கு

**போ**ருக்குப் புறப்படும் முன்னே, மரபுப் படி இராவண னுக்குத் தூது அனுப்ப இராமன் முடிவு செய்தான். அதற்கு ஏற்றவன் அங்கதன் என அவனை இலங்கைக்குத் தூது சென்று வரச் செப்பினான்.

அங்கதன் இலங்கையை அடைந்தான். அரக்கனின் இருக்கைபுக்கான். இராவணனுடைய காம்பீர்யத்தைக் கண்டு, அவனுடைய பேராற்றலை அனுமானித்து வியந் தான்; மனத்தினுள்ளே போற்றினான்.

அம்மனோநிலையோடே, இராவணன் முன்னே சென்று நின்றான். அவனை, 'நீ யார்? வந்த காரணம் யாது?' என இராவணன் கேட்டான். அங்கதன், தான் இராமன் அனுப்பிய தூதன், என்பதை,

''பூத நாயகன், நீர் சூழ்ந்த புவிக்கு நாயகன், அப் பூமேல்
சிதை நாயகன், வேறு உள்ள தெய்வ நாயகன், நீ செப்பும்
வேத நாயகன், மேல் நின்ற விதிக்கு நாயகன், தான் விட்ட
தூதன் யான்; பணித்த மாற்றம் சொல்லிய வந்தேன்''
(1102 / 21)

எனும் பாடலால் தெரிவித்தான்.

'குரங்குக் கூட்டத்தை வைத்துக் கொண்டுள்ள ஒரு மனிதனா உலகநாதன்?' என்று ஏளனம் செய்தான்,

இராவணன். 'அத்தகையவனுக்காகத் தூது வந்துள்ள நீ யார்?' எனக் கேட்டான்.

தான் வாலியின் மைந்தன் என அங்கதன் கூறினான். உடனே, இராவணன், தானும் வாலியும் உற்ற நண்பர்கள் என்றான்; அதற்கு, அறத் தெய்வம் சாட்சி என்றான்; அங்கதனாகிய மகனை அடைந்துள்ளமைக்கு மகிழ்வதாகக் கூறினான். மேலும்,

''அந்நரர் இன்று, நாளை, அழிவதற்கு ஐயம் இல்லை;
உன் அரசு உனக்குத் தந்தேன்; ஆளுதி, ஊழி காலம்;
பொன் அரி சுமந்த பீடத்து, இமையவர்
போற்றி செய்ய,
மன்னவன் ஆக, யானே சூட்டுவென்,
மகுடம் என்றான்'' (1103 / 26)

தெய்வமே மனிதனாய்ப் பிறக்கினும், மானுடன் தெரிந்தோ தெரியாமலோ, சூழ்நிலைகளுக்கு ஆட்பட்டோ கட்டாயத் தேவை கருதியோ சிறு பிழைகளுக்கும், சில சமயங்களில் பெரும் பிழைகளுக்கும் ஆளாகியே தீர்வான். அப்பிழைகளைப் பின்னரேனும் உணர்ந்து வருந்துவார்கள் வாழ்வாங்கு வாழும் பெரியோர்கள். அத்தகையவர்களின் பிழைகளைப் பிறர் எடுத்துக்காட்டத் தயங்குவர்! என்றாலும் அவர்களுக்கு மாறுபட்டு நிற்பவர்கள் அப்பிழைகளைக் குறிப்பாகவேனும் எடுத்துக் காட்டிக் குத்திப் பேசுவது மனித இயல்பு!

அந்த வகையில், இராமன் அறிந்தே செய்த பிழை 'வாலிவதம்'; அதுவும், வாலியை மறைந்து நின்று அம்பெய்து வீழ்த்தியது அவன் நிலைக்கு வேண்டாத ஒன்று. அதனை, இராமனே உணர்ந்து, 'வில்லறம் துறந்தேன்' என்று கூறிக் கொள்ளுகின்றான். இப்பிழையை இராமனுக்கு மாற்றானாகிய இராவணன்,

''வாலி தன்னை, அம் மனிதனும்,
மறைந்து நின்று எய்தான்'' (982 / 108)

என்று குறிப்பிட்டான்.

அதே போல், வாலியின் வாரிசாக அவனுடைய மைந்தன் அங்கதன் இருக்க சுக்கிரீவனுக்கு இராமன் மகுடம் சூட்டுவித்து மரபு வழி மாறுவதும் பிழையே. அதனை நினைந்துணர்ந்தே இராமன், அங்கதனிடம்,

''நீ இது பொறுத்தி'' (646 / 159)

என்று கேட்டுக் கொண்டான்; அங்கதனுக்கு இருக்கும் உரிமையை உறுதிப்படுத்தி அவனிடம் தன் உடைவாளையும் தந்தான்.

மரபினைக் காவாத இப்பிழையை இராமனுக்குச் சுட்டிக் காட்டவே, வாலி, இராமனை,

''வாய்மையும் மரபும் காத்து மன் உயிர் துறந்த
வள்ளல்
தூயவன், மைந்தனே! நீ பரதன் முன்
தோன்றினாயே!'' (636 / 84)

என்று ஏளனம் தொனிக்க விளித்தான்!

அனுமனும் சுக்கிரீவனும் முதன் முதலில் இராம இலக்குவரைக் கண்டு நட்பு பூண்ட பொழுது சுக்கிரீவனின் நிலை பற்றியெல்லாம் அனுமன் இராமனுக்கு எடுத்துரைத்தான்! வேண்டாத வியவகாரமாக, அடிப்படையில் ஆதாரம் அற்ற 'ருமை' வியவகாரத்தைக் கூறி இராமனுக்கு வாலியின் மேல் ஆத்திரத்தை மூட்டினான்! வாலியின் வாழ்க்கை பற்றி முழுமையாக விளக்கினான்! ஆனால், வாலிக்கு அங்கதன் என்று ஒரு மகன் இருக்கின்றான் என்பதைத் தெரிவிக்கவேயில்லை! ஏன்? அவன் தான் 'சொல்லின் செல்வன்' ஆயிற்றே! அந்த உண்மையைக் கூறியிருந்தால் மரபை விட்டு இராமன் சுக்கிரீவனுக்கு முடி

சூட்ட மாட்டான் என்பது அவனுக்குத் தெரியும்! இது அவன் அறிந்தே செய்த பிழை! என்றாலும், அமைச்சர் என்ற முறையில், நல்ல ராஜ தந்திரி என்ற பாங்கில், தாங்கள் நினைந்த காரியம் வெற்றியடையும்படி அவன் பேசினான் என்று கூடப் போற்றப் பெறலாம்!

ஆனால், இராமன் முழுச் செய்திகளையும் கேட்டுத் தெரிந்து உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டாமா? தவறி விட்டான்! அதன் விளைவாக, முன்பின் யோசியாதவன் போல்,

''உலகம் ஏழினோடு ஏழும் வந்து அவன் உயிர்க்கு உதவி
விலகும் என்னினும், வில்லிடை வாலியின் வீட்டி
தலைமையோடு, நின்தாரமும், உனக்கு இன்று தருவென்;'' (612 / 70)

என்று உறுதி மொழி தந்துவிட்டான். அவ்வாறு தந்த வாக்கை நிறைவேற்றியும் விட்டான்.

இராமன், அறியாது ஆற்றிய பிழை இது. என்றாலும், அப்பிழை பற்றிக் கவிச்சக்கரவர்த்திக்கு நேரிடையாகப் பாடுவது என்பது இயலாதது ஆகிவிட்டது; அவர் இராமனைப் பிற பாத்திரங்கள் வாயிலாக மட்டும் அன்றி, கவிக் கூற்றாகவும் வானளாவப் புகழ்ந்து பாடி அவனுடைய அம்சங்களைப் போற்றியிருப்பதனால்! எனினும், இராமன் தானே ஒப்புக்கொண்டுள்ள அத்தவற்றைப்பற்றி எங்கா கிலும் குறிப்பிடாமல் விட்டால், ஆய்வு நோக்கில், கம்பர் பாரபட்சமான கருத்துக்களுக்கு ஆளாகிவிட்டார் என்ற அவச் சொல்லிற்கு ஆளாக வேண்டி நேரிடுமே என அஞ்சி னார்! எனவே இராமனை ஒரு மானுடன் என்று மட்டுமே கண்டு கொண்டு இருக்கின்ற இராவணன் வாயிலாகக் குறிப் பிட்டுவிட்டார்!

'உன் தந்தையைக் கொல்வித்தான் சுக்கிரீவன்; அவனுக்குப் பின்னே நீ ஏமாளியாய்ச் சுற்றித் திரிகின்றாய்; அந்தப் பிழை, நீ இப்பொழுது என்பால் வந்து விட்டதால் அழிந்தது' என அங்கதனிடம் கூறினான். மேலும், 'உன் தந்தை இறந்தபின், மரபு வழி, கிட்கிந்தை அரசு நினக்குச் சொந்தம்; (அதனைவிட்டு இராமன் நின் சிற்றப்பா சுக்கிரீவனுக்கு முடி சூட்டியது முறையல்ல). நினக்குச் சொந்தமான அவ்வரசை நினக்கே ஆக்கித் தருவேன்! ஏன், யானே நினக்கு முடி சூட்டுவேன்! அதற்குத் தக்க மன்னவன் நானே யாவேன்!' என்றெல்லாம் கூறுகின்றான்!

தன் தந்தை இறக்க, அரசு தன்னதே என்று முதலிலேயே உரிமை பாராட்டாததும், இராவணன் எடுத்துக் கூறியதை மறுத்து உரைத்ததும் அங்கதனின் சொந்தக் கருத்து. ஆனால், இராமனின் இச்சிறு பிழையைக் காட்டாமல் காட்டுவது கம்பரின் கருத்து!

# 13. தீது உறு சிறு தொழில் அரக்கன்

முதற்போர் நிகழ்ந்து கொண்டிருந்தது. அரக்கர் சேனையில் வச்சிரமுட்டி போன்ற பெரும் வீரர்கள் ஆயிரவர் அழிந்தனர். நான்கு திசைகளிலும் குரங்குப் படை சூழ்ந்து கொண்டது. அரக்கர்களுக்கு வெற்றி முகமே இராது போர் நீடித்துக் கொண்டிருந்தது. இதனை இராவணனிடம் தூதுவர்சள் எடுத்துக் கூறினர்.

இராவணன் மிகவும் சினந்து துள்ளினான். தானே போருக்குச் சென்றான். இதனை ஒற்றர்கள் இராமனிடம் கூறச் சென்றனர்.

''ஓதுறு கருங் கடற்கு ஒத்த தானையான்,
தீது உறு சிறு தொழில் அரக்கன்,
போது உறு பொருள்களம் புகுந்துள்ளான்
சிற்றத்தால் எனத்
தூதுவர், நாயகற்கு அறியச் சொல்லினார்''
(1120 / 107)

இங்கு, இராவணன் 'தீது உறு சிறு தொழில் அரக்கன்' எனப் படுகின்றான். அவன் எப்பொழுதும் தீமை பயக்கக் கூடிய அற்பச் செயல்களைப் புரியும் ஓர் அரக்கன் என்பது, பொருளா?

அப்படியானால், 'இராவணன் புகழ் பெற்றிருந்தவன்; அது தேய்ந்து அழிந்தது போல அவன் தன்னுடைய

மகுடம் சுக்கிரீவனால் திடீரெனப் பறிக்கப்பட்டதனால் நாணித் தலை குனிந்து சென்றான்' என்றப் பொருளில் கம்பர்,

> "என்றாலும் இனைய தன்மை எய்தாத இலங்கை வேந்தன்
> நின்றார்கள், தேவர் கண்டார் என்பது ஓர் நாணம் நீள
> அன்று ஆய மகளிர் நோக்கம் ஆடவர் நோக்கம் ஆக
> பொன்றாது, பொன்றினான், தன் புகழ் என இழிந்து போனான்" (1094 / 51)

எனப் பாடியுள்ளது தவறா?

சதியைப் பிரிந்துள்ள பதி, சதிபதியாய்க் கானகத்தினுள் நுழைந்த சீதாபதி, அவன் சீதையின் பிரிவால் பட்ட மனோ வேதனைகள் ஒன்று இரண்டு அல்ல. கொஞ்ச நஞ்சமல்ல! தன்னினும் இளையவர்க் கூட அவனுக்கு ஆறுதல் கூற வேண்டிய அளவிற்கு அவன் அவ்வப்போழ்து மனந்தளர்ந்து அமுங்கியிருக்கக் காண்கின்றோம்!

எத்தகைய மேம்பாடு உடையவனையும்— புகழ் படைத்தவனையும்— பதவியில் வீற்றிருப்பவனையும் அவன் தெரிந்தோ தெரியாமலோ செய்து விட்ட சிறு குற்றச் செயலும் தாழ்த்திக் காட்டிவிடும்! இதற்கு உதாரணம், இராமனையேகூட எடுத்துச் சொல்லலாம்! அவன் செய்த வாலிவதம் என்னும் செய்கை அவனுக்கே மாசு கற்பித்து நிற்கக் காண்கின்றோம்! ஆக, அவ்வாறான குற்றச் செயலை ஆற்றியிருப்பவன், இராவணன். தெரிந்தேதான் அக்குற்றம் செய்தான். அது பிழையும் அன்று. மாற்றான் மனைவியை வெளவிய மாபெரும் பாபச் செயல்; இராமனின் இல்லாள் சீதையையே தவறான நோக்கத்தோடு தூக்கிச் சென்றவன். அத்தகையவனை, 'இலங்கை வேந்தன்' என்றோ 'இராவணன்' என்றோ குறிப்பிடலாம்.

ஆனால், ஒற்றர்கள் அவனை அவ்வாறு குறிக்காமல் அவனுடைய குற்றச் செயலைக் குறிப்பிட்டே கூறினர்! ஏன்?

மாபெரும் குரங்குப் படையுடன் இராமன், சீதையை மீட்கவே இலங்கைக்கு வந்துள்ளான்; எனினும், அவனு டைய தோள்கள் அவளுடைய பிரிவால் ஏங்கித் தளர்ந்தே இருந்தன. இந்த நிலையில் 'மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா' என்ற பழமொழிக்கு ஏற்ப இராவணன் சீதையை விட்டிடாமல் இருக்கப் பெரும் வீராவேசத்துடன் போர் புரிவான்; தளர்ந்த தோள்களோடு இராமன் அவனை எதிர்த்தால் வெற்றி யாருக்கு ஆகுமோ எனக் கவிச்சக்கரவர்த்தி உறுதியின்றியிருந்தார். எனவே, இராமனையும் வீராவேசமாய் நிற்க வைக்க எண்ணினார். எந்த அடிப்படைக் காரணம் கொண்டு இலங்கைக்கு வந்தானோ, எந்த அடிப்படைக் காரணம் தன் நினைவு, உணர்ச்சிகளை பிழிந்தெடுத்துக் கொண்டிருக்கிறதோ, எந்த அடிப்படைக் காரணம் தன் மான உணர்விற்கு சவால் விட்டு நிற்கின்றதோ அதனை இராமனுக்கு நினைவூட்டினால் அவனுடைய சினம் எல்லையை மீறும். முழு போர் வலிமையோடு எதிர்ப்பான் என்று கம்பர் உறுதியாய் நம்பினார். அவ்வாறே அக் காரணத்தைச் சிறப்புற நினைவுறுத்தி இராவணனை,

''தீது உறு சிறு தொழில் அரக்கன்'' என ஒற்றர் மூலம் சுட்டிக் காட்டினார்!

அதுமட்டும் அன்று; பின்னோக்கிய காட்சி ஒன்றையும் கவிச்சக்கரவர்த்தி இராமன் நினைவுகூரச் செய்கின்றார்!

சுக்கிரீவன் நிலைமையைக் கிட்கிந்தையில் அனுமன் இராமனுக்குத் தெளிவாக எடுத்துரைக்கின்றான். 'ருமை' வியவகாரத்தையும் தெளிவில்லாத வகையில்—இராமன் கேட்ட மாத்திரத்திலேயே வாலியின் மேல் ஆத்திரத்தைக் காட்டும் வகையில் கூறினான். அனுமன் எதிர்பார்த்த

வகையில் இராமனும் சினம் கொண்டான், அச்செய்தி கேட்டவுடனேயே!

'ஆத்திரக்காரனுக்கு புத்தி மட்டு' என்னும் பழமொழி, யார்க்கும் பொதுவல்லவா! இராமனும் மனிதன் தானே! தன் ஆத்திரத்தில் அனுமன் கூறியதின் உண்மை என்ன என்று ஆய்ந்திடாமல் சுற்றுச் சூழலைப் புரிந்து கொள்ளாமல் வாலியை வீழ்த்தினான்! வாலி பின்னர் எவ்வளவு வாதாடினான்; அவனுடைய இறுதி வினாவிற்கு இராமனே விடை இறுக்க முடியாமல், இலக்குவன் ஏதோ ஒரு பொருந்தாக் காரணம் கூறவேண்டியதாயிற்று.

இவ்வாறு யாரோ ஒருவனைப் பற்றி அடுத்தவன் மனைவியுடன் அவனை இணைத்துப் பேசியதையே சகிக்காமல் இராமன் தண்டிக்கும் செய்கையில் இறங்கினான். தன் மனைவியைப் பறிகொடுத்து நிற்கும் அவலநிலை அவனுக்கு எவ்வளவு சினத்தை ஊட்டும்! தன்னுடைய அந்தச் செய்கையை இராமன் நினைத்துப் பார்த்தான். தாழ்ந்திருந்த தன் தோள்கள் வீங்கப் பெற்றான் என்பதனை,

''ஆங்கு, அவன் அமர்த் தொழிற்கு அனுகினான், என,
வாங்கினென் சீதையை என்னும் வன்மையால்,
தீங்குறு பிரிவினால் தேய்ந்த தேய்வு அற
வீங்கின, இராகவன் வீரத் தோள்களே''

எனக் கவிச்சக்கரவர்த்தி படம் பிடிக்கின்றார்!

(1120 / 108)

ஆக, இராமன் அடிப்படை உண்மையின்றியே வாலி—ருமை இணைப்பை நம்பி வாலியைக் கொலை செய்ததை நினைத்துப் பார்க்கவும் இப்பொழுது தன் மனைவியை மீட்கும் வேகம் பெறவும் அவனைத் தூண்டுவிக்கக் கவிச் சக்கரவர்த்தி ஒற்றர் மூலம் சொல்வித்ததே,

''தீது உறு சிறு தொழில் அரக்கன்'' என்ற சொற்றொடர் என உணர்ந்து உவக்கின்றோம்!

# 14. வீரற்கு உற்றது!

மூதற் போர் பகுதியில் இராவணனும் சுக்கிரீவனும் மோதினர். சுக்கிரீவன், சற்று நேரத்தில் தளர்ந்தான். அந்நிலையில் அனுமன் வந்தான். ஒரு மரத்தை எடுத்து இராவணன் மீது வீசிட, அது அவனுடைய சாரதியின் தலையைச் சிதைத்தது, சினத்தின் மிகுதியால் இராவணன் தெய்வத் தன்மை வாய்ந்த நூறு கணைகளை அனுமன்மேல் வீசினான்; அனுமன் உடலினின்று இரத்தம் பீறிட்டு வந்தது; அவன் சோர்ந்து, மயங்கி வீழ்ந்தான். அச்சூழ் நிலையில் இராவணன் வீரவுரை பேசி நின்றான்.

தனித்து நின்றிருந்த இராவணனுடன் பொருது நிற்க, இலக்குவன் அங்கு வந்தான், இருவருக்கும் கடுமையான போர் நிகழ்ந்தது. அச்சமயத்தில் அயர்வு நீங்கிய அனுமன் எழுந்து இராவணனிடம் வீரவுரை புகன்றான்.

'ஏ! இராவணனே! நீ இனியும் பொய்ம்மையான சில போர்களைச் செய்து கொண்டிருக்க வேண்டாம். இவற்றைப் பின்னால் செய்வாயாக. இப்பொழுது ஒன்றுரைக்கின்றேன் கேள்.

மூன்று உலகங்களையும் வென்றவன்தான் நீ. இந்திரனின் புகழ் ஒடுங்கும்படியாக அவனையும் வென்றவன் தான் நீ! எட்டுத் திசைகளில் வென்றியோடு புகழ் பரப் பியவன் தான், நீ! என்றாலும் இன்று உனக்கு அழிவு ஏற்படப் போகின்றது.

இதோ பார், என் நெடிய வடிவத்தை! நீ வில்லாயுதம் போன்றவற்றில் நல்ல தேர்ச்சி பெற்றுள்ளாய்! வலிமை

பொருந்திய இருபது தோள்களைக் கொண்டுள்ளாய்! போர்த்திறனும் நீ நிரம்பப் பெற்றுள்ளாய்! என்றாலும் என்னை எதிர்த்து நில் பார்ப்போம்!

வீரம் நிறைந்தவனாய் எதிரில் நிற்கின்றாய்! இது தொடர்ந்து நிற்கக் கூடிய காரியமா? நின் வாளாண்மையும், ஈரேழு உலகங்களையும் அடக்கி ஆளும் வல்லமையும், நின் முயற்சியின் மேம்பாடும், யாரும் உனக்கு ஒப்பு ஆகாத தனிப் பெருமையும், உன் புகழும் அழியுமாறு உன்னை ஒரே குத்தில் வீழ்த்திடுவேன். அதனை நீ தாங்க வல்லாயோ?

என்னுடைய வலிய கரத்தினால் நான் உன்னைக் குத்த, நீ அதனையேற்றும் சாகாமல் இருந்தாயேயானால், உன் இருபது கரங்கள் கொண்டும் என்னை நீ குத்துவாயாக. அதனைத் தாங்கிக் கொண்டு நான் இறவாது இருப்பேனாகில் உன்னுடன் மறுபடியும் நான் போர் புரிய மாட்டேன்'' என்றெல்லாம் வீரம் பேசினான், அனுமன்!

இவ்வாறு அனுமன் தன் எதிர் நின்று வீரம் பேசியதைக் கேட்டு இராவணன் வியந்தான்! அவன், அனுமனைப் பார்த்து,

''வீரற்கு உரியது சொற்றனை;—விறலோய்!
—ஒரு தனியேன்
நேர் நிற்பவர் உளரோ, பிறர் நீ அல்லவர்!
இனி, நின்
பெருக்கு உலகு அளவே; இனி உளவோ பிற?''
(1129 / 167)

என்றான். மேலும் இறுதியில்,

''பூணித்து இவை உரைசெய்தனை; அதனால்,
உரைபொதுவே;
பணித்தாது; பிறிது என் சில பகிர்கின்றது?'
பழியால்

நாணித் தலை இடுகின்றிலென்; நனி வந்து,
உலகு எவையும்
காண, கடிது எதிர் குத்துதி'' என்றான்,
வினை கடியான்.'' (1130 / 172)

ஒரு குரங்கினைப் பார்த்து, அதனுடைய சவாலை ஏற்று, பேசுகின்ற இராவணன், 'வீரற்கு உரியது சொன்னாய்'' என ஏன் குறிப்பிடவேண்டும்? அப்படியென்றால் இதுவரை அவனை எதிர்த்துப் பேசியவர்கள் எல்லாம் வீரற்கு உரியதைப் பேசவில்லையா?

இலக்குவன், இராவணனைப் பார்த்து,

''காக்கின்ற என் நெடுங்காவலின் வலி நீங்கிய
கள்வா!
போக்கு இன்று உனக்கு அரிது'' எனப்புகன்றான்.
(1127 / 57)

மேலும் அவன் விட்ட அம்புகளை இராவணன் அறுத்து வீழ்த்திய பொழுது,

''ஐது ஆதலின் அறுத்தாய்; இனி, அறுப்பாய்!''

என்று கூறி வன்மையான அம்புகளை எய்தானே!

அந்த இலக்குவன் பேச்சுக்கள் எல்லாம் வீரப் பேச்சுக்கள் இல்லையா?

அதற்கும் முன்னே, தூதனாகச் சென்ற அங்கதன் இராவணனை, அவன் சபையிலேயே 'நாய்' என்றானே!

''அங்கதன் அதனைக் கேளா அங்கையோடு அங்கை
தாக்கி,
துங்கவன் தோளும் மார்பும் இலங்கையும் துளங்க
நக்கான்;
'இங்கு நின்றார்கட்கு எல்லாம் இறுதியே'' (1103 / 28)

என்றான்!

''நீ தரக் கொள்வென் யானே?
இதற்கு இனி நிகர் வேறு எண்ணின்,
நாய் தரக்கொள்ளும், சியம், நல் அரசு!'' என்று
நக்கான்.'' (1103 / 29)

அப்படிப்பட்ட அங்கதன் பேச்சுக்கள் வீரற்கு உரியன அல்லவா?

இனி, அவ்வாறு அனுமனை மாவீரனாய்க் காணும் இராவணன் அவனை ஒரு குரங்கென்றும், அக் குரங்கு தன் எதிரில் வந்து நின்று வீரம் பேசிய நிலையே தனக்கு இழுக்கானது என்றும், அதனால், தான் நாணித் தலை குனிய வேண்டியதாயிற்றே என்றும் இயம்புகின்றானே! அதன் உட்பொருள் என்ன?

அவ்வாறு, தான் நாணும்படியான உருவத்தையுடைய குரங்கை, அவன் தன் பேச்சின் இடையில், 'நெடியோய்' என்று பெருமையாய் (1129 / 168) விளிக்கின்றானே! அது ஏன்?

இத்துணை கேள்விகள் எழும் வகையில் இராவண—அனுமன் வீரஉரைச் சவால்களை உட்புகுத்த கம்பர் உளம் கொண்டது ஏன்? கவிச் சக்கரவர்த்தியினை அடிமன எண்ணம்—இராமன் வாலியை மறைந்து நின்று கொன்ற செயல் — அவருடைய மனத்தை நெருடிக் கொண்டேயிருந்தது போலும்! இருபெரும் மாவீரர்கள் நேருக்கு நேர் நின்று போர் புரியும் கட்டத்தில் அவருடைய எண்ணக் கிளரல்களை எடுத்தியம்பக் காத்துக் கொண்டிருந்தார் போலும்! அனுமன் தன் எதிரில் வந்து சவால் விடுவதை இராவணன் மெச்சியும், இராவணன் தன் எதிரில் நின்று சவால் விடுவதை அனுமன் மெச்சியும் பேசும் உரையாடலை வைத்து விட்டார்! இதன் மறைபொருளாக, அந்த மறை பொருளான இராமன் மறை பொருளாகத் தன் வாளியை வாலியின் மேல் பாய்ச்சியதைக் கம்பர் 'தவறு' என்று சொல்லாமல் சொல்கின்றார்!

வாலி வதையிலும் ஒரு குரங்கு—ஒரு மனிதன்; இங்கும் ஒரு குரங்கு—ஒரு அரக்கன்; அங்கும் இராமனில் தெய் வீகத் தோற்றம் — இங்கும் அனுமனில் ஒரு தெய்வீகத் தோற்றம்!

ஆனால், அங்கு இராமன் தன் தெய்வீகத் தோற்றத் தைக் காட்டியது, வாலி, நியாயமான பற்பல கேள்விக் கணைகளைத் தொடுத்தபின்; இங்கோ அனுமன் தன் பேருருவை முதலிலேயே காட்டிவிடுகின்றான். அதனைக் கம்பர்,

''..................உலகு அளந்தான் என நிமிர்ந்தான்''
(1128 / 161)

எனக் காட்டுவார். அதனை மனத்து இருத்தி இராவண னும் அனுமனை, 'நெடியோய்!' என்கின்றான்.

ஆக, 'இந்தக் காட்சியை—அனுமன் முதலிலேயே தன் பேருருவைக் காட்டிய முறையை—இராமனும் கையாண்டி ருக்கலாம்; மறைந்து நின்று தாக்கியிருக்கத் தேவையில்லை' என்று கம்பரின் உள் மனத்தில் உறுத்திக் கொண்டிருந்த எண்ணம் இவ்வாறெல்லாம் எடுத்தியம்பச் செய்து விட்டது.

அது மட்டும் அல்ல. அனுமனும் இராவணனும் ஒருவர்க் கொருவர் நேர் நின்று வாதாடியதில் அவர்கள் இருவரை யுமே ஒருவர்க்கொருவர் போற்றிக் கொள்ளச் செய்ததுவும், இராமனும் வாலியின் முன் வந்து நின்றிருந்தால் அவர் களுக்கு இடையேயும் ஆரம்பத்திலேயே இணக்கம் ஏற்பட்டு நல்லபடியாக முடிந்திருக்கும் என்பதுவும் கம்பரின் அடிமனத் தூண்டுதல்.

அனுமன் எதிர்க்கும் இக் காட்சியில் கம்பர் ஏன் தன் அடிமன எண்ணத்தைப் பட்டும்படாமலும் குறிப்பிட நினைந்தார்? அனுமன் தான், இராமன் மறைந்து நின்று வாலியைக் கொல்லச் செய்யும் கட்டத்திற்கு வழி

கோலியவன்! அனுமன், ருமை வியவகாரத்தை வாக்கு வன்மையோடு கூறியதனால் தான் இராமன் சினங்காட்டினான். வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு மகுடம் சூட்டுவதாய்க் கூறினான். அச் சொல் நிறைவேறுவதற்கு மறைந்திருந்து கொன்றான்! பின்னர், 'வில்லறம் துறந்தேன்' என தனக்குத் தானே நொந்து கொண்டான்.

ஆக, எந்த அனுமன் இராமனின் வீரம் குன்றிய செயலுக்குக் காரணம் ஆகினானோ அந்த அனுமன் வாயிலாகவே தன் உட்கருத்தை உரைக்க முற்பட்டு விட்டார் கவிச் சக்கரவர்த்தி!

இக்காட்சியினால் இனியொன்றும் தெரியவருகின்றது. அதாவது இராவணனுக்கு மல்யுத்தம் தெரியும். அப்படியிருக்க அவன் ஆயுதங்கள் அனைத்தையும் இழந்து நின்ற பொழுது இராமன் அவனை மல்யுத்தத்திற்கு அழைத்து போரினைத் தொடர்ந்திருக்கலாமே! அதனை விடுத்து,

'இன்று போய் போர்க்கு நாளை வா!'

என்று கூறுவானேன்? (1141 / 255)

'இராம இலக்குவர் விற்போர் ஒன்றினில் தான் வல்லவர்கள். மற்போர், வேல்போர் முதலிய பிறவற்றுள் பயிற்சி குறைந்தவர்கள்' என்ற பாங்கில் சிலர் கண்ணோட்டம் செய்வதும் உண்மைதானே?

இராவணனே அவ்வாறுதான் நினைக்கின்றான், இலக்குவனுடன் முதற் போரிலே பொருத நிலையில்!

''வில்லினால் இவன் வெலப்படான்' எனச்
சினம் வீங்க,
'கொல்லும் நாளும் இன்று இது' எனச்
சிந்தையில் கொண்டான்,
பல்லினால் இதழ் அதுக்கினான்; பரு வலிக்கரத்தால்
எல்லின் நான்முகன் கொடுத்தது ஓர் வேல்
எடுத்து எறிந்தான்'' (1134 / 205)

எனக் கம்பர் பாடுகின்றார்!

இந்த எண்ணம் சரியானதுதான் என்றுமாப்போல, இராவணன் வேல் எறிய இலக்குவன் அதனை தாளாது களத்தில் அயர்ந்து வீழ்ந்தான் எனக் காட்டிக் கம்பர்,

''எறிந்த காலவேல், எய்த அம்பு யாவையும் எதிர்த்துப்
பொறிந்துபோய் உக, தீ உக, விசையினின்
பொங்கி,
செறிந்ததாலவன் மார்பிடைச் சென்றது; சிந்தை
அறிந்த மைந்தனும், அமர் நெடுங்களத்திடை
அயர்ந்தான்'' (1135 | 206)

என்று பாடுகின்றார்!

இராமனும் இதே நிலையினன்தான் என்பதையும் கம்பர் குறிப்பால் உணர்த்துகின்றார்!

தன்னுடைய வேல் பாய்ந்து மயங்கிக் கிடக்கும் இலக்குவனை இராவணன் எடுத்து அமர்த்த முயல்கின் றான்! அவனால் இயலவில்லை. அதனைக் கூற வந்த கவிச்சக்கரவர்த்தி இலக்குவனை, 'இராமனுக்கு இளை யான்' எனச் சுட்டுகின்றார்! 'இளையான்' எனும் சொல் இரு பொருள் காட்டி நிற்கின்றது. ஒன்று, 'இராமனுக்கு இளையவன் — தம்பி — ஆகிய இலக்குவன்'. அடுத்தது, இராமனைக் காட்டிலும் வலிமையில் இளைக்காதவன்— அதாவது இராமனின் வலிமையை ஒத்தவன், (ஏன் மீறியவன் என்றுகூடக் கொள்ளலாம்!)— என்பதாகும். எனவே, இராமனுக்குச் சளைக்காத பெரு வலிமை கொண்ட அந்த இலக்குவனே இராவணனால் எடுக்க முடியாத அளவுக்கு கிடந்தான், வேலைத் தடுக்க இயலாமல் வீழ்ந்து, என்றால் இராமனின் நிலையும் அது தான் என்றாகின்றது! அதன் காரணம் அவனுக்கும் வேல், வாள் கொண்டு பொரவோ மற்போர் புரியவோ முழுத் திறன் இன்மையே என்றாகின்றது.

'எவ்வாறாயினும், தன் மனைவியைக் கவர்ந்து சென்றுவிட்டவனாகிய என் முகத்தில் விழிக்கவும்—

நேருக்குநேர் நின்று போர் புரியவும்—தயங்காத இராமன், தம்பியின் மனைவியை இச்சித்தான் என்று வேறொருவன்—அனுமனாகிய நீ சொன்ன காரணத்தைக் கொண்டே களங்கமற்ற வாலியை மறைந்து நின்று கொன்றானே! எதிரியை, நேருக்கு நேர் நின்று போர் புரிந்து வெல்லும் ஆற்றல் அவனுக்கு இல்லையா? என்றாலும், அவனைச் சார்ந்த நீயாகிலும், எதிரியாகிய என்னை நேருக்கு நேர் எதிர்த்து நின்று சவால் விடுகின்றாயே! வீரனுக்கு உரிய வகையில் வலிமை காட்டுகின்றாயே!' அதனை நான் மிகவும் பாராட்டுகின்றேன்!' என்று அனுமனைப் பார்த்து இராவணன் கூறுமாப்போலே பாடலை அமைத்துத் தன் உள்ளக் கிடக்கையைக் கவிச்சக்கரவர்த்தி மறைமுகமாக—சொல்லாமல் சொல்லி — வெளிப்படுத்தி விட்டார்!

# 15 அவற்கு ஏவல் செய்து இருத்தி!

முதற்போரின் இறுதிக் கட்டமாக இராவணன் இராமனுடன் பொருதான்; மணி முடி இழந்தான்.

''அறம் கடந்தவர் செயல் இது' என்று உலகு எலாம்
ஆர்ப்ப,
நிறம் கரிந்திட, நிலம் விரல் கிளைத்திட, நின்றான்—
இறங்கு கண்ணினன், எல் அழி முகத்தினன், தலையன்
வெறுங் கை நாற்றினன், விழுதுடை ஆல் அன்ன
மெய்யன்'' (1141 / 249)

என்று கவிச் சக்கரவர்த்தி அவனைப் படம் பிடிக்கின்றார்!

இராவணன் அவ்வாறு நாணி நின்றிருந்த சமயத்தில், இராமன் அவனுக்கு அறிவுரைகள் கூறலானான்.

''சிறையில் வைத்தவள் தன்னை விட்டு, உலகினில்
தேவர்
முறையில் வைத்து, நின் தம்பியை இராக்கதர்
முதல் பேர்
இறையில் வைத்து, அவற்கு ஏவல் செய்து
இருத்தியேல், இன்னும்,
தறையில் வைக்கிலென், நின் தலை வாளியின் தடிந்து''
(1141 / 253)

என்றும் கூறினான்.

முன்னவன் முடி மன்னனாய்—மன்னர்க்கு மன்னனாய்—வீற்றிருந்து அரசு ஓச்சும் நிலையில், அவன் தானே முன்வந்து

தன் இளையனுக்கு முடி சூட்ட வேண்டுமென்று கூறுவது முறையா?

அது முறையாகாது என்பதனை இராமனிடம் அவனுடைய, தாய் கோசலையே கூறியுள்ளாளே! பரதனுக்கே பட்டாபிஷேகம் நாளை என்றதும், அவள்,

''முறைமை அன்று என்பது ஒன்று உண்டு'' (271 / 4)

என மொழிகின்றாள்! அப்படியிருக்க, நெறி முறைகளும் மரபுகளும் நன்குணர்ந்த நாயகன் இராமன் இராவணனிடம் தானே தன் தம்பி வீடணனை அரக்கர்க்கு அரசனாக்கச் சொல்லலாமா?

மனைவிக்குக் கொடுத்த வாக்கினால், தான் உலகியல் மரபினை மீறுவதாக உணர்ந்ததனால் அல்லவா இராமனின் தந்தை—தயரதச் சக்கரவர்த்தி—தன் உயிர் துறந்து,

''வாய்மையும் மரபும் காத்த வள்ளல்''

என்னும் புகழ் பெற்றான். அப்படியிருக்க இராமன், மரபினைத் தவிர்க்கும் வகையில் இராவணனிடம் சொல்வானேன்?

சீற்றத்தின் எல்லையில் நிற்கும் இலக்குவன் கூட சிந்தைத் தெளிவோடு,

''மெய்யைச் சிதைவித்து, நின்மேல் முறை நீத்த
நெஞ்சம் (287 / 123)
மையின் கரியாள்''

என்று கைகேயியைக் குறிப்பிட்டு இராமனிடம் சூளுரைக்கின்றானே. அவனுக்குத் தெரிந்த முறை அண்ணலுக்குத் தெரியாதா?

தன் தாய் பெற்ற வரத்தால் கோசல நாட்டாட்சி தனக்கே வரப்பெற்ற பரதன் அதனை வேண்டாம் என்

கின்றானே! ஏன்? மரபு மாறுகிறது; அம்மாற்றத்தை உண்டாக்கும் பழி தன்னை வந்து சாரும் என்று அஞ்சி,

''சுழியுடைத் தாயுடைக் கொடிய சூழ்ச்சியால்,
வழியுடைத்தாய் வரும் மரபை மாய்த்து, ஒரு
பழி உடைத்து ஆக்கினன், பரதன் பண்டு' எனும்
மொழி உடைத்து ஆக்கலின் முறைமை
வேறு உண்டோ?'' (350 / 74)

என்று நெஞ்சம் நொந்து பேசுகின்றானே!

அந்த பரதன் இராமனிடமே,

''...... ...... ...... ...... ...... ........... தொல்லையோர்
முறையின் நீங்கிய அரசின் முந்துமோ?'' (392 / 100)

என்றும்,

''பிறந்து நீயுடைப் பிரிவு இல் தொல் பதம்
துறந்து, மா தவம் தொடங்குவாய் என்றால்,
மறந்து, நீதியின் திறம்பி, வாளின் கொன்று
அறம் தின்றான் என, அரசு அது ஆள்வெனோ?''
என்றும் எடுத்தியம்புகின்றானே! (392 / 101)

இளையவன் இயம்பியதுவும் இராமனுக்கு இப்பொழுது நினைவுக்கு வரவில்லையா?

அதற்கும் முன்னமேயே கங்கைக் கரை வேடன்—குகன்—பரதனிடம் அவன் அங்கு வந்த காரணம் கேட்க, பரதனோ,

''முழுது உலகு அளித்த தந்தை முந்தையோர் முறையி
னின்றும்
வழுவினன்; அதனை நீக்க, மன்னனைக் கொணர்வான்''
(372 / 33)

வந்ததாகக் கூறினானே! தந்தை செய்த அதே குற்றத்தைத் தனயன் மாற்றானை செய்யச் சொல்லிப் பேசுதல் முறையா?

மனித குலம் மட்டும் அல்ல; மந்திக் குலத்து சுக்கிரீவனே, தமையன் இருக்க— அவன் இறந்து விட்டான் என்பது உறுதியாகா முன்னம் — அரசுப் பொறுப்பினைத் தான் ஏற்றல் குற்றம் என்பதை உணர்ந்திருந்தானே!

வாலி பிலத்தினின்றும் வாராமையால்,

''அழுது அழுங்குறும் இவனை, அன்பினின்
தொழுது இரந்து, 'நின்தொழில் இது; ஆதலால்,
எழுது வென்றியாய்; அரசு செய்க' என
'பழுது இது என்றனன், பிரியும் நெஞ்சினான்''

(610 / 54)

அதுமட்டுமா! பிலத்தினுள்ளிருந்து வந்து சினந்து நின்ற தமையன் வாலியினிடம், அச் சுக்கிரீவன்,

''வணங்கி, 'அண்ணல்! நின் வரவு இலாமையால்,
உணங்கி, உன் வழிப் படர உன்னுவேற்கு,
இணங்கர் இன்மையால், இறைவ! நும்முடைக்
கணங்கள், காவல், உன் கடன்மை' என்றனர்.

(611 / 62)

''ஆணை அஞ்சி, இவ் அரசை எய்தி வாழ்
நாண் இலாத என் நவையை, நல்குவாய்;
பூண் நிலாவு தோளினை! பொறாய்!' என,
கோணினான், நெடுங் கொடுமை கூறினான்''

(611 / 63)

குரக்கினத்தானக்குத் தெரிந்த மரபும் கோமகற்குத் தெரியவில்லையா?

வீடணனுக்கு அடைக்கலம் அளித்தாலும் இராமன், அவனுக்கு இலங்கை அரசை அளித்தான். அந்த இராமனாகிய,

''ஆழியான் அவனை நோக்கி, அருள் சுரந்து
உவகை கூர,
'ஏழினோடு ஏழாய் நின்ற உலகும் என் பெயரும்
எந்நாள்
வாழும் நாள், அன்று காறும், வாள் எயிற்று
அரக்கர் வைகும்
தாழ்கடல் இலங்கைச் செல்வம் நின்னதே;
தந்தேன் என்றான்.'' (1031 / 139)

அத்தோடு நிற்கவில்லை! வீடணனுக்கு முடிசூட்ட இலக்குவனைப் பணித்தானே!

அப்பொழுது வீடணன் தன் முறைமையை நினைவு படுத்தி,

''களவு இயல் அரக்கன் பின்னே தோன்றிய
கடமை தீர,
இளையவற் களித்த மோலி என்னையும்
கவித்தி' என்றான்'' (1031 / 142)

அதுமட்டும் அல்ல. போர்க்களத்தில் இருந்த கும்ப கருணனிடம் வீடணன் சென்றான்; கும்பகருணனையும் இராமனிடம் அடைக்கலம் புகக் கேட்டுக் கொண்டான். அப்பொழுது தனக்கு இராமன் அளித்துளிட்ட இலங்கை ஆட்சியை கும்பகருணனிடமே தான் தந்து விடுவதாகவும் கூறினான். ஏன்? மூவரில் மூத்தோனாகிய இராவணன் அழிவது திண்ணம்; அடுத்து ஆட்சிப் பொறுப்பை ஏற்கத் தக்கவன் இரண்டாம் பிள்ளையாகிய கும்பகருணன். (இராவணன் பிள்ளைகளும் அழியப்போவது உறுதி என்ற காரணத்தால்) ஆனால் சூழ்நிலை காரணமாக இராமன் அவ்வாட்சியை மூன்றாமவனாகிய வீடணனுக்கு அளித் துள்ளான். கும்பகருணன் தங்களுடன் சேர்ந்து விடுவானேல் அண்ணன் இருக்க தம்பி ஆட்சி பீடத்தில் இருப்பது முறையும், மரபும் அல்ல என்று வீடணன் கருதினான்; அதனால்,

''எனக்கு அவன் தந்த செல்வத்து இலங்கையும்
அரசும் எல்லாம்
நினக்கு நான் தருவென்; தந்து, உன் ஏவலின்
நெடிது நிற்பென்'' (1162 / 140)

என்று, கும்பகருணனிடம் கூறினான்.

அரக்கர் குலத்தவன் அறிந்திருந்த முறைமையை அரச குலத்திலகம் அறியாமற் போனானா? ஏன் அவ்வாறு மரபினைக் காவாத வகையில் இராவணனிடம் கூறினான்?

இராவணன் தகாத குற்றம் புரிந்தான்! வேற்றான் மனைவியை விழைந்து தூக்கி வந்தான்—தூக்கி வரப் பெற்றவள் சீதை என்பதால் மட்டும் அல்ல; அது எந்தப் பெண்ணாக இருந்திருந்தாலும் நீதி எவர்க்குமே ஒன்று போல்வது தான் என்பதை உறுதிப்படுத்தினான், இராமனே! அவன், ''சீதை யென்னவள் தன்னைவிட்டு'' என்று கூற வில்லை; ''சிறை வைத்தவள் தன்னைவிட்டு'' என்றுதான் பொதுமையாகச் சொல்கின்றான், இராவணனிடத்தில்!

இராவணன் இழைக்கத் தகாத குற்றத்திற்காக அவன் தண்டிக்கப்பட வேண்டியவன் மட்டும் அல்ல; தொடர்ந்து அவனே ஆட்சி புரிந்தால் ஆணவம் அதிகரிக்கும்; அதனால் ஆட்சி அவனிடமிருந்து மாறவேண்டும். அவ்வாறு மாறுவது வேற்றானிடமும், மாற்றானிடமும் செல்லாது தன் இளைய வனிடமே சென்றடைதல் சிறப்புடையது எனும் பாங்கில் இலங்கை ஆட்சி வீடணனுக்குச் செல்ல வேண்டும் என்று இராமன் கூறியது சரியே; ஆனால், அக்காரியத்தை இராவணனையே விட்டு செய்யச் சொன்னது ஏன்?

அத்தோடு இராமன், இராவணனிடம்,

''அவற்கு (வீடணற்கு) ஏவல் செய்து இருத்தி''
(1141 / 253)

என்று வேறு கூறுகின்றானே, ஏன்?

இதற்கு விடைகாண வேண்டுமானால், இராமன் அனும விடம் சொன்ன வார்த்தைகளை நோக்கிட வேண்டும்!

சுக்கிரீவனுக்கு முடி சூட்டுவித்தான் இராமன். அதன் பின்னர் அனைவரும் அவரவர் இடத்திற்குச் சென்று தங்கள் பணிகளைச் சரிவரப் பார்க்கச் சொன்னான். அப்பொழுது அனுமன், இராமனுடன், தான் தங்குவதாகக் கூறினான். அதனைக் கேட்டு இராமன் அவனிடம், சுக்கிரீவ னோடு அனுமனும் செல்லவேண்டிய அவசியத்தை எடுத்து இயம்புகின்றான்.

''நிரம்பினான் ஒருவன் காத்த நிறை அரசு இறுதி நின்ற
வரம்பு இலாததனை, மற்று ஓர் தலைமகன்
வலிதின் கொண்டாய்,
அரும்புவ நலனும் தீங்கும்; ஆகலின், ஐய! நின்போல்
பெரும் பொறை அறிவினோரால், நிலையினைப்
பெறுவது......!'' (653 / 29)

என்றான், இராமன்.

கிட்கிந்தையிலும், தவறு செய்யாத தம்பி சுக்கிரீவன் தன்பால் சரண் அடைந்தும் வாலி அவனை வதைக்கக் கங்கணம் கட்டிக் கொண்டிருந்தான். அதனால், சுக்கிரீவன் இராமனைச் சரண் அடைந்தான். இராமன் வாலியைத் தண்டிப்பதாய் வாக்குறுதி கொடுத்தான்; சுக்கிரீவனுக்கு முடி சூட்டவும் செய்தான். ஆனால், அவ்வாறு சுக்கிரீவன் பெற்ற ஆட்சி வழி வகையோடு அவனுக்கு வரவில்லை; பலவந்தத்தினால்—வலிமையினால் Might is Right என்பதற்கு ஏற்ப வந்ததே என்பதை இராமன், 'வலிதின் கொண்டால் அரும்புவ, நலனும் தீங்கும்' என்ற சொற்றொடரால் குறிப்பிட்டான்.

சுக்கிரீவனுக்கு உறுதுணையாக அனுமன் முதலாய அனைத்து மந்திரிகளும், அறிஞர்களும், மக்களில் பெரும் பாலோரும் நின்றிருந்தே, கிட்கிந்தை ஆட்சியை அவன் பறித்துக் கொண்டதனால் நாட்டில் குழப்பங்கள் ஏற்படும் என்று இராமனே கருதுகின்றான்! அப்படியானால் இலங்கையின் நிலை என்ன?

வீடணனுக்குத் துணை நின்றவர் நால்வரே; அவர்களும் அவனுடன் இராமன்பால் வந்து விட்டனர்; இலங்கையில் இருப்பவர்கள் அனைவருமே இராவணனின் முழு மனத் துணைவர்கள். அப்படியிருக்க, வீடணன் வலிய முறையில் இலங்கை ஆட்சியைக் கைப்பற்றி அதனை ஆள முயன்றால் குழப்பங்கள், இராவணனின் தூண்டுதல் இன்றியே ஏராள மாய் ஏற்படும் என்பதில் ஐயம் என்ன!

அதனால், தண்டிக்கப் பெற வேண்டிய தமையன் இராவணனே, தம்பி வீடணனுக்கு ஆட்சியைக் கொடுத்து விட்டால் நெறிமுறை தவறிப் பெறாமல், வழி வகையோடு வீடணனுக்கு ஆட்சிப் பொறுப்பு வந்துற்றது என்று கொந்தளிப்பு ஏதும் இன்றிப் போகும் என்பதே இராமனின் கருத்து. அதனால் தான் மூத்தோன் இருக்க இளையோன் முடி சூட்டிக் கொள்வது நெறி முறை மரபுக் கொவ்வாதது என்றாலும், அம் மூத்தோனே இளையவனுக்கு முடி சூட்டி விட்டால் அது நெறி முறையின் பால் அமைந்து விடும் என்ற பாங்கில் இராமன் இராவணனிடம்,

'நின் தம்பியை இராக்கதர் முதல் பேர் இறையில் வை' என்கின்றான்!

அது மட்டும் அல்ல; 'அவற்கு ஏவல் செய்து இருத்தி' எனவும் கூறுகின்றான். அதன் நோக்கம் என்ன?

'தான் கூறிய கட்டாயத்திற்காக மூத்தோனாகிய இராவணன், இளையோனாகிய வீடணனுக்கு ஆட்சிப் பொறுப்பை அளித்து விட்டதாக இராவணன் எண்ணிக் கொண்டிருந்தால் அந்த இராவணனே தம்பியின் ஆட்சியில் சிக்கல்களையும், குழப்பங்களையும் தோற்றுவிக்கக் கூடும். அதற்கு, மாறாகத் தான் தம்பிக்குத் தொண்டு செய்யும் மனப்பான்மை கொண்டு செயல்பட்டால், அவன் தானே அகம் மலர்ந்து ஆட்சியை வீடணனுக்குக் கொடுத்து விட்ட தாக அனைவரும் கருதுவர்; அப்பொழுது எவ்விதக் குழப்பமும் ஏற்படாது! என்றெல்லாம் உலகியல் உண்மை களையும் மனோதத்துவப் போக்குகளையும் நுனித்துணர்ந்து கவிச்சக்கரவர்த்தி இராமன் வாயிலாக எடுத்துரைக்கும் கருத்துக் கருவூலம் இப்பாடல் என்பதை உணர்கின்றோம் அன்றோ!

# 16. மிதிலை வந்த சானகி!

முதற் போரில் இராமனிடம் தோற்றுக் கைகளில் ஏதும் ஆயுதம் இன்றித் தளர்ந்தான் இராவணன். அவனுக்கு அருள் காட்டி 'இன்று போய் போர்க்கு நாளைவா' என்றனன், இராமன். அரக்கர்கோன் அங்க மெல்லாம் தளர்ந்தான். நாணத்தின் உச்சியில் நின்றான்; எதையும் பொருட்படுத்தாமல் இருந்தான். இதனை,

''மாதிரம் எவையும் நோக்கான்; வள நகர்
நோக்கான்; வந்த
காதலர் தம்மை நோக்கான்; கடல் பெருஞ்
சேனை நோக்கான்,
தாது அவிழ் கூந்தல் மாதர் தனித்தனி நோக்க
தான் அப்
பூதலம் என்னும் நங்கை தன்னையே நோக்கிப்
புக்கான்'' (1142 / 3)

எனக் கவிச் சக்கரவர்த்தி படம் பிடிக்கின்றார்.

அவன் நாணம் கொண்டு வருந்தி யிருத்தற்குக் காரணம் என்ன என்று கம்பர் ஆய்ந்து கண்டு அறிந்து,

''வான் நகும், மண்ணும் எல்லாம் நகும்:—
நெடு வயிரத்தோளான்-
நான் நகு பகைஞர் எல்லாம் நகுவர் என்று,
அதற்கு நாணான்,
வேல் நகு நெடுங்கண், செவ்வாய், மெல்இயல்,
மிதிலை வந்த
சானகி நகுவள்—என்றே நாணத்தால்
சாம்புகின்றான்'' (1143 / 11)

எனச் செப்பலானார்!

ஏனந்தச் சீதையை, 'மிதிலை வந்த சானகி' எனக் குறிப்பிடுகின்றார்? அவட்கு இராமனுடன் திருமணமாகி சுமார் பதின்மூன்று ஆண்டுகள் ஓடிய பின்பும் அவளைக் கோசலத்தின் மருமகள் என்றோ, இராமனின் இல்லாள் என்றோ, இலக்குவனின் மைத்துனி என்றோ குறிப்பிட்டிருக்கலாமே! ஏன் அவள் பிறந்த மண்ணை நினைவுறுத்தி அவளைக் குறிப்பிடுகின்றார்?

சூர்ப்பணகை தன் அங்கங்கள் அறுபட்டு வந்து இராவணனிடம் முறையிட்டாள்; அவன் அவளிடம் 'உன்னை இந் நிலைக்கு ஆக்குதற்கு நீ என்ன குற்றம் செய்தாய்? எனக் கேட்டான். அப்பொழுது, இது சீதையினால் வந்த வினை எனக் கூற வந்த அவள்,

என்வயின் உற்றகுற்றம், 'யாவர்க்கும் எழுத ஒணாத
தன்மையள் இராமனோடும் தாமரை தவிரப்
போந்தாள்,
மின்வயின் மருங்குல் கொண்டாள், வேய்வயின்
மென் தோள் கொண்டாள்,
பொன் வயின் மேனி கொண்டாள், பொருட்டினால்
புகுந்தது என்றாள்'' (497 /67)

இந்த இடத்தில் இராமனுடன் வந்துள்ள ஒரு பெண்ணை அவள் வர்ணித்தாளே அன்றி, அவர்கள் இருவரிடையேயும் உள்ள உறவை தெள்ளத் தெளிவாக—வெளிப்படையாக—எடுத்து இயம்பவில்லை. இராவணன் தன் தங்கையின் அவலம் கண்டு வெதும்பியிருந்த அந்நிலையில் அவன், இராமன்—சீதை உறவு, கணவன்-மனைவி என்று நினைக்கத் தோன்றவில்லை. மேலும் அவள், அவனிடம்,

''.................................. சீதை என்னும்
மான் கொண்டு ஊடாடு நீ; உன் வாள் வலி உலகம்
காண
யான் கொண்டு ஊடாடும் வண்ணம், இராமனைத்
தருதி என்பால்'' (499 / 79)

என்று தெளிவாகவே கூறுகின்றாள்!

பிறளுக்கு உரியவனைத் தான் அனுபவிக்கத் தன்னுடன் இணைக்கும் அரக்கியே யானாலும் ஒருத்தி தன் தமையனிடமே வண்ணம், வேண்டுதல் என்பதை எதிர்பார்க்க முடியாது. எனவே, இராமன் சீதைக்கு உரியவன் என இராவணன் எண்ணும் வாய்ப்பு இல்லாது போயிற்று!

எனவே, அவள் வர்ணித்த வர்ணிப்பில் மயங்கித் திருமணம் ஆகாத ஒரு பெண் எனச் சிதையை நினைந்து தன் மனம் மயக்கம் உற காம உணர்ச்சிக்கு ஆட்பட்டு விட்டான். அதன் பின்னர், பல கட்டங்களில் சீதை இராமனின் மனைவி என்பதைத் தெரிந்து கொண்டான். என்றாலும் காமம் நீங்காது கண்ணிழந்தான்! அதன் விளைவாய், சீதையை நினைக்கும்தொறும் அவள் மட்டும் தன் கண்முன் — மனக் கண்முன் — தோன்றினாளே யன்றி இராமனோடு இணைந்த காட்சி அவன் கண்ணில் தோன்ற வில்லை! இதனைக் கம்பர்,

''பொய்ந் நின்ற நெஞ்சின் கொடியாள் புகுந்தாளை நோக்கி,
நெய்ந் நின்ற கூர்வாளவன், நேர்உறநோக்கு; நங்காய்!
மைந் நின்ற வான்—கண்மயில் நின்றென வந்து, என் முன்னர்
இந்நின்றவள் ஆம்கொல், இயம்பிய சீதை?'' என்றான். (508 / 148)

எனும் பாடலால் உறுதிப்படுத்துவார்.

உருவெளித் தோற்ற உரையாடலின் போதும் சீதை இராமனின் சதியெனச் சூர்ப்பணகை நேரிடையாகக் கூறினாளில்லை!

மாரிசனிடம் இராவணன் சென்று துணை வேண்டுகின்றான். அதுபோழ்து இராம இலக்குவர் இருவரையும் இணைத்து, 'மானிடர் (511 / 4)', 'திருகு சினத்தார்,

சிறியோர் (512 / 5),' 'ஒப்பு இலர் (512 / 6),' என்று குறிக்கின்றான்! இராமனைத் தனித்து நோக்கி, அவனைச் சீதை கேள்வன் என்று எங்கும் எவரிடமும் கூறவில்லை!

சீதையை இராமனின் மனைவி என்று கூறவும் இல்லை! மாறாக 'அவர்களுடன் வாழும் துப்பு அழி செவ்வாய் வஞ்சி' (512 / 6) என்று தான் குறிப்பிடுகின்றான்!

இனி, இராம இலக்குவர் மாயமான் பின்னே போய பின், இராவணன் சீதையினிடம் சென்று பேச்சு கொடுக்கின்றான். அப்பொழுது, சீதை,

''தயரதன் தொல் குலத் தனையன்; தம்பியொடு
உயர் குலத்து அன்னை சொல் உச்சி ஏந்தினான்,
அயர்வு இலன், இவ்வழி உறையும்; அன்னவன்
பெயரினைத் தெரிகுதிர், பெருமையீர்!'' என்றாள்.
(527 / 37)

அவள் அப்பொழுதும் இராமனைத் தன் கணவன் என நேரிடையாகக் கூறவில்லை. அது மட்டும் அல்ல! அவன், மீண்டும் 'நீர் யாவர் மாமகள், காட்டிடை அரும் பகல் கழிக்கின்றீர்?' (527 / 38) என்று தான் கேட்டானே ஒழிய இராமன்—சீதையை, கணவன்—மனைவி உறவின் அடிப்படையில் அடையாளம் காண முற்படவில்லை. அவளோ தன் பிறந்த அகம் முதலிற் கூறிய பின்னரே, தான் இராமனின் மனைவி என்பதைக் குறிப்பிடுகின்றாள்!

''சனகன் மா மகள்; பெயர் சனகி; காகுத்தன்
மனைவி யான் என்றனள்'' (528 / 39)

ஒருத்தியின் மேல் பேராவல் கொண்டு பழி பெறு நோக்கோடு வந்தவனுக்கு அவளே சொல்லும் பல்வேறு செய்திகளில் அவளைப் பற்றிய செய்திகள் மட்டும் தான் அவனுடைய காதுகளில் செல்லும்; பிறவற்றை அவன் கேட்பினும் கேளாதவையே என்ற நிலையில், சீதை தன்னைப் பற்றி

கூறியவை மட்டும் அவன் நெஞ்சு நினைந்தது; 'காகுத்தன் மனைவி' என்று கூறியது காற்றோடு போயிற்று என்று கொள்வதில் தவறு இல்லை! அதனால் தான் சீதை மேற் குறிப்பிட்ட செய்திகளைச் சொன்ன பின்னும், இராவணன், 'உன் கணவன் இராமன், அவன் தம்பி இலக்குவன் வலியர் என்றாய்' என்று முறை காட்டிப் பேசாமல்,

''மண்ணிடைப் புழுவின் வாழும் மானிடர்
வலியர் என்றாய்'' (531 / 65)

எனக் கூறுகின்றான்.

என்றாலும், சீதை இராவணனுடைய உள்ளக் கிடக்கையை உணர்ந்து கொண்டு சீறிய பின்,

''மின் உயிர்த்து உருமின் சீறும் வெங்கணை
விரவா முன்னம்
உன் உயிர்க்கு உறுதி நோக்கி, ஒளித்தியால் ஓடி''
(532 / 68)

என்று விரட்டிய பின்னே, அவளுடைய கணவன் ஒருவன் உளன் என்ற நினைவு அவனுக்கு வருகின்றது. ஆனால் ஓர் போர் வீரனாய்த் தான் மதித்து தொடர்ந்து பேசுகின்றானேயன்றி, தான் இச்சிப்பவள் பிறனுக்குச் சொந்தமானவள்—எச்சில் பட்டவள்—தான் அவளை அனுபவிக்க விரும்புவது அருவை ஆனது என்றெல்லாம் கருதிப் பேசவில்லை.

''உன் துணைக் கணவன் அம்பு, அவ் உயர் திசை
சுமந்த ஓங்கல்
வன் திறல் மருப்பின் ஆற்றல் மடித்த என்
மார்பில் வந்தால்,
குன்றிடைத் தொடுத்து விட்ட பூங் கணை கொல்
அது என்றான்''
(532 / 15)

இராமனைச் சீதையின் கணவன்—'உன் கணவன்'— என்று சொன்னாலே, அவளுக்குத் துணையாக நிற்பவன் என்று தான் அமையும். ஆனால், 'உன் துணைக் கணவன்' என்று ஏன் இங்கே கூறினான்?

'சீரையுடுத்து தவம் மேற்கொண்டு, வந்துள்ள இராமன் உன்னுடன் இல்லற இன்பம் துய்க்க மாட்டான்; நினக்குக் காவல் துணைவனாகத் தான் நிற்பான்; எனவே, என்னுடன் வரின் சுகம் பெறலாம்' என்றதைத் தவ வேடம் கொண்டு வந்துள்ள அரக்கன் அவட்கு மறையுரையாய்த் தெரிவிக்கவே அச் சொற்றொடரைக் கையாண்டுள்ளான்!

ஆனால், இராவணன் இந் நிகழ்ச்சிக்குப் பின்னும், தானே சீதையின் கணவன் பற்றிப் பேசிய பின்னும், அடுத்த உரையாடல்களில் இருந்து இராமனை அவளுடைய கணவன் என்ற பாங்கிலான சொற்களைக்—சொற்றொடர்களைக்— கொண்டு பேசாமல், அவனைத் தனித்தும் நினையாதவனாய், இலக்குவனை இணைத்து 'மானிடர்' என்றே குறிப்பிடுகின்றான்.

''உன்னை மீட்பர்கொல் அம்மானிடர்?'' (534 / 80)

''இழி தரு மனிதரோடேயான் செரு
ஏற்பன் என்றால்'' (534 / 83)

''மான் என்பது அறிந்து போன மானிடர் ஆவார்''
(824 / 144)

''.................................... பயன் தீர் நோன்பின்,
ஆஇயல் மனிதர் தம்மை அடுகிலேன் ..................''
(825 / 146)

''சிற்றியல், சிறுமை ஆற்றல், சிறு தொழில்
மனிதரோடே
முற்றிய தா இல் வீர முனிவு என் கண்
விளையாதேனும்'' (825 / 47)

''பதவிய மனிதரேனும், பைந்தொடி!'' (825 / 148)

''குரக்கு வார்த்தையும், மானிடர் கொற்றமும்,
இருக்க; ..................................'' (921 / 108)

''கொச்சை மானுடர் வெல்குவர் என்றனை''
(981 / 101)

''உனக்கு மானிடர் வலியர் ஆம் தகைமையும்
உளதோ?'' (982 / 103)

''வாலி தன்னை, அம்மனிதனும், மறைந்து நின்று
எய்தான்'' (982 / 108)

''யான் இழைத்திட இல் இடிந்து, இன் உயிர் சுமக்கும்
மானுடன் வலி, நீ அலாது, யார் உளர் மதித்தார்''
(982 / 109)

''வன்பகை மனிதரின், வைத்த அன்பினை''
(1011 / 5)

''நண்ணின மனிதர்பால் நண்பு பூண்டனை''
(1011 / 6)

''தஞ்சு என மனிதர்பால் வைத்த சார்பினை'' (1011/7)

''நணியர் வந்து, மனிதர்; நமக்கு இனித்
துணியும் காரியம் யாது?''
(1072 / 42)

''பேதை மானிடவரோடு குரங்கு அல, பிறவே ஆக''
(1078 / 84)

''...............................இன்னம் அறிதி என்று
உன்னை ஏவும்
நரன் கொலாம், உலக நாதன்'' (1102 / 22)

''அங்கு அவர் தன்மை நிற்க, மனிசனுக்காக, அஞ்சாது
இங்கு வந்து இதனைச் சொன்ன தூதன் நீ யாவன்?''
(1102 / 23)

''அந்நரர் இன்று, நாளை, அழிவதற்கு,
ஐயம் இல்லை;'' (1103 / 27)

என்று இராவணன் வாய் வழி வரிகள், அவன் இராமனையும் இலக்குவனையும் மனிதர்கள் என்ற பார்வையில் பார்த்தானே யொழிய இராமனைச் சீதை மணாளன் என்று பகர அவன் நா எழவில்லை என்பதை உறுதிப் படுத்துகின்றன!

மேற் பிரிவில் குறிப்பிட்டுள்ள வண்ணம்,

''உன் துணைக் கணவன்' என்றும், 'இன் உயிர்க் காந்தன்' (819 / 105)

என்றும் ஓரிரு இடங்களில் மட்டும் சீதையையும் இராமனையும் இணைத்துப் பேசியுள்ளான்! அதிலும் 'சீதையின் கணவன் இராமன்' என்ற பாங்கில் சொற்றொடர்கள் அமைந்துள்ளனவேயன்றி 'இராமனின் மனைவி சீதை' என்று அவன் மடுக்க வில்லை; அவ்வாறு அடிக்கடி மடுத்திருந்தாலாவது 'மாற்றான் மனைவியை விழைதல் தகாது' என்ற எண்ணமாவது ஏற்பட்டிருக்கக் கூடும்.

மேலும், சீதை இராமனைக் குறிப்பிடும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அவன் தன் கணவன் என்பதை இடையறாது நினைவூட்டிக் கணவன் முறைச் சொற்களைப் பயன் படுத்தியிருக்கலாம். அவளோ,

''கவிஞனும் வெஞ்சிலைக் கை வென்றிக் காகுத்தன் கற்பினேனை'' (532 / 67)

''இறைவா! இளையோய்!'' (532 / 71)

''என் துணைக் கணவன்'' (821 / 122)

என்று தன் கணவன் என்ற பாங்கில் சொற்றொடர்களைச் சொன்னாள். பிற இடங்களில், பெரும்பாலும் பொதுமையாக,

''அறம் தரு வள்ளல்'' (530 / 54)

''வாள் அரி வள்ளல்'' (530 / 57)

''செஞ் சேவகனார்'' (533 / 76)

''ஆரியன் பகழி வல்லது'' (821 / 117)

''ஆரியன் அற்றம் நோக்கி'' (821 / 118)

''வித்தக வில்லினாற்கு'' (821 / 119)

''வீரன் சரத்திற்கும் குறித்தது உண்டோ?''
(821 / 120)

''வில் தொடை இராமன் கோத்து விடுதலும்''
(821 / 121)

''எம் கோமகன்'' (821 / 124)

''வள்ளல் சீற்றத்தால்'' (822 / 125)

''எங்கள் நாயகனையும் நினைந்தது'' (822 / 126)

''தேன் உயர் தெரியலான்'' (822 / 127)

என்றெல்லாம் தான் குறிப்பிடுகின்றாள்!

இனி, இராமன் சீதையை 'என் மனைவி' என்று பிறர் பால் வெளிப்படையாக எடுத்துக் கூறுவது சற்று நாகரிக மற்ற முறையாகத் தோன்றலாம்' 'நான், எனது' என்ற செறுக்கு இல்லாத அவனுக்கு அவ்வாறு கூறத் தோன் றாமலும் இருக்கலாம்! ஆனால், மூர்க்கருடன் பேசும் பொழுது தேவைப்பட்ட செய்தியை விரும்பியோ, விரும் பாமலேயோ சொல்லித்தானே ஆக வேண்டும்!

போருக்குப் புறப்படும் முன்
'வாங்கினென் சீதையை' (1120 / 108)

என்று தனக்குத் தானே எண்ணிக் கொண்டான், சீதையின் பால் தனக்கிருந்த உரிமையை நினைந்து!

ஆனால், முதற்போரில், ஆயுதங்களை இழந்து நின்ற நிலையிலேனும், இராவணனுக்கு அறிவுரை கூறும்பொழுது 'நிறையென் இல்லவள் தன்னை விட்டு' என்றது போன்ற

ஏற்புடைச் சொற்றொடரால் 'என் மனைவியை விட்டு விட்டு' என்ற பொருளில் கூறிச் சீதையினைத் தான் உரிமை கொண்டாடியிருந்தாலாவது இராவணனின் இதயம் மாறுபட்டிருக்கலாம். அதனை விடுத்து, அவன் ஏதோ ஒருத்திக்காகத் தான் வக்காளத்து வாங்கிப் பேசுவதைப்போலே, படர்க்கை நிலையில்,

''சிறையில் வைத்தவள் தன்னை விட்டு......''
(1141 / 253)

என்று தான் கூறினான்!

ஆக, இந்தச் சூழ்நிலையில், இராவணனுக்கு இருந்த காம உணர்ச்சியின் அடிப்படையில் அவன் சீதையை இராமனின் இல்லாள் என்றோ கோசலத்தின் மருமகள் என்றோ எண்ணத் தோன்றவேயில்லை.

அவன் திரும்பிச் சென்ற நிலையோ,

''பூதலம் என்னும் நங்கை தன்னையே
நோக்கிப்புக்கான்'' (1142 / 3)

என்பார் கவிச் சக்கரவர்த்தி, 'பூதலம்' என 'மண்ணை' நோக்கினான் என்று கம்பர் எழுதும் பொழுது, அந்தச் சீதையும் மண்ணில் தோன்றியவளே என்ற நினைவு வந்துற்றது, அவர்க்கு! உடனே அவள் தோன்றிய மண்ணுடை நாட்டைக் காட்டி விட்டார்! இராவணன் சீதையினிடத்துக் கெஞ்சிப் பேசும்பொழுது கூட அவளை,

'' சனகரின் மடந்தையே!'' (820 / 110)

என்றுதான் விளிக்கின்றான்.

ஆக, உலகியல் நோக்கின் வண்ணம் திருமணம் ஆகிவிட்ட ஒரு பெண்ணிற்கு, அதன்பின் அமைவதெல்லாம் தான் புகுந்த வீடே; அவளுடைய பெருமையும் புகழும் தன் கணவன் இல்லத்திற்கே உரியது என்ற பாங்கில் அவளைக் 'கோசலம் வந்த சானகி' என்று எடுத்துக் காட்டாமல், இராவணனின் உளவியல் நோக்கின் வண்ணம் திருமணம் ஆகாத ஒரு பெண்ணைப் படம் பிடிப்பதுபோல் 'மிதிலை வந்த சானகி' என்றே எடுத்துக் காட்டிவிட்டார்!

# 17. அலகில் கற்புடைச் சானகி

நெடிது உறங்கிக் கொண்டிருந்த கும்பகருணனைத் துயில் எழுப்பினர்; அறுநூறு வண்டி உணவும் பல நூறு குடக் கள்ளும் உண்டான். அஃது தன்னுடைய பசியைக் கிளறிவிட்டது என்று சினந்தான். ஆயிரத்து இருநூறு எருமைக் கடாக்களைத் தந்தனர்; அவற்றை முழுவதும் உண்டு சற்றே பசி ஆறினான்.

அவ்வாறு பசி தீர்ந்த பின் கும்பகருணன் தன் தமையன் இராவணன் முன் சென்று வணங்கினான். அவன் தம்பியைத் தழுவினான், உணவு அளிக்கச் செய்தான். பின்னர் போர்க் கோலம் செய்வித்தான்.

அப்பொழுதுதான், கும்பகருணன் தனக்குப் போர்க் கோலம் செய்தது ஏன் என விசாரிக்கத் தொடங்கினான். இராவணன், 'குரங்கு சேனையுடன் மானிடர் நமது நகரை முற்றுகை இட்டுள்ளனர். நீ அவர்களுடைய உயிர் போகும் வகையாக அவர்களுடன் போர் செய்வாயாக' என்றான்.

இராவணன் கூறியதைக் கேட்டவுடனேயே கும்ப கருணன்,

''ஆனதோ வெஞ்சமம்? அலகில் கற்புடைச்
சானகி துயர் இனம் தவிர்ந்தது இல்லையோ''

(1153 / 79)

என்று வினவினான்.

உண்டு உறங்கியே காலம் கழித்த குண்டனுக்குச் சானகி அலகில் கற்புடையவள் என்று கூற எப்படித்

தோன்றிற்று? அடிப்படையின்றியே கம்பர் தம் கருத்தைக் கும்பகருணன் வாயால் சொல்ல வைத்து விட்டாரே!

மன சஞ்சலம் சிறிதும் இல்லாதவர்களுக்கு எண்ணத் தெளிவு பெரிதும் அமையும். தெளிவான எண்ணங்களுடன் உறங்கச் செல்லும் அவர்களுடைய அடி மனத்தகத்தே அவ்வெண்ணங்களும் பதிந்து கிடக்கும். அவர்கள் எழுந் திருக்கும் பொழுது அவ்வெண்ணங்கள் அவர்களுடைய இதயத்தில் எழும்பி நிற்கும், அவை பற்றி அவர்கள் பேசவும் செய்வர்! இது மனோதத்துவ உண்மை. இந்த நோக்கில் ஆய்ந்தால் கும்பகருணன் கூறிய கூற்றின் அடிப்படை நன்கு விளங்கும்.

கும்பகருணன் மனக் கலக்கம் இன்றி உறங்குபவன், என்ற உண்மையைக் கவிச் சக்கரவர்த்தி ஏற்கனவே எடுத்துக் காட்டியுள்ளார், அனுமன் சீதையை இலங்கை நகரில் ஒவ்வொரு இடமாகத் தேடி வருகின்றான். அப் பொழுது அவன் ஓரிடத்தில்,

'' ......................................மலையின் வைகும்
கயக்கம் இல் துயிற்சிக் கும்பகருணனைக் கண்ணில்
கண்டான்.'' (784 / 121)

எனக் கம்பர் படம் பிடிக்கின்றார்.

அத்தகைய கும்பகருணன் உறங்கச் செல்லும்முன் ஒரு காட்சி!

இராவணன் மந்திராலோசனை செய்தான். அப் பொழுது, அனுமனால் இலங்கை தீக்கு இரையானதைச் சுட்டிக்காட்டி அவன் நெஞ்சம் நொந்து பேசினான். சபையில் இருந்த படைத் தலைவர்கள் மகோதரன், வச்சிரதத்தன், துன்முகன், மாபெரும் பக்கன், பிசாசன் முதலியோர் இராவணன் கருத்திற்கு ஏற்ப வீராவேசத் துடன் பேசுகின்றார்கள்.

கும்பகருணன் அவர்களை இடைமறித்து நின்று தன் எண்ணத்தை அண்ணனிடம் கூறாலானான். தன் பேச்சில் அவன் சிதையை இராவணன் அபகரித்து வந்தது குற்றம் என்றெல்லாம் எடுத்துரைத்தான். அப்பொழுது, அவன் சிதையை, ''ஒருவன் இல் உறை தவத்தின்'' (973 / 51) என்று குறிப்பிடுகின்றான்!

தவத்தின் மேன்மையைச் சொல்லும் திருவள்ளுவர்,

''சுடச் சுடரும் பொன் போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பார்க்கு (திரு—267)

என்றார். இராவணன் தரும் தொடர்ந்த தொல்லைகளைத் தாங்கிக் கொண்டிருக்கின்றாள் சிதை, அவள் மனம் மாசு அடையவில்லை! என்பதை கும்பகருணன் உணர்ந்தான் 'வேறு ஒரு குலத்தோன் தேவியை நயந்தது பாவிகள் உற்றிடும் பழியினும் பெரும் பழியாகும்' எனத் தமையனிடம் எடுத்துக் கூறிய கும்பகருணன் ''ஒருத்தன் மனை உற்றாள் பொன் அடித் தொழத் தொழ, மறுத்தல் புகழ் போலாம்'' (973 / 50) எனக் கூறுகின்றான். இந்த ஏளனப் பேச்சால் இராவணன் தொடர்ந்து சிதையின்பால் சென்று தன் காமத்தை வெளிக்காட்டி நிர்ப்பந்தித்துத் தொல்லைகள் தந்தான் என்பதைக் கும்பகருணன் அறிந்திருந்தமை விளங்குகின்றது.

அவனுடைய கெஞ்சுதலையும், கொஞ்சுதலையும், பொருட்படுத்தாது. சிறையிலேயே அடைந்து கிடக்கின்றாள் சிதை என்றால், அவளுடைய கற்பு நிலையைக் கும்பகருணன் உணர்ந்திருந்தான் என்பதாகின்றது. அதனால் தான், அவன்,

''ஆசு இல் பர தாரம் அவை அம்சிறை அடைத்த''
(973 / 52)

செயலைக் குறிப்பிட்டுக் காட்டி,

''பிட்டர் செயல் செய்திலை; குலச்சிறுமை,
செய்தாய்'' (973 / 53)

என்று இராவணனை இடித்துரைக்கின்றான்.

சீதை, 'தீ, யென' '(972 / 48) நின்று, தான் ஒரு சீரிய கற்பின் கனலி என்று உறுதிப்படுத்திக் கொண்டிருந்தாள். அவள் ஆசைக்கும் உணர்ச்சிக்கும் இடம் கொடுப்பவளாய் இருந்திருந்தால், துவக்கத்திலேயே இராவணன், அவளிடம்,

''குலைவுறல், அன்னம்! முன்னம், யாரையும்
கும்பிட என்
தலை மிசை மகுடம் என்ன, தனித்தனி இனிது
தாங்கி,
அலகு இல் பூண் அரம்பை மாதர் அடிமுறை ஏவல்
செய்ய,
உலகம் ஈர்—ஏழும் ஆளும் செல்வத்துள் உறை''
(531 / 66)

என்றானே, அதனைச் சிலநாள் கழித்தாகிலும் நினைந்து தன் நெஞ்சை நஞ்சாக்கிக் கொண்டு பண்பு மாறியிருக்க மாட்டாளா?

ஆரணியத்தில், இராவணன் கபட நாடகத்தை அறிந்ததும் சீதை,

''செவிகளைத் தளிர்க்கையாலே சிக்குறச் சேமம்
செய்தாள்
கவினும் வெஞ்சிலைக் கை வென்றிக் காகுத்தன்
கற்பினேனை,
புவியிடை ஒழுக்கம் நோக்காய்; பொங்குஎரி,
புனிதர் ஈயும்
அவியை நாய் வேட்ட தென்ன என் சொனாய்'
அரக்க'' (532 / 67)

என்று கடிந்து பேசினாள். அக் கடுமையில் சற்றும் மாற்றம் இன்றிச் சீறி விழுந்து கொண்டேயிருக்கின்றாள் என்பதனை

யும் கும்பகருணன் உணர்ந்திருந்தான். அதனால்தான் 'அவள் பாதங்களில் விழுந்து விழுந்து கெஞ்சுகின்றாயே' என்ற பாங்கில், இராவணனை ஏளனம் செய்தான். இத்தகைய நிகழ்ச்சிகளைத் தான் கண்டும் கேட்டும் சீதையின் கற்பு நிலையின் உயர்வு கும்பகருணன் உள்ளத்தில் ஊறியிருந்தது. அப்பொழுது உறங்கச் சென்றவனை போருக் கென எழுப்பியதால் சீதைபற்றிய அடிமன நினைவுகள் மேலோங்கி அவனுடைய வாய் வழிச் சொற்களாய் வந்தன. ஆக, கும்பகருணனுடைய உட்கருத்திற்கேற்ப அவனைக் கவிச்சக்கரவர்த்தி பேச வைத்தாரே அன்றி, தன்னுடைய உள்ளக் கிடக்கையை அவன் சொற்களாய் வெளிப்படுத்தினாரிலர் எனத் தெரிகின்றோம்.

## 18. ''நன்று'' என விடுதி !

அநுமன் வாயிலாக முதன் முதலில் கும்பகருணனை நமக்குக் காட்டும் கவிச் சக்கரவர்த்தி, அவனை,

''........................மலையின் வைகும்
கயக்கம் இல் துயிற்சிக் கும்பகருணனைக் கண்ணின்
கண்டான்'' (784 / 121)

எனப் படம் பிடிக்கின்றார்.

மேலும் அவர், அவனைக் குறிப்பிட்டு,

''உன்ன அருந் தீவினை உருக் கொண்டென்னவே''
(784 / 123)

என்றும் வர்ணிக்கின்றார்! இந்த உவமையால் நினைத் தற்கே முடியாத தீய வினைகள் எல்லாம் ஒருங்கு கூடி ஓர் உருவம் பெற்றால் எப்படியிருக்குமோ அப்படியிருந்தது அவன் உருவம் என்று ஆகின்றது! அப்படியானால், 'கும்ப கருணன் அவ்வளவு கொடியவனா?' என்ற ஐயம் மிகுந்து அச்சம் தோன்றுகின்றது!

மனோ தத்துவ முறையில் பார்க்கப் போனால், ஒருவன் கலக்கம் இன்றி உறங்கவல்லவன் என்றால் அவன் உள்ளத் தில் ஏதும் குறையோ குற்றமோ சினமோ தீய எண்ணமோ துன்பமோ இராது; அத்தகையோனே நிம்மதி உடையவன் என்பது உலகியல் நோக்கு. இந்த அடிப்படையில் கம்பர் அவனை நல்லவனாகத்தான் காட்டுகின்றார் எனக் கொள்ள வேண்டி உளது.

எனவே, அவனுடைய உருவிற்கு உவமை காட்டப் பெற்ற திவினைக் கூட்டம், திவினையாளரின் இருளான தன்மைக்காகி நின்று, அவனுடைய வண்ணத்தையே எடுத்துக் காட்டுகின்றது எனத் தெளிதல் வேண்டும். கவிச்சக்கரவர்த்தி அவனை வெளிப்படையாகவே நல்லவனாய்ச் சித்தரிப்பது பற்றிச் சற்று சிந்திப்போம்!

அனுமனால் எரியுண்ட இலங்கையை மயன் புதுப்பித்த பின் இராவணன் மந்திராலோசனை நடத்தினான். அப்பொழுது, கும்பகருணன் கூறிய கூற்றுக்கள் எல்லாம் அவனை நல்லவனாகவே எடுத்துக் காட்டி நிற்கின்றன; இறுதியில் கூறிய தொடர்கள் அவனுடைய தமையன் இராவணனின் சிற்றத்தைத் தடுப்பதற்கு ஏற்ப அமைந்தவையாகத் தோன்றுகின்றனவே அன்றி அவனைத் தீயனாகச் சித்தரிக்கவில்லையே! அவன் கூறிய கூற்றுக்களுள்,

''...........; நன்று, நம் கொற்றம்!'' (973 / 52)

என்பதுவும்,

''..............அவர் வெல்ல
பட்டிடுது மேல் அதுவும் நன்று,......'' (973 / 53)

என்பதுவும் மனம் கொள்ள வேண்டியவை ஆகும்.

முன்னதில் 'நன்று' எனும் சொல் எள்ளனம் காட்டுகின்றது; பின்னதில் ஓர் உறுதியான எண்ணத்தைக் காட்டுகின்றது!

இனி, மந்திராலோசனை முடிந்ததும் உறங்கச் சென்றுவிட்ட கும்பகருணனைக் கவிச்சக்கரவர்த்தியால் இடையில் எழுப்ப முடியவில்லை போலும்!

முதல்நாட் போரில் நிலம் நோக்கு முகத்தனாய் சோர்ந்து மீண்ட இராவணனிடம் மாலியவான், கும்பகருணனைப் போருக்கு அனுப்ப ஆலோசனை கூறினான்.

அப்பொழுதுதான் கம்பர் இராவணனுடைய வீரர்களைக் கொண்டு, கும்பகருணனைத் துயில் எழுப்பத் துணிந்தார்!

ஆம்; இவ்வாறு இடையிடையே எழுப்பப்படக் கூடிய கலக்கம் இல்லாத உறக்கத்தைவிட, எவராலும் எழுப்ப முடியாத நீள் உறக்கத்தில், இராமனின் அம்பினால் அவனை ஆழ்த்தவே கம்பர் எழுப்பினார் போலும்!

நமக்கு ஏற்படும் ஐயத்தை இராவணனின் ஆட்களே அகற்றிவிடுகின்றனர்! அதனாலன்றோ கும்பகருணனை அவர்கள் எழுப்ப முயலும் பொழுது,

''குறங்கு போல வில்பிடித்த கால தூதர் கையிலே,
உறங்குவாய், உறங்குவாய்! இனிக் கிடந்து
உறங்குவாய்!'' (1148 / 5)

என்று பாடுகின்றனர்!

ஏன்! கவிச்சக்கரவர்த்தியே கூடத் தம் எண்ணத்தைத் தம்மையும் அறியாமல் வெளிப்படுத்தக் காண்கிறோமே அவர் துயில் எழுந்த கும்பகருணனைப் பற்றிக் கூறுகையில்,

''இறக்க நின்ற முகத்தினை எய்துவான்''.........
(1150 / 59)
.........

என்று பாடி விட்டார்! 'இறங்க' என்பது வலிந்து, 'இறக்க' என்று நின்று, 'தாழ' எனும் பொருள்தருவதாக மேலெழுந்த வாரியான நோக்கில் பொருள் கொள்ளச் செய்யும் இச் சொற்றொடர்; ஆனால், உண்மையில், 'இப்பொழுது எழுந்து விட்ட அவன் இனி உறங்கச் செல்லாமல் இறக்கப் போகின்றான்' எனக் கம்பர், காவியத்தின் பின் நிகழ்ச்சியை நமக்கு முன் கூட்டியே இச்சொற்றொடரால் சுட்டிக்காட்டி நிற்கின்றார்; இது கம்பரின் கவித்திறன் என வியக்கின்றோம். இன்னமும் ஆழ்ந்து பார்த்தால், போரில் உயிர் நீங்கப்போகும் அவனுடைய முகம் யாராலும் காணமுடியாத நிலையில் கடலின் ஆழத்தே இடப்பெறப் போகின்றது என்ற காட்சியையே சொல்லாமல் சொல்லி நிற்கின்றது.

இனி, தான் இறக்கப் போவது திண்ணம் எனக் கும்பகருணனே உணர்ந்து உறுதிப்படுத்துகின்றான்! தன்னிடம் வந்த தம்பியைத் தழுவி உணவளித்துப் போர்க் கோலம் செய்வித்து இராம இலக்குவன் ஆகியோருடன் போருக்குப் புறப்படச் சொல்கின்றான், இராவணன். அப்பொழுது மீண்டும் கும்பகருணன் தமையனுக்குப் பல வகையான அறிவுரைகள் கூறுகின்றான். அவை பயனற்றுப் போகின்றன; இறுதியில் அவன் இராவணனிடம்,

''வென்று இவண் வருவென் என்று உரைக்கிலேன்; விதி
நின்றது; பிடர் பிடித்து உந்த நின்றது;
பொன்றுவென் ......... ...................... '' (1155 / 95)

என்ற வரிகளால் தான் இறக்கப் போவதை உறுதியாகவே கூறிவிடுகின்றான்! மேலும், அந்தப் பாடலிலேயே,

''......... பொன்றினால், பொலன் கொள் தோளியை,
'நன்று' என, நாயக விடுதி; நன்று அரோ'' (1155 /95)

என்ற சொற்றொடரும் அவன் வாய்வழி வருகின்றது!

இச் சொற்றொடரைக் கம்பர் அமைத்ததின் அடிப் படை நோக்கம் என்ன?

கும்பகருணனைத் 'தீவினை உரு' வெனக் காணும் நாம் அவனைத் தீயன் என்று கருதி விடக் கூடாது என்பதனைத் தெளிவுபடுத்தவே யாகும்!

மந்திராலோசனையின் போழ்து கும்பகருணனுக்கு இருந்த தெளிவே, அவன் உறங்கி எழுந்த போழ்தும் இருந்தது என்பதனை வலியுறுத்தவே, அன்று 'இராமனாதியர் வெல்ல நாம் வீழ்ந்திறப்போம்; அதுவும் நன்று, சீதை மீண்டிடுவாள்; அவளை சிறையிருத்திய பழி இன்றிப் போகும்' என்று கூறியதையே, மீண்டும் இன்று வலியுறுத்திக் கூறுகின்றான்! 'நான் போரில் இறந்த பின்னாவது

சீதையை மீள விட்டிடுதலே நமக்குப் பழி சேர்க்காத நற் செயல் என்று உணர்ந்து அவளை விட்டு விடு!' என இராவணனுக்குத் தெளிவுறுத்துகின்றான்.

ஆக, கும்பகருணன் முன்னுக்குப் பின் முரணாகப் பேசா தவன் என்பதை மெய்ப்பிப்பதோடு, கவிச் சக்கரவர்த்தி தாமும் அவனைப் பற்றி வெளிப்படுத்தும் நற்குணம் முன் னுக்குப் பின் முரணற்றது என்பதைத் தெளிவுறுத்தவே 'நன்று' என்னும் சொல்லை முன்னரும், பின்னரும் கையாண் டுள்ளார் என உணர்ந்து, தெளிந்து, வியந்து மகிழ்கின் றோம்!

# 19. ‘நம் முன்’

பேரார்க்களத்தினுள் கும்பகருணன் புகுந்தான். அவன் உருவையும், கம்பீர்யத்தையும் கண்டு இராமனே வியந்தான். நேர் முக வர்ணனையாளன் போல் நின்றிருந்த விடணனிடம் ‘அவன் யார்?’ என இராமன் கேட்டான். விடணன்,

‘‘பேர் இயல் இலங்கை வேந்தன் பின்னவன்;
எனக்கு முன்னோன்;
கார் இயல் காலன் அன்ன கழல்
கும்பகருணன் என்னும்
சூரிய சூலத்தான் என்று அவன் நிலை
கூறலுற்றான்’’ (1158 / 114)

கும்பகருணனுடைய வீரம், ஞானம், உறக்கம் முதலியன வற்றை விடணன் விளக்கமாக எடுத்துக் கூறினான்.

உடன் இருந்த சுக்கிரீவன், கும்பகருணனைத் தங்கள் பக்கத்தில் ஈர்த்துக் கொள்வது நலமுடையது என்றான். இராமனும் ஒப்பினான். தானே சென்று கும்பகருணனை அழைப்பதாய்ச் சொல்லிச் சென்றான், விடணன்.

இருவரும் ஒருவரை ஒருவர் தழுவினர். அன்பு பாராட்டிக் கொண்டனர். விடணன், இராமனை விட்டுத் தங்கள் பக்கம் வந்தது தவறு என்றான். விடணனோ, தான் வந்தது கும்பகருணனையும் இராமனிடம் அழைத்துச் செல்வதற்காகவே என்றும், இராமனைச் சரண்புகுந்தால் பிறவிப் பயன் நீங்கும் என்றும் எடுத்துரைத்தான்.

அப்பொழுது, வீடணன், இராவணன் பற்றிக் குறிப் பிட்டுப் பேசுகின்றான்.

''காக்கலாம் நும்முன் தன்னை எனில் அது
கண்டது இல்லை,
ஆக்கலாம் அறத்தை வேறே என்னினும்,
ஆவது இல்லை;'' (1163 / 147)

என்கின்றான்.

கும்பகருணனிடம், இராவணனை 'உனக்கு முன்னவன்-தமையன்' எனக்குறிப்பிட்டான் என்றால், அந்த இராவணன் இவனுக்குத் 'தம்பியா!' இவன் ஏன் அவனை; 'நம் முன்' என்று சுட்ட வில்லை?

வீடணனுடைய அறிவுரைகளை விரும்பாத இராவணன் என்ன கூறினான், அவனிடம்?

''பழியினை உணர்ந்து, யான் படுக்கிலேன்; உனை;
ஒழி, சில புகலுதல்; ஒல்லை நீங்குதி;
விழி எதிர் நிற்றியேல், விளிதி'' (1012 / 8)

என்று தானே கூறினான்!

'நீ என்பின் பிறந்தவன்-தம்பி என்ற காரணத்தால், உன்னைக் கொன்றால் பழி சாருமே என்று தான் உன்னைக் கொல்லாமல் விடுகின்றேன்' என்று, வீடணன், தன் தம்பி என்று நினைவு கூர்ந்துதானே பேசுகின்றான்!

'எதிர் நிற்றியேல்' என்றாலே, 'ஒருவன் மற்றொரு வனுடைய விழி எதிரில்-கண் எதிரில்-நின்றால்' என்று தானே பொருள். அப்படியிருக்கக் கவிச்சக்கரவர்த்தி, இராவணனைத் தன் வாயால், 'விழி எதிர்' என்று 'என் கண் எதிரில்' என ஏன் சொல்ல வைக்கின்றார்?

வீடணன், இரணியன் வதை பற்றிய வரலாற்றை மிக நெடிதாய்க் கூறிச் சென்றான். அதனை, இராவணன், தனக்கு அப்போதிருந்த மனோ நிலையில் கேட்க் விருப்ப

யில்லை; எனவே, அவன் சிந்தனையில் ஆழ்ந்து கண் மூடிய வண்ணம் வீடணன் கூறியதைப் பொறுமையாய் அவ்வளவு நேரம் விருப்பமின்றியே கேட்டுக் கொண்டிருந்தான்.

என்றாலும், இராவணன் மனம் மாறவில்லை; பெரிதும் சினந்தான். அப்பொழுது அவனைப் படம் பிடிக்கும் கம்பர்,

''மூட்டிய தீ என முடுகிப் பொங்கினான்—
ஊட்டு அரக்கு ஊட்டிய அனைய ஒண்கணான்''
(1011 / 1)

எனப் பாட்ல் விடுக்கின்றார்!

அதாவது, இராவணன் வீடணனுடைய உரையைக் கேட்டுக் கொண்டேயிருந்தானேயன்றி—அவனுடைய காது வழி அவ்வுரை சென்றதேயன்றி—அவனுடைய உள்ளத்தைத் தொடவில்லை; உணர்ச்சியைக் கிள்ளவில்லை, மாறாக சினத்தின் எல்லையை எய்தினான்; அதன் விளைவாக அவனுடைய கண்கள் சிவந்தன. அச் சினத்தின் உச்சத்தைக் காட்டவே காய்ச்சி ஊற்றிய அரக்கினை ஒத்து அவனுடைய கண்கள் சிவந்தன என்பார். அந்த, சினத்தால் சிவந்த கண்களைக் காட்டி இராவணன், வீடணனிடம் தன் பேச்சைத் தொடர்கின்றான் என்பதைச் சொல்லாமல் சொல்கின்றார், கவிச்சக்கரவர்த்தி, அங்கு 'விழி' என்ற சொல்லைப் பெய்து!

ஏனென்றால், ஒருவன் மற்றவனுடைய சாந்த நிலையில் நின்றிருந்தாலும், சின நிலையில் நின்றிருந்தாலும், மகிழ்வு நிலையில் நின்றிருந்தாலும், சோக நிலையில் நின்றிருந்தாலும் 'எதிர் நின்றவன்' 'என்றுதானே கொள்ள வேண்டும். ஆக, அப்பொழுது இராவணன் இருந்த நிலை சின நிலை என்பதைக் காட்டுகின்றார், அவனுடைய விழியைக் காட்டி!

எனவே, 'விழி எதிர் நிற்றியேல்' என்பதற்கு நேர்ப் பொருள் கொண்டு வீடணன் இரர்வணனை விட்டு— இலங்கை நீங்கிச் சென்றிருக்கத் தேவையில்லை.

மேலும், இராவணன் வீடணனைச் சினந்து முதலிலேயே என்ன கூறினான்?

''வெஞ் சினம் தரு போரின் எம்முடன் எழ வேண்டா;
இஞ்சி மாநகர் இடம் உடைத்து; ஈண்டு
இனிது இருத்தி;
அஞ்சல்; அஞ்சல்!'' (984 / 117)

என்று தானே ஏளனம் செய்தான். எனவே, 'விழி எதிர் நிற்றியேல் விளிதி' என்று இராவணன் அதட்டியதால் வீடணன் அவ்விடம் விட்டு தன் நாட்டிலேயே இருக்க வேண்டியது தானே? தமையனின் சினச் சொல் கேட்டவுடனே மாற்றானிடம் ஓடிச் சரண் புகுந்து விடுவது தான் உடன் பிறப்பின் இரத்த பாசமோ!

ஆக, வீடணன் இராமனிடம் சென்றடைவது என்ற எண்ணம் கொண்டவுடனேயே, இராவணனுக்கும் தனக்கும் இருந்த உடன் பிறப்பின் உறவை உள்ளத்தேயிருந்து உதறி விட்டான் என்றாகின்றது! அதனால் தான் இலங்கை பற்றியும் இலங்கையர் பற்றியும் விரிவான உளவுச் செய்திகளை இராமனிடம் கூறும் பொழுது,

''................................ இராவணன் என்னும்
அனையவன் திறம் யான் அறி அளவு
எலாம் அறைவென்''
(1040 / 52)

என்று இராவணன் ஏதோ ஒரு மூன்றாமவனைப் போல் குறிப்பிடுகின்றான்! இதனைத் தெளிவு படுத்தவே, கும்பகருணனுக்கும் தனக்கும் முன்னவனான இராவணனைக் கும்பகருணனுக்கு மட்டும் முன்னவன் போலே, 'நும் முன்' என்று வீடணன் குறிப்பிடுவதாகக் கவிச் சக்கரவர்த்தி எழுதுகின்றார்.

வீடணனின் செய்கை—இராவணனை விட்டு வெளியேறியது—சரியெனச் சொல்வான் போலே, அனலன் என்னும் வீடணனின் அமைச்சன், இராவணனின் சினப் பேச்சைத் திரும்பச் சொல்வது போல் மயிந்தனிடம்,

''மறம் தரு சிந்தையன், மதியின் நீங்கினான்,
'பிறந்தனை பின்பு; அதின் பிழைத்து; பேர்குதி;
இறந்தனை, நிற்றியேல்' என்ன, இன்னவன்
துறந்தனன் என விரித்துச் சொல்லினான்.''

(1017 / 45)

ஆனால், அந்த மதி நீங்கிய இராவணனை—உறவு முறையினின்றும், தான் நீக்கிவிட்ட தமையனை—வீடணன், இராமனிடம் இன்னார் எனக் குறிப்பிடும் பொழுது, 'தன் அண்ணன்' என்று பெருமையாகக் கூறிக் கொள்ளவில்லை என்றாலும்,

'பேர் இயல் இலங்கை வேந்தன்' (1158 / 114)

என்றான்! அதன் பொருள் என்ன? இராவணனைப் பெருமைப்படுத்துகின்றானா?

அதற்குப் பொருள், 'இவன். பெருந்தகுதி வாய்ந்த இலங்கை அரசன் இராவணன் தனக்குப் பின்னே பிறந்தவன்—தம்பி' என்பாரும் உளர்; அவர்கள் அந்தப் 'பெருந்தகுதி' என்ற அடைமொழியை இராவணனுக்குத் தருகின்றனர்.. மனோதத்துவ முறையில் அது அவ்வளவு சரியல்ல.

இராமன், தனக்கு அடைக்கலம் அருளியதைச் சுக்கிரீவன் சொன்னவுடனே, வீடணன் தனக்குத் தானே மகிழ்ந்து சொல்லிக் கொண்டவற்றுள்,

''பஞ்சு எனச் சிவக்கும் மென்கால்
தேவியைப் பிரிந்த பாவி
வஞ்சனுக்கு இளைய என்னை'' (1029 / 123)

என்றும்,

''மருளுறு மனத்தினான் என் வாய்மொழி
மறுத்தான்'' (1029 / 124)

என்றும் இராவணனை—தன் தமையனை—குறையுடையவனாகவே கண்டான் என்பதை நோக்க வேண்டும்!

இராவணன் ஒற்றர்களை ஏவ, அவர்களை இனம் கண்டு இராமனிடம் சொல்லியவனும் வீடணனே!

''தகை நிறைவு இல்லா உள்ளத்து
இராவணன் தந்த ஒற்றர்''
(1070 / 28)

என்றான்; அங்கேயும் தன் தமையனான இராவணனைக் குறையுடையவனாகக் குறிப்பிடுகின்றான் என்பதை நோக்க வேண்டும்!

மற்றும், வீடணன்,

''நாறு தன் குலக் கிளை எலாம் நரகத்து நடுவான்
சேறு செய்து வைத்தான், உம்பர்
திலோத்தமை முதலாக்
கூறும் மங்கையர் குழாத்திடைக் கோபுரக் குன்றத்து
ஏறி நின்றவன், புண் தொழில் இராவணன்''
(1087 / 2)

என்று இராவணனைத் தீய செய்கையன் என இராமனிடம் இனம் காட்டுகின்றான், என்பதையும் நோக்க வேண்டும்!

கும்பகருணனிடமே, வீடணன், இராவணனை 'எவனோ ஒருவன்' என்ற பாங்கில்,

''தீவினை ஒருவன் செய்ய, அவனொடும் தீங்கு
இலாதோர்
வீவினை உறுதல், ஐய! மேன்மையோ?
கீழ்மைதானோ?''
(1162 / 144)

என்று கேட்கின்றான்! மேலும், அவன்,

''உன் மக்கள் ஆகி உள்ளார், உன்னோடும்
ஒருங்கு தோன்றும்
என் மக்கள் ஆகி உள்ளார், இக் குடிக்கு
இறுதி சூழ்ந்தான்—
தன் மக்கள் ஆகி உள்ளார்'' (1163 /151)

என்று தங்களிடமிருந்து இராவணனைத் தனித்துக் காட்டு கின்றான்!

இத்துணை அடிப்படைகளையும் நோக்குங்கால் வீடணன், கும்பகருணனிடம், இராவணனை 'நும் முன்' என்று கூறியதின் காரணம் மன ஒற்றுமை யின்றி ஒருவரை, ஒருவர் வெறுத்துப் பிரிந்ததேயென்று அறிகின்றோம் அன்றோ!

இந்த உளவியலை வெளிப்படுத்தும் கவிச்சக்கரவர்த்தி மனிதனின் மற்ற பண்புகளையும் மனத்தியல்பையும் மறக்க வில்லை; தமையனை விட்டுப் பிரிந்த தம்பி வீடணன் இராவணன் முதல் அனைத்து இலங்கையர் வீழ்ச்சிக்கும் வழிவகைகளைக் கூறி, இராம இலக்குவச் சேனையர்க்கு ஆக்கமும் ஊக்கமும் உண்டாக்கினான். என்றாலும், இராவணன் வீழ்ச்சியடைந்து மாண்டு கிடந்த பொழுது வீடணனுடைய இரத்த பாசம் பீறிட்டுக் கொண்டு வர, அவன் இராவணன் மேல் விழுந்து அழுவதையும், இராமன், "இராவணன் புறமுதுகு காட்டியவன் போல் தோன்று கின்றதே! அவனுடன் நான் போர் செய்தேனே!" என நொந்து கொள்ளும் பொழுது வீடணன் உணர்ச்சிப் பொங்கிப் பேசிய பேச்சினையும், கம்பர் காட்டி உலகியல் உண்மையை உணர்த்த மறக்கவில்லை.

இராவணன் வீழ்ந் திறந்த பின், வீடணன் புலம்பி அழும் பொழுது;

> "......................................என் இல் ஆற்றல்
> அண்ணாவோ! அண்ணாவோ!" (1535 / 218)

என்று விளித்தே கதறுகின்றான்!

அரசியல் அடிப்படையில், பொருளாதாரத்தின் அடிப் படையில் அல்லது பண்பின் அடிப்படையில் பிரிந்து விட்ட சகோதரர்கள், 'உடைந்த பானையை ஒட்ட முடியுமா? அதுபோல் பிரிந்து விட்ட நாங்கள் பிரிந்தது பிரிந்தது தான்; எங்களுக்குள் பாச உணர்வே தோன்றாது—இணைப்பு இனி

ஏற்படாது' என்று வீம்பு பேசிக்கொள்ளும் மனிதர்கள் இன்றும் உளர்! அவர்களுக்கெல்லாம், இராவண—வீடணப் பிரிவும், இறுதியில் தோன்றும் பாசமும், ஓர் முன் உதாரணம்!

இதனைக் கவிச் சக்கரவர்த்தி வெளிப்படையாகவே—தெளிவான சொற்களாலேயே—வாலி சுக்கிரீவன், விஷயத்திலும், வாலி வதையாகிய இறுதி கட்டத்திலும் காட்டிப் பாடுகின்றார்!

தன்னைப் பகைத்த தமையன் வாலியைச் சுக்கிரீவன் இராமனை ஏவிக் கொல்வித்தான்! அத்தகையோன், வாலி இராமனின் அம்புக்கு இரையாகிக் கிடந்தபொழுது சகோதர பாசத்தால் அழுகின்றான். அதனைக் கம்பர்,

''வாசத் தாரவன் மார்பு எனும் மலை
வழங்கு அருவி
ஓசைச் சோரியை நோக்கினன்; உடன்
பிறப்பு என்னும்
பாசத்தால் பிணிப்புண்ட அத்தம்பியும், பசுங்கண்
நேசத் தாரைகள் சொரிதர, நெடுநிலம்
சேர்ந்தான்'' (635 / 17)

எனப் பாடுவார்!

இதனாலன்றோ தமிழ் நாட்டில், 'தான் ஆடா விட்டாலும் தன் சதை ஆடும்' என்னும் அனுபவப்பூர்வமான பழமொழி வழங்கி வருகின்றது!

இவ்வாறு, உளவியல் உண்மைக் கூறுகள் பலவற்றை, எடுத்துக் காட்டி விளக்க நின்ற சொற்றொடர், 'நும் முன்' என்பது என நினைக்கும்பொழுது கம்பரின் உளவியலைக் கண்டு நாம், வியக்கின்றோம், மகிழ்கின்றோம், போற்றுகின்றோம் அன்றோ!

# 20. நூன் எதிர் வீழ்த்தல் இனிது அன்று!

போர்க் களத்தினுள் புகுந்த கும்பகருணனைக் கண்ட இராமன், 'இவன் யார்?' என வீடணனைக் கேட்டான்.

'அவன் இலங்கை வேந்தவனுக்குப் பின்னவன்; எனக்கு முன்னவன்; கும்பகருணன் என்னும் பெயரினோன்' என்று வீடணன் கூறினான். அத்தோடு அவனுடைய ஆற்றலை யெல்லாம் வெகுவாகப் புகழ்ந்துரைத்தான். மேலும், அவன் தமையன் இராவணனுக்கு எடுத்துரைத்த அறவுரைகள் பற்றியும் குறிப்பிட்டான்.

உடன் இருந்த சுக்கிரீவன், கும்பகருணனைத் தம் பக்கல் ஈர்த்துக் கொள்ளுதல் நல்லது என்றான். இராமனும் அதனைச் சரியென ஆமோதித்தான். வீடணன், தானே சென்று தன் தமையனை அழைப்பதாக இராமனின் ஒப்புதல் ஏற்றுச் சென்றான்.

அண்ணனும் தம்பியும் ஒருவருக்கொருவர் அன்பு பாராட்டிக் கொண்டனர். வீடணன் தான் வந்த காரணத்தை எடுத்துரைத்தான். அறவழியைக் காக்கத் தன்னோடு புறப்பட்டு இராமனிடம் அடைக்கலம் அடையச் சொன்னான்; இராமன், தனக்குச் சூட்டிவிட்ட இலங்கை அரசைத் தான் கும்பகருணனுக்குத் தந்துவிட்டு அவன் கீழ்ப் படிந்து நடந்து கொள்வதாகக் கூறினான்; இன்னமும் பல வாறு பேசி அவனுடைய மனத்தை மாற்றி அழைத்துச் செல்ல முயன்றான்.

கும்பகருணனோ தான் தன் தமையனை விட்டு விலக முடியாது என்று உறுதியாகக் கூறிவிட்டான். வீடணனுக்கு ஏற்ற நியதி தனக்கு உதவாது என்றிட்டான். மேலும், வீடணன் இராமனை விட்டுத் திரும்பி வந்திடக் கூடாது என்றும், இலங்கை அரக்கர்கள் அனைவருமே அழியப் போவதால், தங்கள் குடிப் பிறப்பாக அவனாவது இருந்து அனைவர்க்கும் நீத்தார் கடன் முதலியன செய்திடல் வேண்டும் என்றும் கூறினான். இவ்வாறு பல பேசி அவனைத் தேற்றி பிரியா விடை கொடுத்து அனுப்பினான்.

வீடணன், இராமனிடம் வந்து, நிகழ்ந்தது முழுமையும் எடுத்தியம்பினான்.

இராமன் அனைத்தையும் கேட்ட பின்னர் வீடணனிடம் இறுதியில்,

''............ஐய! 'நுன் எதிர், நும் முனோனை
எய்து இறத் துணித்து வீழ்த்தல் இனிது
அன்று' என்று இனைய சொன்னேன்;
செய் திறன் இனி வேறு உண்டோ?
விதியை யார் தீர்க்கநிற்பார்?'' (1166 / 171)

என்றான்.

இலங்கையர்கள் போர்க்களத்தில் பொருத பொழுது, வீடணன் அக்களத்தினுள் நுழைய இருந்தானா? அப்படியே அவன் அங்கு பங்கு பெறும் ஏற்பாடு செய்யப் பட்டிருந்தாலும், கும்பகருணன் போர் செய்யும் பொழுதாகிலும், வீடணன் களத்திற்கு வாரா நிலையை ஏற்படுத்த முடியாதா? அப்படி ஏற்பாடு செய்திருந்தால் கும்பகருணனை வதை செய்யும் காட்சியை வீடணன் கண்டிருக்க முடியாதல்லவா? அதனால், இராமன், வீடணனுக்காக இரங்கியிருக்க வேண்டியிராதே!

இதனையெல்லாம் விடுத்து, இராமன் ஏன் இந்தக் கட்டத்தில் வீடணனுக்காக—அவன் மனோ நிலையை

கும்பகருணன் வதை பாதிக்கும் என்ற அடிப்படையில்—பேச வேண்டும்? இராமனாகவே, வீடணன் கும்ப கருணனை அழைத்து வரல் வேண்டும் என எண்ண வில்லையே! சுக்கிரீவன் சொன்ன யோசனையைத் தானே அவன் ஆமோதித்தான்; அப்படியிருக்க, தானே அனுப்பியதாக ஒரு காரணத்தை ஏன் கற்பிக்க வேண்டும்?

கும்பகருணனைப் பற்றி— அவனுடைய வீரத்தைப் பற்றி — வீடணன் வெகுவாகப் பாராட்டினானே! 'அந்த வீரமெல்லாம் ஒரு வீரமா?' என்று ஏளனம் செய்யும் பாங்கில், 'உன் கண்ணெதிரிலேயே நீ மிகப் புகழும் வீரனான உன் தமையனை வீழ்த்திக் காட்டுகிறேன், பார்' என்று மமதையாகப் பேசினானா, இராமன்? அவன் அத்தகையவன் அல்லனே!

சுத்த வீரனுக்கு வீர மரியாதை காட்டுபவன் ஆயிற்றே! இல்லையென்றால், 'இன்று போய் நாளை போர்க்கு வா' என்று இராவணனை அக் கணத்திலேயே கொன்று வீழ்த் தாமல், பெருந்தன்மையாகச் சொல்லி அனுப்பியிருப்பானா?

பின் ஏன் அவன் அவ்வாறு கூறினான்?

தம்பியின் கண்ணெதிரிலேயே தமையனைக் கொன்ற காட்சி யொன்று இராமனின் மனத்தை உறுத்திக்கொண்டே யிருந்தது! அக்கொலைக்கு காரண கர்த்தா தானே யென்ற குற்றவுணர்ச்சி குமுறிக் கொண்டேயிருந்தது! அதனை வாய் விட்டுப் பிறரிடம் சொன்னால் தான் தன் மனப் பாரம் குறையும் என்று துடித்துக் கொண்டிருந்தது, அவனுடைய உள்ளம். அது தக்க தருணமாகப் பட்டதால் தம்பியாகிய உன் கண்ணெதிரிலேயே உன் தமையனை—கும்பகருணனை அம்பெய்து வீழ்த்திக் கொல்லுதல் நன்றாக இராது என்று இராமன் தன் வாய் விட்டுக் கூறுகின்றான்.

வாலியும் சுக்கிரீவனும், அண்ணனும் தம்பியும் அல்லவா? அவர்களுள் வாலியை சுக்கிரீவன் கண்முன்

னேயே இந்த இராமன் அம்பெய்து அழிக்கவில்லையா? அதுவும் மறைந்திருந்து கொன்றானே! சுக்கிரீவன் எங்கோ இருக்க வாலியுடன் நேர்ப்போர் செய்தா இராமன் கொன் றான்? இல்லையே! அவர்கள் இருவரும் பொருதவாறு இருந்த பொழுதேயல்லவா அந்தப் பாப காரியத்தைப் புரிந்தான்!

அதுவும்,

''அவ் இடத்து, இராமன், 'நீ அழைத்து, வாலி ஆனது ஓர்
வெவ் விடத்தின் வந்து போர் விளைக்கும் ஏல்வை வேறு நின்று
எவ் விடத் துணிந்து அமைந்தது; என் கருத்து இது' என்றனன்
தெவ் அடக்கும் வென்றியானும், 'நன்று இது' என்று சிந்தியா, (625 / 10)

எனக் கவிச் சக்கரவர்த்தி அந்தச் சூழ்நிலையைப் பட்ட வர்த்தனமாகப் பாடியுள்ளாரே!

சுக்கிரீவன், 'நன்று இது' எனக் கூறியதை எதிர்த்துச் சொல்லாமல், இராமன் இங்கு 'இனிது அன்று' எனக் கூறி யுள்ளான்!

எய்யப்பட்ட வாலி ஏளனமாக எவ்வளவு பேசினான்! ஏசினான் இராமனை! எவ்வளவு நியாயமாக வாதிட்டான்! இராமனுக்கே பதில் சொல்ல முடியாமல் அவன் தம்பி இலக்குவன் அல்லவா ஏதோ நொண்டிக் காரணத்தை நுவல வேண்டியதாயிற்று!

இந்த இக்கட்டான சூழ்நிலை இராமனின் மனத் தகத்தே நிழலாடிக் கொண்டேயிருந்தது. தான் செய்தது சரியல்ல என்பதை மனச் சாட்சிக்கு விரோதமின்றி தக்க தருணமாகிய இந்தக் கட்டத்தில் எடுத்துச் சொல்லாமல் சொல்லி விட்டான்!

இந்த மனோதத்துவ நெறிமுறைகளையெல்லாம் சிந்தித்துத் தான் கவிச் சக்கரவர்த்தி, 'மானுடம் வென்ற 'தம்மா' என்று, வியந்து போனார்!

# 21. குற்றம் ஒன்று இல்லவள்!

கும்பகருணனும் இலக்குவனும் போர் புரிந்து கொண் டிருந்தனர்; ஒருவருக் கொருவர் இளைத்தவராய் இல்லை; இருவருமே ஒருவரை ஒருவர் வியந்த வண்ணம் திறம்படப் போர் புரிந்தனர்.

அங்கு அனுமன் வந்தான். தன் தோள் மேல் ஏறிக் கொண்டு சண்டை செய்யுமாறு இலக்குவனிடம் கூறினான். அவனும் இசைந்து இவர்ந்தான்.

இருவரும் ஒருவருக்கொருவர் சவால் விட்டுக் கொண் டனர். அப்பொழுது, கும்பகருணன்,

''பெய் தவத்தினோர் பெண்கொடி, எம்முடன்
பிறந்தாள்,
செய்த குற்றம் ஒன்று இல்லவள் நாசி
வெஞ் சினத்தால்
கொய்த கொற்றவ! மற்று அவள் கூந்தல்
தொட்டு ஈர்த்த நின்
கை தலத்திடைக் கிடத்துவேன்; காக்குதி''
என்றான் (1175 / 235)

கவிச்சக்கரவர்த்தியின் சொல்லாடல் திறனால் உண் மையும் உரைக்கப் படுகின்றது; பண்பாடும் பகரப்படுகின்றது! ஏளனமும் எக்களிக்கின்றது; இறுமாப்பும் எழுகின்றது!

'பெய் தவத்தினோர் பெண் கொடி' எனச் சூர்ப்பண கையைக் கும்பகருணன் குறிப்பிடுகின்றான்! அவளோ அரக்கி! அழகிலா உருவம் பெற்றவள். அவளை,

''செம்பராகம் படச் செறிந்த கூந்தலாள்,
வெம்பு அராகம் தனி விளைந்த மெய்யினாள்,
உம்பர் ஆனவர்க்கும், ஒண் தவர்க்கும், ஓத நீர்
இம்பர் ஆனவர்க்கும், ஓர் இறுதி ஈட்டுவாள்''
(442 / 9)

எனக் கம்பர் வர்ணிக்கின்றார்! சூர்ப்பணகை தனக்குத் தானே,

''எயிறுடை அரக்கி, எவ் உயிரும் இட்டது ஓர்
வயிறு டையாள்'' (445 / 29)

எனக் கூறிக் கொள்கின்றார்!

அத்தகையவளைக் கும்பகருணன். 'பெண் கொடி' என்கின்றானே! அவள்,

'பங்கயச் செல்வி'யை மனத்துப் பாவியா,
அங்கையின் ஆய மந்திரத்தை ஆய்ந்து,
திங்களின் சிறந்து ஒளிர் முகத்தளாய்' (445 / 30)

செவ்வியளாய் பொங்கு ஒளி விசும்பினில் பொலியத் தோன்றி, பஞ்சி ஒளிர் விஞ்சு குளிர் பல்லவம் அனுங்க, செஞ்செவிய கஞ்சம் நிகர் சீறடியள் ஆகி, அம் சொல் இள மஞ்ஞை என, அன்னம் என, மின்னும் வஞ்சி என, நஞ்சம் என வஞ்ச மகளாய் வந்தாளே அந்த அழகிய நிலையில் அவளைக் கும்பகருணன் கண்டானா? அதே காட்சியளாக அவளை வர்ணிக்கின்றானா?

''பொன் ஒழுகு பூவில் உறை பூவையாய்,
எழில் பூவையாய்,
பின் எழில் கொள் வாள் இணை பிறழ்ந்து
ஒளிர் முகத்தளாய்
கன்னி எழில் கொண்டது கலைத் தட
மணித் தேர்,
மின் இழிவ தன்மை, இது, விண் இழிவது
என்ன' (445 / 32)

கானில் உயர் கற்பகம் உயிர்த்த
கதிர் வல்லி,
மேனி நனி பெற்று, விளை காமம்
நிறைவாசத்
தேனின் மொழி உற்று இனிய செவ்வி
நனி பெற்று,
ஓர் மானின் விழி பெற்று, மயில்
வந்தது என வந்தாளே (445 / 33)

அந்தக் கொடியைக் கும்பகருணன் எங்கே கண்டான்?

''நூபுரமும், மேகலையும், நூலும், அறல் ஓதிப்
பூமுரலும் வண்டும், இவை பூசலிடும் ஓசை
தாம் உரை செய்கின்றது; ஒரு தையல் வரும் என்னா
..............................அத்திசை குறித்து, எதிர்
விழித்தவன்'' (445 / 34)

இராமனே யன்றோ?

''விண் அருள வந்தது ஒரு மெல் அமுதம் என்ன,
வண்ண முலை கொண்டு, இடை வணங்க
வருபோழ் தத்து
இரு கண்ணின் எதிர் கண்டவன்,
எண் அருளி, ஏழைமை துடைத்து, எழு
மெய்ஞ்ஞானக்
கண் அருள் செய் கண்ணனே யன்றோ!''
(446 / 35)

''பேர் உழைய நாகர்—உலகில், பிறிது வானில்,
பாருழையின், இல்லது ஒரு மெல் உருவு பாரா,

''ஆருழை அடங்கும்? அழகிற்கு அவதி உண்டோ?
நேரிழையார் யாவர், இவர் நேர்?' என
நினைந்தவன்'' (446 / 36)

அந்த இராமனோயன்றோ!

காதும், மூக்கும், முலையும் அறுபட்டு இலங்கைக்குச் சென்ற சூர்ப்பணகையை யல்லவா கும்பகருணன் கண்டான்! அவன்,

''உதிர மாரி பெய் கார் நிற மேகம்
ஒத்து உயர்ந்தவளை''
(454 / 97)

யல்லவா கண்டான்!

''தங்கையும், அவ்வழி, தலையில் தாங்கிய
செங்கையர் சோரியின் தாரை செய்து இழி
கொங்கையர், மூக்கிலள், குழையின் காதிலள்,
மங்குலின் ஒலி படத் திறந்த வாயினள்''
(491 / 24)

''முடையுடை வாயினள் முறையிட்டு ஆர்த்து எழு
கடையுகக் கடல் ஒலி காட்டக் காந்த வாள்,
குடதிசைச் செக்கரின் சேந்த கூந்தலாள்,''
(491 / 25)

என்ற நிலையில் அல்லவா அவன் அவளைக் கண்டான்!

அப்படியிருக்க, அந்த கோர உருவத்தினளைப் 'பெண் கொடி' என்றானே அதன் உண்மை என்ன?

''ஒரு மானுடன், அரக்கியாகிய தன் தங்கை சூர்ப்பணகையின் அங்கங்களை அறுத்தெறிய முடிந்திருந் தால், அவள் தன் சுய உருவோடு செல்லவில்லை; அவனுடைய பிடிக்குள் அடங்கும் உருவத்தளாய் மாறிச் சென்றிருக்கின்றாள்; அதற்கான மந்திரம் அவளுக்குத் தான் தெரியுமே!' என்றவற்றை உணர்ந்து கொண்டான் கும்பகருணன் எனத் தெரிகின்றது.

எனவே, 'உங்கள் எதிரில் மெல்லிய உடல் தாங்கி வந்த கொடி போன்ற பெண்ணவள்' என்று இலக்குவனுக்கு அவளை இனங்காட்டி, 'அந்தப் பெண், நாங்கள் செய்த

தவப்பயனாய், எங்களுடன் பிறந்தவள்' என்று உறவு காட்டுகின்றான்.

'பெய் தவத்தினோர்' என்ற சொற்றொடரைக் கம்பர் கையாண்டிருப்பதில் இனியும் ஒரு சிறப்பு உண்டு.

அரக்கச் சகோதரர்களாகிய இராவணன், கும்பகருணன், வீடணன் மூவருமே இடைவிடாத் தெய்வத் தொண்டு ஆற்றிச் செய்யும் தவத்தில் வல்லவர்கள்! அவர்கள் செய்த தவமெல்லாம் (வீடணனது தவிர) அவமே போயது, அவர்களுடைய தீய செயலாலும், மூர்க்கத் தனத்தாலும்.

அந்தத் தவமே, போன்றவள் சூர்ப்பணகை. அதாவது பெண்ணாகப் பிறந்தும், தன் பேதைமையால், காமாந்தகாரம் நிரம்பி, பிறந்த குடிப் பெருமையையும் அரக்கர் குலத்தையும் நாசம் செய்வித்ததனால் பெண்மையின் பெருமை நீங்கியவள் என்ற உட்பொருள் பொதிந்துள்ளது!

அதனால் தான், கம்பர் அவளை அறிமுகப்படுத்தும் பொழுதே,

''நீல மா மணி நிற நிருதர் வேந்தனை
மூல நாசம் பெற முடிக்கும் மொய்ம்பினாள்,
மேலை நாள் உயிரொடும் பிறந்து, தான் வினை
காலம் ஓர்ந்து, உடன் உறை கடிய நோய் அனாள்''.
(442 / 8)

எனப் பாடுகின்றார். இறுதியில், இராவணன் இறந்து கிடந்ததைக் கண்டு, வீடணன்,

''கொல்லாத மைத்துனனைக் கொன்றாய்' என்று,
அது குறித்துக் கொடுமை சூழ்ந்து,
பல்லாலே இதழ் அதுக்கும் கொடும் பாவி
நெடும் பாரப் பழி தீர்ந்தாளே!'' (1536 / 223)

என்று சூர்ப்பணகையைக் குறிப்பிட்டுச் சொல்லி அழுகின்றான்!

இனி, 'எம்முடன் பிறந்தாள்' என்ற சொற்றொடர் அரக்கரின் அகம்பாவத்தைக் காட்டி நிற்கின்றது! 'சூர்ப்பணகை எத்தகையவள் ஆயினும் எங்கள் தங்கை; அவள் ஏது செய்தாலும் பிறர் கண்டிக்கவோ தண்டிக்கவோ கூடாது என்பதை உணராயோ?' என இலக்குவனிடம் கும்பகருணன் இறுமாந்து கேட்கும் வகையில் அமைந்துள் ளது அச்சொற்றொடர்.

'அந்தச் சூர்ப்பணகை ஏது தவறும் செய்யவில்லை' என்று கும்பகருணன் கூறுவது போன்ற பொருள் தரும்படிக் கம்பர், '(அவள்) செய்த குற்றம் ஒன்று இல்லவள்' எனும் சொற்றொடரைப் பெய்துள்ளார். அவ்வாறு தான் ஆன் றோர்கள் அனைவருமே பொருள் கூறி வருகின்றனர்!

அப் பொருளே ஏற்றுது என்று ஏற்றுக் கொள்ள முடிய வில்லை. அந்தப் பொருள் மட்டும் பொருந்தும் படிக் கம்பர் கருதியிருந்தால், 'செய்த குற்றம் ஒன்றும் இல்லவள்' என்று 'உம்'மைச் சேர்த்து தெளிவாகவே கூறியிருப்பார்!

''சூர்ப்பணகை, இராமனைக் கண்டு காமுற்றாள்' என்பது ஒரு குற்றம்; இரண்டாவதாகத் தன் இச்சையை நிறைவேற்றிக் கொள்ளும் சூழ்நிலையை யுண்டாக்கிக் கொள்ளும் வகையில் சிதையை ஒழிக்கச் சென்றாள்; அது இரண்டாவது குற்றம். தன் அங்கங்கள் அறுக்கப்பட்ட வுடன், கர தூடணர்களிடம் சென்று அழுது, அவர்களை இராம இலக்குவருடன் போர் செய்யச் செய்தாள், இராவணாதியர் அனுமதி இன்றியே என்பது அவளுடைய மூன்றாவது குற்றம். கர தூடணர்கள் அழிந்தபின் அவள் இலங்கைக்கு ஓடி தமையன்கள் இருந்த சபையில் ஓலமிட்டு முறையிட்டாள் என்பது குற்றமன்று. ஆனால், இராவண னுக்காகச் சிதையென்னும் அழகியைத் தூக்கி வரச் சென்ற பொழுது, தான் அவமானப்படுத்தப் பட்டாள் எனப் பொய் கூறினாளே, அது அவளுடைய அடுத்த குற்றம். இப்படி யாக, அவள் செய்த குற்றம் ஒன்று இல்லை; பலவாகும்.

என்பதை மறை பொருளாய்க் காட்டவே கம்பர் அந்த 'ம்' மைச்சேர்க்காது, 'செய்த குற்றம் ஒன்று இல்' எனப்பாடி அவளுடைய உண்மை நிலையை உணர்த்துகின்றார்.

அத்தகைய குற்றங்கள் பல புரிந்துள்ள 'அவள் நாசி வெஞ்சினத்தால் கொய்த கொற்றவ!' என இலக்குவனை விளிக்கின்றான், கும்பகருணன். அவளுடைய மூக்கைக் கொய்தது இலக்குவனனின் பொல்லாத கோபம். அந்தக் கோபத்திற்கு ஆளாகிய உணர்ச்சிப் படிவத்தைக் 'கொற்றவ!' என விளிப்பது, கும்பகருணன் இலக்குவனை ஏளனம் செய்வதாகும்.

கும்பகருணன், இலக்குவனிடம் ஏளனம் மட்டும் காட்டவில்லை; அவனுக்குப் பண்பாட்டையும் உணர்த்து கின்றான்!

'என் தங்கையைத் தண்டித்த காரணத்தால் உன்னைக் கொல்வேன்; இயன்றால் தப்பித்துப் போ' என்று பொதுப் படையாகக் கும்பகருணன், இலக்குவனிடம் சவால் விட்டி ருந்தாலே போதும். ஆனால், அவன், குறிப்பாக இலக்குவ னுடைய கைகளைத் துண்டித்து நிலத்தில் விழச் செய்வேன்' என்றல்லவா கூறுகின்றான்!

அதற்கு அவன் கூறும் காரணம்தான் மனிதப் பண் பாட்டினை நினைவூட்டி நிற்கின்றது!

ஏது பிழை செய்யினும் ஏந்திழையரை அடுத்த ஆடவர் கைப்பற்றுதல்—கைதொடுதல்—என்பது நெறிமுறையானது அன்று!

தமிழ்நாட்டில் பிறந்து நற்பண்பாட்டில் ஊறி வளர்ந்தவர் அல்லவா, கம்பர்! அறியாமல் இழைத்த, குற்ற மல்லாக் குற்றத்திற்காகவே பொற்கைப் பாண்டியனின் கை வெட்டிக்கொள்ளப்பட்டது என்றால், அடுத்த ஒரு பெண்ணைத் தனக்கு உரிமையற்றவளைத் தொட்டிழுத்த கை வெட்டப்பட வேண்டும் என்பதை கவிச் சக்கரவர்த்தி

இலக்குவன் வகையில் சொல்லாமல் சொல்கின்றார், கும்பகருணன் வாயிலாக!

'என் தங்கை ஒரு குற்றமும் புரிந்தவள் அல்லள். பல குற்றங்கள் புரிந்தவளே! என்றாலும், நீ அடுத்தபெண்ணை— என் தங்கையைத்—தீண்டியது மட்டு மல்ல; அவளுடைய அந்தரங்க அங்கங்களையும் அல்லவா உன் கைகள் கொய் துள்ளன! இந்தப் பண்பாட்டு ஈனச் செயல் செய்த உன் கைகளை வெட்டி வீழ்த்துவேன்' என்ற முறையில் கும்பகருணன் சவால் விடுகின்றான் எனப் பார்க்கும் பொழுது 'நம் கவிச் சக்கரவர்த்தியின் கைகளைப் பற்றி ஈர்த்து நமக்குள் இணைத்துக்கொண்டாலாவது அவர் போல் எழுத நமக்கு வல்லமை வருமா?' என்று ஏங்குகின்றோம்!

# 22. தேடினென் நின்னை!

போர்க்களத்தில் கும்பகருணன் சுக்கிரீவனோடு சண்டையிட முனைந்தான். இருவரும் கடுமையாகப் போர் புரிந்து கொண்டிருந்தனர். சுக்கிரீவன், யானைகளும் பாம்புகளும் நிறைந்த மலையொன்றினை அடியோடு பெயர்த்து கும்பகருணன் மீது வீசினான். அம்மலையினின்றும் இறங்கிய யானைகள் அரக்கர் படையிலிருந்த யானைகளோடு மோதின; மலைப் பாம்புகளோ யானைகளின் கால்களைக் கவ்விக் கொண்டன; அதனால், அரக்கருடைய யானைகள் நகர முடியாமல் தவித்தன. அத்தகைய மலையைக் கும்பகருணன் தன் ஒரு கையால் ஏந்தித் தாங்கிக் கொண்டான். மறு கையால் அதனைப் பொடியாக்கிச் சுக்கிரீவன் கண்ணெதிரே வீசி யெறிந்தான்! சுக்கிரீவன் வேறோர் மலையைப் பிடுங்கலாம் என்று எண்ணும் வேளைக்குள், அவன் உயிரையே பிடுங்க வல்ல சூலாயுதத்தை கும்பகருணன் அவன் மேல் ஏவினான். தூரத்தேயிருந்து இதனைக் கண்டு விட்ட அனுமன் தாவிச் சென்று அச்சூலாயுதத்தைப் பிடித்து நிறுத்தி முறித்து எறிந்தான்.

அதனைக் கண்ட கும்பகருணன் அவனுடன் போர் புரிய அறைகூவல் விட்டான். ஆனால் அவனோ, ஏற்கனவே 'நான் சண்டை செய்ய மாட்டேன்' என இராவணனிடம் உறுதியளித்திருந்தமையால் கும்பகருணனோடு போர் புரியாமல் போயினான்.

சுக்கிரீவனும் கும்பகருணனும் மீண்டும் போரைத் தொடர்ந்தனர். ஒருவரையொருவர் வலிமையாகத் தாக்கிக்

கொண்டனர். ஒரு கட்டத்தில் சுக்கிரீவன் சற்றே சுய நினைவு இழந்தான்.

மயங்கிய சுக்கிரீவனை கும்பகருணன் இரு கைகளாலும் தூக்கி, மேல் ஏந்திய வண்ணம் இலங்கைக்கு எடுத்துச் செல்ல புறப்பட்டான். அனுமனோ அதனைக் கண்டும் தன் வாக்கை மீறக் கூடாத நிலையில் கும்பகருணனைத் தாக்கிச் சுக்கிரீவனை விடுவித்துக் கொள்ள முடியவில்லை; அவன் கும்பகருணன் பின்னே கை பிசைந்த வண்ணம் சென்றான்.

இந்த நிகழ்ச்சியைக் கண்ணுற்ற வானர வீரர்கள் வாய் விட்டு ஓலமிட்டனர்; செய்தியை இராமனுக்குச் சென்று செப்பினர்.

இராமன், உடனே கும்பகருணன் வெளியே செல்லக் கூடிய வாயிலை அடைத்தான். கும்பகருணன் எதிரில் வந்தான். அவன் இராமனை பலவாறு இடித்துரைத்தான்.

'கவந்தனையும், வலியிழந்து நின்ற வாலியையும் போல் என்னைத் தாக்கி, சுக்கிரீவனைக் காக்க வந்தனையோ? இது காணத்தகுந்த காட்சியே!' (1182 / 281) என்று ஏளனம் செய்தான். 'உன் தம்பி மீது எனக்குக் கோப மில்லை; அவனுக்கு ஊர்தியாகப் பணியாற்றிக் கொண்டிருக்கும் அனுமன் மேல் எனக்குக் கோபமில்தை; வாலியின் தம்பியாகிய சுக்கிரீவன் மேல் எனக்குக் கோபமில்லை; அவர்களைச் சினந்து நிற்றல் எனக்குப் புகழ் அல்ல என்ற காரணத்தால் அவர்கள் மேல் நான் கோபப்படவில்லை' (1182 / 282) என்று கும்பகருணன் இராமனிடம் பெருமிதமாக எடுத்துரைத்தான்.

அடுத்து, கும்பகருணன், இராமனிடம்,

'தேடினென் திரிந்தனென் நின்னை; திக்கு இறந்து
ஓடியது உன் படை; உம்பி ஒய்ந்து, ஒரு
பாடு உற நடந்தனன்; அனுமன் பாறினன்;
ஈடுறும் இவனைக் கொண்டு, எளிதின் எய்தினேன்.'
(1182 / 283)

என்று, தான் இராமனைத் தேடி அலைந்ததாய்க் கூறினான்.

'உண்மையில் அவன் தேடித் திரிவானா? அவன் கூறியதின் உட்பொருள் என்ன?' என்று சற்றே ஆய்வோம்,

தொடக்கத்தில், மந்திராலோசனை நடந்த பொழுதே கும்பகருணன் பல அற நெறிகளை இராவணனுக்கு எடுத்துரைத்தான்; சீதையைக் கவர்ந்து வந்து சிறை வைத்தமை மாபெரும் பிழை என்றான். அவளை விட்டுவிடாத காரணத்தால் போர் மூளுமேல் அந்த மானிடரே வெல்வர் என்றெல்லாம் எடுத்துக் கூறினான். என்றாலும், தன் தமையனின் மனப்போக்கிற்கு இணங்க,

'வென்றிடுவர் மானுடவரேனும், அவர் தம் மேல்,
நின்று, இடைவிடாது நெறி சென்று, உற நெருக்கித்
தின்றிடுதல் செய்கிலம் எனின், செறுநரோடும்
ஒன்றிடுவர் தேவர்; உலகு ஏழும் உடன் ஒன்று ஆம்''
(973 / 55)

என்று கூறலுற்றான்.

ஆக, அங்கே கும்பகருணன் இராம இலக்குவரை 'மானுடவர்' என்றே குறிப்பிடுகின்றான். தொடர்ந்து பேசும் பொழுதும் அவர்களை 'நரர்' (973 / 56) என்று தான் குறிப்பிடுகின்றான்.

மீண்டும், உறங்கியிருந்த அவனை எழுப்பி, இராவணன் போருக்கு அனுப்ப ஆயத்தப் படுத்தும் பொழுது,

''.........................பெரு வலி இராமன் தோள்களை''
(1153 / 81)

என்று இராமனைச் சாதாரணமாகத்தான் குறிப்பிடுகின்றான்.

ஆனால், போர்க்களத்தில் தன்னிடம் வந்த வீடணன் பால் அவன் பேசும் பொழுது இராமனைப் பற்றிய

ம்பகருணனின் நோக்கும், அதனால் இராமனை அவன் குறிப்பிடும் வாக்கும் மிக உயர்ந்து விடுகின்றன. 'இராம இலக்குவரை அவன், 'அறப்பெருந் துணைவர்' என்று குறிப்பிடுகின்றான் (1161 / 133)! 'இராமன் என்பளவும் மற்று இப் பிறப்பு எனும் புன்மை இல்லை (1161 / 133)' என்று வேறு திட்டவட்டமாகச் சொல்கின்றான்.

தொடர்ந்து பேசுங்கால் கும்பகருணன் இராமனை 'இறைவன்' என்றே கூறுகின்றான்!

''ஏற்றிய வில்லோன், யார்க்கும் இறைவன்:
இராமன் நின்றான்'' (1161 / 136)

என்பான்! வீடணன், இராமனை விட்டுவிடாமல் அவனிடமே அடைக்கலமாகி இருக்க வேண்டும் என்றும் கும்பகருணன் கூறிவிடுத்தான்.

இவ்வாறு படிப்படியாக இராமன்மேல் கும்பகருணனுக்கு மரியாதை மிகுந்து வந்தது, அவனுடைய உள்ளுணர்வின் உந்துதலாலேயே! அதனாலேயே, மேலே குறிப்பிட்டுள்ள வண்ணம் இராமனைச் சென்று பகைமைப் பாங்கில் அவனைத் தேடியதாகக் கும்பகருணன் கூறினாலும், இறுதியில் அவனுடைய ஆன்மா இராமனிடம் அடைக்கலம் அடையத் துடித்தது!

வீடணன், இராமனிடம் கும்பகருணனை அழைத் தானே! அப்பொழுதே அவனுடன் சென்றிருந்தால் இராமனைத் தான் தேடி அலைந்ததாகக் கூறவேண்டிய அவசியம் இல்லையே!

முதலில், சீதையைத் தேடி அனுமன் இலங்கையை அடைந்து, அரக்கர்களை அழித்தான்; அவன் பிடிபட்டு இராவணன் முன்னர் கொண்டு வரப்பட்டான்; இராவணன் 'தூதுவனாக வந்துள்ள நீ அரக்கர்களைக் கொன்றது ஏன்?' என்று கேட்டான். அதற்கு அனுமன்,

''காட்டுவார் இன்மையால், கடி காவினை
வாட்டினேன்; என்னைக் கொல்ல வந்தார்களை
வீட்டினேன்; பின்னும் மென்மையினால் உன் தன்-
மாட்டு வந்தது, காணும் மதியினால்'' (921 / 109)

என்று காரணம் கூறினான்.

அதே போலான நடையில் இப்பொழுது கும்பகருணன், தான் இராமனைக் காணும் காரணத்திற்காக ஒவ்வொரு வருடனும் சண்டையிட்டு, அனைவரும் வெகுண்டு ஓட இந்த சுக்கிரீவனுடன் சண்டையிடும் பாங்கில் இராமனைக் காணும் வாய்ப்பை உண்டாக்கி கொண்டதாகக் கூறினான்.

இனி, இராமனுக்கும் கும்பகருணனுக்கும் போர் நிகழ்ந்தது! கும்பகருணன் கைகால் முதலிய அங்கங்கள் அனைத்தும் அறுபட்டும் வீரப்போர் புரிந்தான். இறுதியில், அவனுடைய உள் உணர்வு முழுமையாக அனைத் தூண்டுவிக்க, அவன் இராமனிடம் வரங்கள் கேட்கும் நிலைக்கு வந்தான்! தன் தம்பி வீடணனுக்காகப் பரிந்து,

''நீதியால் வந்தது ஒரு நெடுந் தரும நெறி அல்லால்,
சாதியால் வந்த சிறு நெறி அறியான், என் தம்பி;
ஆதியாய்! உனை அடைந்தான்; அரசர்
உருக்கொண்டு அமைந்த
வேதியா! இன்னம் உனக்கு அடைக்கலம்
யான் வேண்டினேன்'' (1196 / 354)

என வேண்டிக் கொண்டான்!

பிறகு, தனக்காகவும் ஒருவரம் தர வேண்டி நின்றான்!

'மூக்கு இலாமுகம்' என்று முனிவர்களும் அமரர்களும்
நோக்குவார் நோக்காமை நுன் கணையால்
என் கழுத்தை

நீக்குவாய்; நீக்கிய பின், நெடுந் தலையைக்
கருங்கடலுள்
போக்குவாய்; இது நின்னை வேண்டுகின்ற
பொருள் என்றான்.'' (1196 / 357)

இராமனும் அவனுடைய வேண்டுகோளை நிறை வேற்றினான் எனப் பார்க்கிறோம்.

எனவே, இராமனைக் கண்டதும் கும்பகருணன், அவனைத் தேடித் திரிந்ததாகக் கூறியது உண்மை; அவனுடைய உள் மனம் உந்தியதால் இறுதியில் அவன் இராமனிடம் சரணாகதி அடைந்து ஆன்மசாந்தி அடைந்தான். அதனைக் குறிப்பால் காட்டவே கவிச் சக்கரவர்த்தி கும்பகருணன் வாயிலாக அவ்வாறு 'தேடினென் நின்னை' எனப் பாடியுள்ளார் எனப் புரிந்து கொள்கின்றோம்!

## 23. எம்பி பிரியனாக அருளுதி

கும்பகருணனோடு நீலன் போர் செய்து தோற்றான்; அங்கதன் தோற்றான்; நெடும் போர் புரிந்து இலக்குவன் அயர்ந்தான்; சுக்கிரீவன் ஒருமுறைக்கு இருமுறை சோர்ந்தான்; இறுதியாக இராமனே போர் செய்தான், கும்பகருணனுடன். இருவருக்கும் இடையே பெரும் போர் தொடர்ந்தது.

இராமன், கும்பகருணனின் கைகளை ஒவ்வொன்றாகத் துண்டித்தான். அவன் தன் கால்களைக் கொண்டே இடைவிடாது சண்டை செய்தான். இராமன் அவனுடைய கால்களை ஒவ்வொன்றாகத் துண்டித்தான். அவன் தன் பற்களாலேயே பெருங் கற்களைக் கௌவி எடுத்துப் போர் செய்தான். இதனால் இராமனே கை நடுக்கம் பெற்றான்!

அந்த நிலையில் கும்பகருணன் உள் உணர்வு பெற்று இராமனின் முகம் நோக்கிப் பேசலானான். தன் பேச்சின் இறுதியில் அவன்,

> 'தம்பி என நினைந்து, இரங்கித் தவிரான்;
> அத் தகவு இல்லான்;
> நம்பி! இவன்தனைக் காணின் கொல்லும்;
> இறை நல்கானால்;
> உம்பியைத்தான்; உன்னைத்தான், அனுமனைத்தான்
> ஒரு பொழுதும்
> எம்பி பிரியனாக அருளுதி; யான் வேண்டினேன்''
> (1196 / 356)

எனக் கேட்டுக் கொண்டான் என்று கவிச் சக்கரவர்த்தி பாடுகின்றார்.

''நீதியால் வந்தது ஒரு நெடுந் தரும நெறி அல்லால்,
சாதியால் வந்த சிறு நெறி அறியான்,
என் தம்பி;'' (1196 / 354)

என்று விடணனைப் பற்றித் தெளிவான கருத்துக் கொண்டுள்ள கும்பகருணன், இராமனிடம் விடணனுக்காகப் பரிந்துரைத்தான்! அன்று, போர்க்களத்தினுள் புகுந்து வந்து விடணன், கும்பகருணனிடம் இராமனைப் பற்றிப் பெரிதும் எடுத்துரைத்து அவனைச் சரண் அடைக் கேட்டுக் கொண்டானே!

''இருள் உறு சிந்தையேற்கும் இன் அருள்
சுரந்த வீரன்
அருளும், நீ சேரின்; ஒன்றோ, அவயமும்
அளிக்கும்; அன்றி,
மருள் உறு பிறவி நோய்க்கு மருந்தும்
ஆம்; மாறிச் செல்லும்
உருளுறு சகட வாழ்க்கை ஒழித்து, வீடு
அளிக்கும் அன்றே''
(1161 / 139)

என்றெல்லாம் விடணன் தெளிவுறுத்தினானே! அப்பொழுது மனம் மாறாத கும்பகருணன் இப்பொழுது மாறிப் பேசுகின்றானே! ஏன்?

அவனுக்கு, அன்றே, 'இராமன் வேதமுதல்வன்' என்பது தெரியும். அதனால் தான் விடணனிடம்,

''போதி நீ, ஐய! பின்னைப் பொன்றினார்க்கு
எல்லாம் நின்ற
வேதியர் தேவன் தன்னை வேண்டினை
பெற்று, மெய்ம்மை
ஆதி நூல் மரபினாலே, கடன்களும் ஆற்றி, ஏற்றி,
மாதுயர் நரகம் நண்ணா வண்ணமும்
காத்தி மன்னோ''
(1165 / 166)

என்றான்.

எதிரி யாரெனத் தெரிந்தும், கும்பகருணன், வீடணனிடம் தான் செய்யப் போகும் போர்த் திறமையைப் பற்றிப் பெருமிதத்துடன் பேசினான்; பேசிய வண்ணமே இராமனே திகைக்கும்படிப் போர் புரிந்து அனைவரையும் தோல்வி தழுவச் செய்தான்; இப்பொழுது இராமனையே எதிர்த்துத் திணற அடித்துக் கொண்டிருக்கிறான்!

இந்த நிலையில் அவன் ஓர் உள் உணர்வு பெற்றான் எனில் அது, இராமன், 'ஆதியான்! அரசர் உருக் கொண்டு அமைந்த வேதியான்' (1196 / 354) என்பதாய் இருக்க முடியாது! தான் தன் தம்பியிடம் போர்த் திறம் பற்றிச் சொல்லியது எப்படி நடந்தேறி வருகின்றதோ, அப்படியே' இராவணனிடம் தான் சொல்லி வந்த வார்த்தை அவன் உணர்வின் நினைவிற்கு வந்தது!

''என்னை வென்றுளர் எனில், இலங்கை காவல!
உன்னை வென்று உயருதல் உண்மை; ஆதலால்,
பின்னை நின்று எண்ணுதல் பிழை; அப் பெய்வளை—
தன்னை நன்கு அளிப்பது தவத்தின் பாலதே''
(1155 / 97)

என்று சொல்லிச் சென்றானே அது நினைவிற்கு வந்தது! அதனால் தான், தன் உயிர்ப் போகும் தறுவாயிலும்,

''அய்யன் வில் தொழிற்கு ஆயிரம் இராவணர்
அமைவிலர்'' (1195 / 351)

என்று தன் மனத்தே நினைந்தான்,

முதலில்! இந்த இடத்திலும், இராமனைக் கும்பகருணன் பெருமிதமாகவே எண்ணுகின்றான் என்பது அவன், இராமனை, 'அய்யன்' என நினைந்ததால் தெளிவு. அப் பேற்பட்ட 'அய்யன்' தன்னோடுதான் இதுவரை பொருதது போதும் என்று நினைந்தானா? இல்லை; மாறாக,

''...... ......... ......... ......... அந்தோ! யான்
கய்யும் கால்களும் இழந்தனென்; வேறு இனி
உதவல் ஆம் துணை காணேன்;'' (1195 / 351)

என்று வேதனைப்படுகின்றான்!

''மானிடர் இருவரை வணங்கி, மற்றும் அக்
கூனுடைக் குரங்கையும் கும்பிட்டு, உய்தொழில்
ஊனுடை உம்பிக்கும் உனக்குமே கடன்;
யான் அது புரிகிலேன்; எழுக, போக''! (1155 / 92)

என்று சினந்து பேசினான் இராவணன் கும்பகருணனிடம். அதே பாங்கில், கும்பகருணன், வீடணனிடம் போர்க்களைச் சூழலில்,

''செம்பு இட்டுச் செய்த இஞ்சித் திருநகர் செல்வம் தேறி,
வம்பு இட்ட தெரியல் எம்முன் உயிர் கொண்ட பகையை வாழ்த்தி,
அம்பு இட்டுத் துன்னம் கொண்ட புண்ணுடை நெஞ்சோடு, ஐய!
கும்பிட்டு வாழ்கிலேன் யான் — கூற்றையும், ஆடல் கொண்டேன்!'' (1164 / 160)

என்று கூறியனுப்பினானே! இப்பொழுது கருத்தும் செயலும் மாறுவானா?

நீர்க்கோல வாழ்வை நச்சி நெடிது நாள் வளர்த்துப் பின்னைப்
போர்க் கோலம் செய்து விட்டாற்கு உயிர் கொடாது, அங்குப் போகேன்'' (1164 / 155)

என்று கூறினானே, அதனைத் தான் மறப்பானா? இல்லை;

''வென்று இவண் வருவென் என்று உரைக்கிலேன்; விதி
நின்றது; பிடர் பிடித்து உந்த நின்றது;
பொன்றுவென்; பொன்றினால், பொலன்கொள் தோளியை
'நன்று' என நாயக விடுதி; நன்று அரோ'' (1155./ 95)

என்று இராவணனிடம் கூறியதிலிருந்தே அவன் போரில் இறப்பது உறுதி என்று தெளிவாக இருந்தான். ஆனால், தன் தமையனுக்காக— இராவணனுக்காக—வருந்தினான், பச்சாதாபப் பட்டான்!

அதனால்,

''மய்யல் நோய் கொடு முடிந்தவன் நாள் என்று,
வரம்பு இன்றி வாழ்ந்தானுக்கு
உய்யுமாறு அரிது என்று, தன் உள்ளத்தின்
உணர்ந்து, ஒரு துயருற்றான்'' (1195 / 351)

என்பார் கம்பர்.

'ஒரு' துயருற்றான் என்றதனால் மறு துயர் ஒன்று இருந்திருக்க வேண்டும் என்றாகின்றது, அல்லவா?

அந்த, மற்றைய துயர் என்ன? கும்பகருணன், இராவணன்—வீடணன் ஆய இரு சகோதரரையும் ஒன்று போல நேசிப்பவன்! முன்னவனை உடலாலும், பின்னவனை உள்ளத்தாலும் எடையிட்டான்; அவ்வவர்க்கு ஏற்ப, முறையே செயல் புரிந்தும், செம்மொழி பகர்ந்தும் நின்றான். இது, போர்க்களச் சூழலில் கும்பகருண—வீடண உரையாடலிலிருந்து தெளிவாகும்.

ஆகவே, தமையனுக்காகப் பச்சாதாபப்பட்டவன் தம்பிக்காகவும் ஒரு துயருற்றான்!

தம்பி வீடணனுக்கும் அழிவு நேர்ந்து விட்டால் என் செய்வது என்று ஐயுற்று அஞ்சினான். அவன் அழிவு இரு வகையால் வரக் கூடும் என்று எண்ணினான்! ஒன்று வெளிப் படையானது. தன்னை விட்டு, தன் மக்களை விட்டு வெளியேறியிருந்தால் மட்டும் இராவணனுக்கு வீடணன் மேல் சினம் அதிகமாய்த் தோன்றி யிருக்காது. ஆனால், அவனோ எதிரிப் பாசறையில் அடைக்கலம் புகுந்து இருந்து கொண்டு, தன் நாட்டைப் பற்றி உளவுகள் கூறி ஒவ்வொருவராய்த் தோற்கடிக்கச் செய்து கொண்டிருக்கிறான். எனவே, அவன் பேரில்

இராவணத் தமையன் எல்லையில்லா சினம் கொண்டு சமயம் வாய்க்கும் பொழுது தீர்த்தே கட்டி விடுவான்! இதனில் வியப்பு இல்லை; மனோ தத்துவ வகையில் பிழையும் இல்லை; எனவே அவனை இராவணன்—இராவணனின் ஆட்கள்—அணுகிவிடாமல் இராமன் காக்க வேண்டும் என்பதை வலியுறுத்தி இராம, இலக்குவர், அனுமன் ஆய மூவருள் ஒருவரை எப்பொழுதும் அண்டியே இருக்கும் சூழ்நிலை வேண்டும் என்றான். 'எம்பி பிரியனாக அருளுதி' என்றான்.

வீடணன் அழிவிற்குக் கும்பகருணன் அஞ்சிய மற்றொரு மார்க்கம் மறைவானது!

வாலி செய்த பிழை என்ன? நிரம்பிய பக்திமான். தன் வாலினால் இராவணனையே கட்டியிழுக்க வல்ல வலிமை கொண்டவன். அப்பேற்பட்டவனைக் கொன்றது யார்? வேத முதல்வனாகிய இராமன்! அது தெரிந்து தான் வாலி, இறுதியில்,

''ஏவு கூர் வாளியால் எய்து, நாய் அடியனேன்
ஆவி போம் வேலைவாய், அறிவு தந்து
அருளினாய்
மூவர் நீ! முதல்வன் நீ! முற்றும் நீ! மற்றும் நீ!
பாவம் நீ ! தருமம் நீ ! பகையும் நீ! உறவும் நீ !''
(642 / 129)

என்று துதித்துப் பாடினான்!

அவன் செய்த ஒரே பிழை இராமனுக்கு மாற்றானாகிய-தேவர்களுக்கு மாற்றானாகிய - இராவணனுடன் நட்புப் பூண்டது தான்! அதாவது அவன் மாற்றுப் பாசறைக்குச் சென்றது தான்; தான் இராவணனை எதிர்க்கும் தேவர் கணத்தில் இந்திரன் கூறாக வந்துள்ளவன் என்பதை மறந்து இலங்கை வேந்தனுடன் நட்புப் பூண்டது தான். (வாலி-சுக்கிரீவ மனவேற்றுமை, 'ருமை' செய்தி எல்லாம் வாலியைக் கொல்வதற்காக ஏற்பட்ட உலகியல்

காரணங்கள்!) வாலி, குலத்து மானம் முழுமையாய்க் காக்கத் தவறி விட்டான் என்பதே பிழை!

ஆக, மாற்றான் பாசறையில் முன்னமேயே நட்புக் கொண்டு விட்டவனை மாலவன் ஐயுற்று அழிந்தான்- அதுவும் மறைந்து நின்று கொன்றான்- என்றால் மாற்றானாகிய தன் பாசறைக்கு வந்து சரண் புகுந்து, குலத்து மானம் சற்றும் இன்றி இலங்கையர் முழுமையாய் அழிவதற்கு வழிவகுத்தவன் மீதும் ஐயம் ஏற்படுவது இயற்கைதானே! கட்சி விட்டு கட்சி மாறுபவர்களைக் கண்டித்தல்-தண்டித்தல் தவறல்லவே.

அந்த வகையில் வீடணன் தேசத்துரோகி, கட்சி மாறி என்ற காரணத்தால் இராமன் பாசறையில் அவர்களா லேயே அழிவு ஏற்பட்டு விடுமோ எனக் கும்பகருணன், ஐ யுற்றான்; அஞ்சினான். அதனால், இராமனிடம்

''சாதியால் வந்த சிறுநெறி அறியான், என் தம்பி''
(1196 / 354)

என்று நினைவுபடுத்தினான். அவன் சாதிப் புத்தியைக் காட்ட மாட்டான்; எனவே,

உம்முடைய கைக்கு அடைந்தான் உயிர்
காக்கக் கடவீர்' (1196 / 353)

என்று வலியுறுத்தினான்! இவன் கூறவில்லையென் றால் இராமன் வீடணனைக் காவாது விடுவானோ? ஆனால், இராமனும் மனிதன் தானே! 'மானுடம் வென்ற தம்மா!' என்ற புகழை ஏற்படுத்த வந்த மனிதன் தானே! உலகியல் அனுபவங்களால் அவன் மனம் மாறிவிட்டால்!

ஆக, இருவேறு வழிகளில், வீடணனுக்கு வரக் கூடிய ஆபத்துக்களையும் உள்ளடக்கியே, கும்பகருணன், இராம னிடம் 'எம்பி பிரியனாக அருளுதி' என்ற வரம் கேட்டான் என்று ஆகின்றது!

இராம இலக்குவரோடு அனுமன் ஆகிய மூவரை மட்டும் குறிப்பிட்டுப் பிரியா வரம் கேட்டதற்கு வேறு ஒருகாரணமும் உண்டு. வீடணனுக்கு அடைக்கலம் தருவதுபற்றி இராமன் ஒவ்வொருவரின் கருத்தையும் கேட்டபொழுது, அனுமன் ஒருவனைத் தவிர மற்றைய அனைவரும் அவனுக்கு எதிராகவே பேசினர்; அவனுக்கு அடைக்கலம் தருவதற்கு எதிர்ப்புத் தெரிவித்தனர். அதனால், அனுமன் உட்பட்ட அம்மூவர் நீங்கலாக அனைவரின் மனமும் வீடணனை நம்ப மறுபரிசீலனை செய்ததோ, இல்லையோ; இல்லையென்றால், அவர்கள் என்றைக்கும் அவனுக்கு விரோத மனப்பான்மையுடன் தீங்கு விளைவிக்கக் கூடும் என்ற ஐயம் இருந்தது!

இந்த அடிப்படையிலும் கவிச் சக்கரவர்த்தியின் சொற்றொடர் அர்த்தமுள்ளதாய் அமைந்துள்ளதை உணர்ந்து உவக்கின்றோம்.

# 24. அலங்கல் மார்பம்

மாவீரர்களின் மார்பகத்தை வியந்தும் புகழ்ந்தும் குறிப்பிடும்பொழுது அதனில் விளங்கும் மலர் மாலையை—வெற்றி மாலையைக்—காட்டி வர்ணிப்பது தமிழ்—தமிழர்—மரபு. எனவே, வடமொழிக் காதையில் தமிழர் மரபிற்கும் பண்பாட்டிற்கும் ஏற்ப மாற்றங்களைச் செய்து மாபெருங் காப்பியத்தைப் படைத்துப் புகழ் பெற்று விளங்கும் கவிச் சக்கரவர்த்தி கம்பர் இந்த வர்ணனையைக் கையாண்டுள் ளார், இராமாவதாரத்திலே என்று இயம்பவும் வேண் டுமோ!

பால காண்டம் பூக் கொய் படலத்திலேயே வீரர் தம் மார்பகங்களின் மாண்பிலே மயங்கிக் கவிக் கூற்றாகக் கம்பர் வர்ணிக்கின்றார், இவ்வாறு:

''செம் பொன் செய் சுருளும் தெய்வக்
குழைகளும் சேர்ந்து மின்ன
பம்புதேன் அலம்ப ஒல்கி,
பண்ணையின் ஆடல் நோக்கி,
கொம்பொடும், கொடி அனாரைக்
குறித்து அறிந்து உணர்தல் தேற்றார்,
வம்பு அவிழ் அலங்கல் மார்பின்
மைந்தரும், மயங்கி நின்றார்'' (142 / 5)

அடுத்து ஒரு காட்சி, அயோத்தியா காண்டத்தில்! கோசலத்தின் கோமகனாகத் தன் அருந்தவப் புதல்வன், ஆடவர் திலகன், அண்ணல், இராமனுக்கு மகுடம் சூட்டிட, தயரதன் முடிவெடுத்தான். தனயனை அழைப்பித்தான்;

வீரன் கம்பீரமாக வந்தடைந்தான்; வந்தவனை அன்பின் மிகுதியால் தந்தை அரவணைத்துக் கொண்டான்.

இக்காட்சியில் அன்பின் பெருக்கத்தை மட்டும் வெளிப் படுத்தி மன நிறைவு கொள்ளாத கம்பர் இராமனின் வீரத்தை—வீர மார்பை அளக்கவும் ஆவல் கொண்டார்!

''நலம் கொள் மைந்தனைத் தழுவினன்' என்பது என் நளிநீர்
நிலங்கள் தாங்குறு நிலையினை நிலையிட நினைந்தான்
விலங்கல் அன்ன திண் தோளையும் மெய்த்திருஇருக்கும்
அலங்கல் மார்பையும் தனது தோள் மார்பு கொண்டு அளந்தான்'' (234 / 59)

எனப்பாடிக் கற்பனை புரிகின்றார். நாமும் அவருடைய சொல்லளவு கொண்டு, இராமனின் மார்பகத்தை அளந்து, வியந்து, நமது மார்பகம் விரிந்திட அவனையே நம் நெஞ் சத்தில் எழாவகை இருத்தி மகிழ்கின்றோம்!

இராமனுக்கு அரசியல் அறங்களை எடுத்துக் கூறும்படி, தயரதன் வசிட்ட மாமுனிவரைக் கேட்டுக் கொள்கின்றான். அவரும் இராமனின் இருப்பிடத்திற்குச் செல்கின்றார். தன்னை நாடிவரும் குலகுருவை இராமன் வரவேற்கின்றான், அந்தச் சூழ்நிலையில் இராமனைக் கவிச் சக்கரவர்த்தி,

'அலங்கல் வீரன்' எனக் குறிப்பிடுகின்றார். ஏன்? (244 / 12)

தயரதன், மந்திராலோசனையை முடித்துக் கொண்டு, அனைவரும் இராமனுக்கு மகுடம் சூட்டுவதை மகிழ்ந்து ஒப்பிய பின் தனயனை அழைத்துவர சுமந்திரனை அனுப்பு கின்றான். அப்பொழுது தயரதனைக் கம்பர், 'அலங்கல் மன்னன்' எனக்காட்டுவார். ஆம்; அவன்,

''எய்' என எழுபகை எங்கும் இன்மையால்,
மெய் பெருத்தினவு உறு முழவுத் தோளினான்'' (32 / 12)

என்று போற்றப்படும் அளவிற்குக் 'கலங்கலில் மரபின் அலங்கல் வீரனாய்த்' திகழ்ந்தவன்;

''நேமி மால் வரை மதில் ஆக, நீள்புறப்
பாம மா கடல் கிடங்கு ஆக, பல் மணி
வாம மாளிகை மலை ஆக, மன்னற்குப்
பூமியும் அயோத்தி மா நகரம் போலுமே'' (31 / 7)

என்றெல்லாம் பாடிப் புகழும் அளவிற்கு உலக முழுவதும் வென்றி கொண்ட 'அலங்கல் வெற்றியான்'.

''வயிர வான் பூண் அணி மடங்கல் மொய்ம்பினான்,
உயிர் எலாம் தன் உயிர் ஒக்க ஓம்பலால்,
செயிர் இலா உலகினில் சென்று, நின்று, வாழ்,
உயிர் எலாம் உறைவது ஓர் உடம்பும் ஆயினான்.
(31 / 10)

என்று உலகியல் முறையையே மாற்றிப் பாடும் அளவிற்குத் தயரதன் அரசியல் திறத்தால் புகழ் மாலை கொண்ட அலங்கல் அரசியல் மேதை!

இவ்வாறு ஒவ்வொரு வகையிலும் 'அலங்கல்' பூண்டுள் ளவனை அனைத்துத் திறன்களையும் உள்ளடக்கும் சொற் றொடராகிய 'அலங்கல் மன்னன்' என்பதனால் குறிப்பிட் டார்!

ஆனால், இராமனோ தாடகை வதம், சுபாகு வதம் போன்றவற்றாலும், மிதிலையில் சனகனிடமிருந்த வில் லொடித்த செயலாலும், இதுவரை தன் வீரத்தை மட்டும் வெளிப்படுத்தியிருந்தான். தந்தையின் மற்ற சீர்மைகள் வெளி வரவில்லை; எனவே, அவனுடைய அச்சிறப்பை மட்டும் காட்டி 'அலங்கல் வீரன்' என்று கம்பர் குறிப்பிட்டார், எனக் கொள்ளலாம்!

என்றாலும், இராமன் இருந்த சூழல் என்ன? தந்தை யின்பாற் செல்லுமுன்,

''பெண்ணின் இன் அமுது அன்னவன் தன்னொடும், பிரியா
வண்ண வெஞ்சிலைக் குரிசிலும், மருங்கு இனிது இருப்ப,
அண்ணல் ஆண்டு இருந்தான் அழகு அரு நறவு என,
கண்ணும் உள்ளமும் வண்டு என களிப்புறக் கண்டான்''
(237 / 49)

எனக் கம்பர் படம் பிடிப்பார்.

அந்த இன்பச் சூழலுக்கு ஒரு சிறு இடைவெளி போன்று இராமன், மன்னன் அவைக்குச் சென்று வந்தான்; மீண்டும் அதே சூழலில் தான் இருந்திருப்பான் என்பது இளமையின் வளமை கொண்டோர்க்குப் புரியும்.

எனவே, இராமனை வெளிக் கொணர்ந்த கவிச் சக்கர வர்த்தி அவனை,

''அலங்கல் அழகன்''

என்று வர்ணித்திருந்தால் பொருத்தமாய் இருந்திருக்கும் அன்றோ?

அழகுக் காட்சிகளை அங்கங்கே அழகாய் வர்ணிக்க வல்லவர்க்கு அது தெரியாமலா இருக்கும்! ஆனால், அங்கு வந்து அவனைக் காண இருப்பவர், அழகில் மயங்காத முனிவர்; அது மட்டும் அல்ல; அவர் அவனுடைய வீரத்தை அறிந்தவர். அதனால் மாமன்னன் வாய் மடுத்த வண்ணம் அவனுக்கு அரசியல் அறிவு புகட்டவே வருகின்றார்; வீரத் திறனை விளக்கிக் காட்ட அன்று, அவனுடைய கலை அழகு வளர்க்க அன்று! இத்தகு மனோ நிலையின் அடிப்படையில் தான் ''அலங்கல் வீரன்'' என்ற சொற்றொடர் கொண்டு இராமனைக் கம்பர் வெளிப் படுத்துகின்றார் என்று உணர்ந்து உள்ளம் பூரிக்கின்றோம்.

இனி, கிட்கிந்தைக்கு வருவோம். வாலி, இராமனின் அம்புக்கு இரையாகி வீழ்ந்து பட்டுக் கிடந்தான். அதனை,

''வரை சேர் தோளிடை நாளும் வைகிய''
(647 / 104)

அவனுடைய மனையாளாகிய

''வேல் விழித் தாரை கேட்டாள்''
வந்து அவன் மேனி வீழ்ந்தாள் (647 / 161)

''குங்குமம் கொட்டி என்ன, குவி முலைக் குவட்டுக்கு ஒத்த
பொங்கு வெங் குருதி போர்ப்ப, புரிகுழல் சிவப்ப, பொன்தோள்
அங்கு அவன் அலங்கல் மார்பின் புரண்டனன்''—
(647 / 162)

வாலி, சுக்கிரீவன் போர் புரிந்த பொழுது அவர்கள் இருவரிடையே வேற்றுமை தெரிந்து கொள்ள இயலாமையால் பின்னவனை மாலை அணிந்து மீண்டும் போருக்குப் போகும்படி இராமனே சொல்லி அனுப்பினான். எனவே, வாலியின் கழுத்தில் அவன் இறந்து கிடந்தபொழுது மாலை இல்லை என்பது புலனாகிறது.

என்றாலும், வாலியின் தோள் வலியில் உறுதியும், நம்பிக்கையும், பெருமிதமும் கொண்டிருந்த மனைவி தாரை, அவனுடைய மார்பின் மேல் புரண்டு அழுத பொழுது அவனை வழக்கம் போல் 'அலங்கல் மார்பினனாய்' கண்டனள் எனக் கம்பர் காட்டியதும் ஏற்புடைத்தே என ஏற்றுக் கொள்கிறோம்!

அதே போன்ற ஓர் அவலக் காட்சி, இலங்கையில்! இராவணன் இராமனுடைய அம்புக்கு இலக்காகி மாண்டு கிடக்கின்றான், மண் மீது. மாண்புடை மனையாள் மண்டோதரி களத்தே வந்து கதறுகின்றாள்.

''ஆரம்போர் திருமார்மை அகல் முழைகள்
எனத் திறந்து, இவ்உலகுக்கு அப்பால்
தூரம் போயின, ஒருவன் சிலை துரந்த
சரங்களே ...... ...... ...... .........'' (1539 / 238)

எனப் பாடி இராவணனின் ''அலங்கல் மார்பை'' கம்பர் நமக்குக் காண்பிக்கின்றார்.

அவனுடைய பெருமையும் சிறுமையும் ஒரு சேரக் கண்டு கவிச் சக்கரவர்த்தியின் படப் பிடிப்பில் மனம் மகிழ் கின்றோம்.

இவ்வாறெல்லாம் இடத்திற்கு ஏற்ப ஆடவரின் மார் பகத்தை அழகாய் எடுத்து இயம்பும் கம்பர் மாயா சனகப் படலத்தில்,

''சொல்லுவ மதுர மாற்றம்,
துண்டத்தால் உண்டு உன் கண்ணைக்
கல்லுவ, காகம்; வந்து
கலப்பன, கமலக் கண்ணன்
வில் உமிழ் பகழி; பின்னர்,
விலங்கு எழில் அலங்கல் மார்பம்
புல்லுவ, களிப்புக் கூர்ந்து,
புலவு நாறு அலகை எல்லாம்'' (1205 / 57)

என்று சீதையின் வாய் வழிப் பகர்கின்றாரே!

தன்னைக் கவர்ந்து வந்து தன்னைப் பெண்டாளத் துடித்துக் கொண்டிருக்கும் அரக்கனைப் பார்த்து அன்னை அவ்வாறு அவனுடைய மார்பத்தை அலங்கல், அதாவது மாலையணிந்த மார்பு என்று—எழில் மார்பு—என்று பொலி வுடை மார்பு என்றெல்லாம் குறிப்பிட்டுப் பேசுவாளா?

வணங்கா முடியனை கவிச் சக்கரவர்த்தி வேண்டு மானால் அவ்வாறு வர்ணிக்கலாம்—கற்புக்கரசியான அவனு டைய மனையாள் மண்டோதரி வேண்டுமானால் அவனு டைய மார்பகத்தை வியந்து பாடலாம்; ஏன் மற்றொரு மனைவியான தானிய மாலையும் பாடலாம்;

அவனுடைய ஆசை அரவணைப்பிற்கு ஏங்கித் தாழ்ந் திடும் பிற மாதர் பிதற்றலாம்; அவனுடைய ஆணைக்கு

அடிமைப்பட்டு விட்ட அமர மாதரும் அவ்வாறெல்லாம் அரற்றலாம். இராமனையே நினைந்து நினைந்து நீர்கோத்த கண்ணளாகியிருக்கும் சீதையா மாற்றான் இராவணனை இவ்வாறு குறிப்பிடுவது? தமிழர் பண்பாட்டிற்குத் தக மாற்றங்களெல்லாம் செய்து நம் மனக்கண் முன் கொண்டு வரும் ஒரு மாதின் வாயிலாகவா மாபெருங் கவிஞர் பிற ஆடவனின் அழகை வெளிப்படுத்தும் சொற்களைப் பெய்வது? நம்மால் சுவைக்க முடியவில்லையே!

இராம காதையை அரங்கேற்றம் செய்ய இடையூறுகள் ஏற்படுத்திய பித்தர்களின் கண்ணில் இது படவில்லையா? இவ்வாறெல்லாம் மனம் தடுமாறும் பொழுது மாயமாக கவிச் சக்கரவர்த்தி நம் மனக்கண் முன் தோன்றுகிறார்; நம்மைப் பார்த்து சிரிக்கின்றார்! காரணம் கேட்டால் நம்மை எள்ளி நகையாடி, அச்சொற்றொடரின் ஆழ் பொருள் காணும்படிக் கோடிட்டுக் காட்டி மறைகின்றார்

ஏனனச் சூழ்நிலையில் ஏங்கித் தவிக்கும் பொழுது ஏற் கனவே கண்ட ஒரு காட்சி மீண்டும் தோன்றுகிறது.

மகோதரனிடம் சூழ்ச்சி பேச்சு பேசி முடித்த பின் இராவணன் சீதையை நாடி வரும் பொழுது, கம்பர்,

''நல் நெடுங் களிமால் யானை நாணுற, நடந்து
வந்தான்'' (1198 / 5)

என்று அவனை ஒரு விலங்காகச் சீதைக்கு கட்டியம் கூறி விட்டார்! பருத்துப் பெருத்த முலைகளெனும் கொம்புகளைக் கொண்ட (1198 / 6) மாதரெனும் விலங்குகள் தன்னைச் சுற்றி வருகின்ற சூழலில் அவனும் ஒரு விலங்காகத் தோன்றும் பிரமிப்பை அவளுக்கு ஏற்படுத்தி விட்டார்!

இராவணன் தன் அருகில் நின்று காம வெறிப் பேச்சுக் களைப் பிதற்றிய பொழுது வெறி பிடித்த நாயெனக் காட்சி தந்தான்! ஏன், அவன் தன்னைத் தானே நாயெனக் குறிப்பிட்டுக் கொண்டதனைக் கம்பரும் பாடிவிட்டார்!

''நோயினை நுகரவேயும்
நுணங்கி நின்று உணங்கும் ஆவி
நாய் உயிர் ஆகும் அன்றே... (1199 / 14)

என அவனே கூறிக் கொள்கின்றான்!

சிதையின் முன், இராவணன் நிலத்தில் விழுந்து வணங்கிய பொழுது அவன் ஒரு குள்ள நரியாகக் காட்சி தந்தான். அவன் வந்த பொழுது ஒரு புலி தன்னை நெருங்கி வருவதாக அவள் அஞ்சினாள் என்பதைக் கம்பர்,

''வல்லியம் மருங்கு கண்ட மான் என மறுக்க முற்று''
(1200 / 18)

எனப்பாடிக் காட்டுவார்.

அத்தகைய கொடியவனைக் காணவும் கண்கூச, சிதை ஒரு புல்லினைப் பார்த்தவாறு இராவணனுக்கு அறிவுரைகள் கூறினாள். ஆனால், அவன் மீண்டும் அவளிடா அடாத வகையில் சொற்களை வீசிப் பேசினான். மாயம் சனகனைக் கொணர்வித்து மாதவளிடம் மருட்சியை உண்டாக்கினான். பின்னம் பின்னம் அவளிடம் கெஞ்சினான். அவன் தன்னுடைய இத் தீச் செயலில் கொண்ட விடாப்பிடியால் அவள் அவனை உடும்பாகவும், குரங்காகவும் கண்டாள்.

இத்துணை மிருகங்களாக அவனைக் கண்ட சிதைக்கு அவனை நேரிடையாக 'மிருகமே' என விளிக்கும் ஆவேசம் வந்தது. எனவே மிருகப்பாங்குடையனாய் 'விலங்கு எழில்' என்ற அடைமொழி பெய்தாள்! அச்சொற்றொடர் ஒரு ஏளனக் குறிப்பையும் ஏற்றுள்ளது. அந்த ஏளனத்தினை மிகுதியாக்கி 'நினக்கு மாலை ஒரு கேடா?' என்று கேட்கும் முகத்தான் அவன் அணிந்திருந்த 'அலங்கல்' தன்னைக் குறிப்பிட்டாள். பின் வரும் அவளின் சபதச் சொற்களாகிய 'புலால் நாற்றம் வீசும் பேய்கள் அனைத்தும் மகிழ்ச்சி பொங்க, உன்னைத் தழுவப் போகின்றன' என்ப

தற்கு இலக்காக அமைந்த அவனுடைய மார்பகத்திற்கு அந்த ஏளனச் சொற்களை அடைமொழியாக்கிச் சிதை,

''..................விலங்கு எழில் அலங்கல் மார்பம்
புல்லுவ, களிப்புக் கூர்ந்து, புலவு நாறு அலகை
எல்லாம்''

என்று கூறினாள் என அவனுடைய கொந்தளிப்பு உணர்ச்சியில் நாமும் ஒன்றிப் பார்க்கும் பொழுது நமக்குப் பொருள் புரிகின்றது!

மங்கலச் சொற்களைக் கொண்டே அமங்கல விளிப்பினை—ஏளன எக்காளத்தை — அமைத்திருக்கின்றார், நமது கவிச் சக்கரவர்த்தி எனப் புரிந்து கொள்ளும் போழ்து அவர்தம் திறன் தான் 'என்னே! என்னே!' என வியந்து தமிழின்பம் மாந்துகின்றோம், அன்றோ!

# 25. குண நலமா? போர் வலியா?

'கம்பர் இராமனுடைய குண நலத்தில் மிகுதியாக ஈடுபட்டாரா? அவனுடைய போர் வலியில் மிகுதியாக ஈடுபட்டாரா? எனச் சிலருக்கு ஐயம் ஏற்படுகின்றது.

'போர்வலி'யும் குணநலத்தின் ஓர் அங்கமே என்பாரும் உளர்! 'குணநலம்' அறிவு உணர்வுகளின் அடிப்படையிலும் போர்வலி மனத்தகத்தே தோன்றும் உணர்ச்சிகளின் அடிப் படையிலும் ஏற்படுபவை. எனவே, 'அது வேறு; இது வேறு' எனக் கொண்டு ஆராய்வதே சிரியது.

தம்முடைய காவியத் தொடக்கத்தில்,

''ஆசை பற்றி அறையலுற்றேன்—மற்று, இக்
காசு இல் கொற்றத்து இராமன் கதை அரோ!''

(3 / 4)

என்றும்,

''நடையின் நின்று உயர் நாயகன் தோற்றத்தில்
இடை நிகழ்ந்த இராமாவதாரப் பேர்த்
தொடை நிரம்பிய தோம் அறு மாக்கதை''

(4 / 11)

என்றும் பாடியுள்ளதால், இராமனின் குணத்திலே தான் மிகுதியாகக் கம்பர் ஈடுபட்டார் என்று சொல்லிவிடக் கூடாது.

''இராவணன் தன்னை வீட்டி, இராமனாய்
வந்து தோன்றி,
தராதலம் முழுதும் காத்து, தம்பியும் தானும் ஆகப்

பராபரம் ஆகி நின்ற பண்பினைப் பகருவார்கள்
நராபதி ஆகி, பின்னும் நமனையும் வெல்லுவாரே''
(1696 / 37-4)

என்றோர் பாடல் இறுதியில் இருப்பதால், இராமனுடைய போர் வலியில் கம்பர் மிகுதியாக ஈடுபட்டார் என்று சொல்வதும் ஏலாது.

கம்பர், இராமனின் குணநலத்தைப் பல வகையாலே சுவைத்துள்ளார்.

கவிக் கூற்றாகவே பற்பல இடங்களில் புகழ்ந்துள்ளார்; தம்பியர், தாரம், நாட்டு மக்கள், வானரர் வாயிலாகவும் வெளிப்படுத்தியுள்ளார். இன்னமும் சொல்லப் போனால், எதிரியின் வாயிலாகவும் போற்றியுள்ளார்!

பல இடங்களில் இராமனுடைய குணநலன்களை மட்டும் காணலாம்; சில இடங்களில் அவனுடைய போர் வலியை மட்டும் காணலாம். அவற்றைத் தனித் தனியே ஆய்வதென்றால் தனியொரு நூலே எழுத வேண்டும்!

சில காட்சிகள் இராமனுடைய குணநலத்தையும், அவனுடைய போர் வலியையும் இணைத்துக் காட்டும். அத்தகைய காட்சிகளுள் ஒரு சிலவற்றை ஆய்ந்து தெளிவதே இக்கட்டுரையின் நோக்கம்.

இராமனுடைய போர் வலிமை, பாராட்டும் வகையில் அமைந்ததற்கு மிகவும் உதவியாக அமைந்தது, அவனுடைய பற்பல ஆயுதங்கள் தேவர்களாலும் தவ முனிவர்களாலும் தரப்பட்டவை என்பது பொதுவாகக் குறித்துக் கொள்ளப் பட வேண்டிய ஒன்று. இதனைக் கம்பர் வெளிப்படை யாகவே பாடி விடுகின்றார்.

விசுவாமித்திரர் இராமனுக்குப் படைக்கலங்கள் அளித் தார். அவை இராமனிடம் அவனுடைய தம்பி இலக்கு வனைப் போல தாங்களும் அவனுக்குத் தொண்டு செய்யக்

காத்திருப்பதாகக் கூறின; அவ்வாறே செயலாற்றின. இதனைக் கம்பர்.

''மேனினம்; பிரிதல் ஆற்றேம்; வீர! நீ விதியின் எம்மை
ஏவின செய்து நிற்றும், இளையவன் போல்' என்று
தேவர்தம் படைகள் செப்ப, 'செவ்விது' என்று
அவனும் நேர,
பூவைபோல் நிறத்திற்குப் புறத்தொழில் புரிந்த
அன்றே'' (66 / 3)

என்று பாடுவார்.

தெய்வ வாளிதான் சுபாகுவைக் கொன்று மாரீசனைக் கடலுள் ஆழ்த்தியது என்பதைக் கம்பர்,

''திருமகள் நாயகன் **தெய்வ வாளிதான்**
வெருவரு தாடகை பயந்த வீரர்கள்
இருவரில் ஒருவனைக் கடலில் இட்டது; அங்கு
ஒருவனை அந்தகப் புரத்தில் உய்த்ததே'' (74 / 51)

எனப் பாடுவார்.

விசுவாமித்திரர் சதானந்தரிடம் இராமனுடைய வில்லாற்றலை எடுத்துரைக்கின்றார். அப்பொழுது அவர், இராமனை வியப்பதைக் காட்டிலும் தான் கொடுத்த படைக் கலங்கள் இராமனின் ஏவலை ஏற்று நிறைவேற்றும் பாங்கினை,

''ஆய்ந்து ஏற உணர்-ஐய!-அயற்கேயும் அறிவு அரிய;
காய்ந்து ஏவின் உலகு அனைத்தும் கடலோடும்
மலையோடும்
தீய்ந்து ஏறச் சுடுகிற்கும் படைக்கலங்கள்
செய்தவத்தால்

''ஈந்தேனும் மனம் உட்க, இவற்கு ஏவல்
செய்குனவால்'' (170 / 28)

எனப் பாடுகின்றார்.

இராமனுடைய குணநலன்களைக் குறிப்பிடும் பொழுது இராமன் மானுடனாய் வாழ்ந்த வாழ்வின் சிறப்பை எடுத்துரைப்பார்.

''குணங்களால் உயர்ந்த வள்ளல்'' (79 / 28)

''...................................நிமிர்ந்த மன்னுயிர்க்கு,
எனையவாறு அன்பினன் இராமன் ஈண்டு அவற்கு
அனையவாறு அன்பின் அவையும் ஏன்றனர்'' (242 / 82)

''தூய சிந்தை அத்தோம் இல் குணத்தினான்''
(271 / 6)

என்ற பாடல் வரிகள் அதற்கு சிறந்த எடுத்துக்காட்டுகள்.

இந்த நோக்குகளைக் கொண்டு ஒரு முடிவு எடுப்பது ஏற்புடையது ஆகாது. இராமனின் போர்வலிக் காட்சிகளுள் அவனுடைய குணநலன்களும் காட்சிகளின் வாயிலாக ஆராய்ந்து பார்ப்போம். அப்பொழுது தான் அவ்விரண்டினையும் ஒப்பீட்டு முறையில் மதிப்பிட்டுக் கம்பரின் அதிக ஈடுபாடு எதனில் எனத் தக்க முறையில் கணிக்க இயலும்.

அவ்வாறு அந்த இரண்டு நலன்களும் கலந்த காட்சிகளில் ஒரு சில:—

1. தாடகை வதம்
2. இராமன், மிதிலையில் வில் ஒடித்தது
3. பரசுராமனைத் தோற்கடித்தது
4. விராதன் வதை
5, கர தூடணருடன் போர்
6. மாரீசன் வதை
7. கவந்தன் வதை
8. வாலி வதை
9. இலங்கையில் முதல் நாள் போர்
10. யுத்த காண்டத்தின் பிற பகுதிகள்.

இக் காட்சிகளைச் சற்று விரிவாகப் பார்ப்போம்.

## (1) தாடகை வதம்:

"......... ......... ......... ......... ................. 'ஆவி
உண்' என, வடிக்கணை தொடுக்கிலன்; உயிர்க்கே
துண்ணெனும் வினைத்தொழில் தொடங்கியுள்ளேனும்,
'பெண்' என மனத்திடை பெருந்தகை நினைந்தான்''
(63 / 36)

எனக் கம்பர் பாடுகின்றார்.

இங்கு, இராமனை ஒரு வில் வீரனாகக் காட்டுகின்றார் என்றாலும், இராமன் தன்னுடைய பெருந்தன்மையால் அவளைப் 'பெண்' என்ற காரணத்தால் அவளைக் கொன்று வீழ்த்தத் தயங்கினான் என்பதையும் தெளிவாகக் கூறுகின்றார். இராமனுடைய போர்வலிமையைக் கம்பன் அதிகமாக வியக்கவில்லை! அவனுடைய மனப்பக்குவத்தை— குண நலத்தையே மிகுதியாக வியக்கின்றார்!

இராமன் தாடகையைத் தன் அம்பினால் வீழ்த்தினான் என்று பாடி முடித்திருக்கலாம். ஆனால், அவனுடைய போர் அறப் பண்பின் அடிப்படையை— மானுட தர்மத்தின் எண்ணத்தை— வெளிப்படுத்தி, அவனை நம் கண் முன் நிறுத்துகின்றார்!

இராமன், தான் தாடகையைப் பெண் என்று நினைத்துத் தயங்கியதைத் தவறு என்று ஒப்புக்கொள்ள வில்லை, மாறாகத், தன் மனோநிலையை மாற்றிக் கொள்ளாமல், ஆசானின் கட்டளையை நிறைவேற்றவே அவளைத் தாக்குவதாகக் கூறி, வீழ்த்துகின்றான் என்பதை உணர வேண்டும்.

இதனைக் கம்பர்,

''ஐயன் அங்கு அது கேட்டு, 'அறன் அல்லவும்
எய்தினால், 'அது செய்க!' என்று ஏவினால்

மெய்ய! நின் உரை வேதம் எனக்கொடு
செய்கை அன்றோ அறம் செயும் ஆறு'' என்றான்.

(64 / 45)

எனப் பாடுகின்றார். இது இராமனுடைய வீரத்தை விட அவன் ஆசானுக்குக் கட்டுப்பட்டு நடந்து கொண்ட அடக்கப் பண்பை— மாணவக் குணநலத்தை— மிகுதியாகக் காட்டுகின்றது.

இனியும் ஒன்று! கம்பர்,

''தூ மவேல் அரக்கர் தம் நிணமும் சோரியும்
ஓம வெங்கனலிடை உகும்' என்று உன்னி, அத்
தாமரைக் கண்ணனும், சரங்களே கொடு
கோ முனி இருக்கை ஓர் கூடம் ஆக்கினான்''

(73 / 48)

என்று பாடுகின்றார். இராமன், தன் தோள் வலிமையால் அரக்கரைக் கொல்ல நினைத்தாலும், வேள்விச் சாலையின் தூய்மையைப் பாதுகாத்தல் வேண்டும் என்ற தூய்மைப் பண்பை— இறையுணர்வின் குண நலத்தை— எடுத்துக் காட்டி நிற்கின்றது.

## (2) இராமன் மிதிலையில் வில் ஒடித்தது:

''ஆடகமால்வரை அன்னது தன்னை,
'தேட அரு மா மணி. சீதை எனும் பொன்
சூடக வால் வளை, சூட்டிட நீட்டும்
ஏடு அவிழ்மாலை இது' என்ன எடுத்தான்.''

(112 / 33)

எனக் கவிச் சக்கரவர்த்தி பாடுகின்றார்!

அடுத்து, அவர், இராமன் கைகளால் வில்லை ''எடுத்தது கண்டனர்; இற்றது கேட்டார்'' (122 / 34) என்றும் பாடுகின்றார்!

அதாவது இராமன் மிதிலையில் மாபெரும் வில்லை ஒடித்தது அவனுடைய வீரத்தால் மட்டும் அன்று; அவனுடைய காதல் வேகமும் கூடி அவனை உந்தியதால் அவன் அவ்வில்லை எளிமையாகத் தூக்கினான் என்பது ஒன்று!

இராமன், தான் தூக்கிய வில்லை வளைப்பதற்குத் தன் வலிமையை மேற்கொள்வதற்கு முன் அவ்வில் ஒடிந்து விட்டது என்பது மற்றொன்று. அவ்வாறு விரைவில் ஒடிந்ததற்குக் காரணம் அது முன்னரே சற்று ஒடிந்து இருந்ததே என்பதனைக் குறிப்பிட்டுத் தான் பரசுராமன், 'ஏற்கனவே சிதைந்த வில்லை மிதிலையில் ஒடித்தாய்; இப்பொழுது என்னிடம் உள்ள தனுசுவை ஒடிக்க முடியாது' என்று இராமனிடம் கூறினான்; இராவணனும் இழித்துப் பேசினான்.

இவ்விருவர் குறிப்பிடும் காரணத்தால், இராமனுடைய தோள் வலிமை அக் காட்சியில் தோன்றவே இல்லை என்று சொல்ல முடியாது. 'அந்த வில்லை அரங்கிற்குக் கொண்டு வருவதற்கே பல வீரர்கள் தேவைப்பட்டார்கள்! அதனைத் தூக்கவே பற்பல மன்னர்களால் முடியவில்லை; மூச்சுத் திணறினர்!' என்றெல்லாம் நமக்குத் தெரியும். அதனால், இராமன் அங்கு மேற்கொள்ள வேண்டிய தோள் வலிமையை நாம் ஒருவாறு அனுமானித்து அறிகின்றோம். என்றாலும், கம்பர், வெளிப்படையாகக் கூறிக் காட்டியிருப்பது இராமனுடைய காதல் பலத்தையே.

### (3) பரசுராமனைத் தோற்கடித்த காட்சி

''பூதலத்து அரசை எல்லாம் பொன்றுவித்தனை; என்றாலும்
வேதவித்து ஆய மேலோன் மைந்தன் நீ; விரதம் பூண்டாய்;
ஆதலின் கொல்ல ஆகாது; அம்பு இது பிழைப்பது அன்றால்,
யாது இதற்கு இலக்கம் ஆவது; இயம்புதி விரைவின்''
(206 / 36)

என்று இராமன், பரசுராமனிடம் கேட்கின்றான்.

பரசுராமன் இருபத்தியொரு தலைமுறையா க்ஷத்திரிய மன்னர்களைக் கொன்றவன். இராமனிடமே வலிய வந்து சவால் விட்டவன்; இராமனோ தன் தோள் வலியைத்—தான் எய்யும் அம்பின் தன்மையை—தானே இயம்புகின்றான்; அந்தச் சூழலில் அம்பினை இராமன் அவன்மேல் விட்டிருக்கலாமே! அதிலும், எட்டு திக்குகளையும் வென்று அறு பதினாயிரம் ஆண்டுகள் ஒரு பகையுமின்றி வாழ்ந்த சக்கரவர்த்தி தயரதனான தன் தந்தையாரின் அச்சத்திற்கும் நடுக்கத்திற்கும் காரணமாய் இருந்தவனை வீழ்த்திப் பாடம் புகட்ட வேண்டியது தானே!

இராமனுடைய போர்வலியை அவனுடைய குண நலம் தடுத்து மிளிர்கின்றது, 'மன்னிப்போம் மறப்போம்' என்கிற சத்வ குணம் இராமனிடம் முந்திக் கொண்டு நிற்பதைக் கவிச் சக்கரவர்த்தி வியந்து காட்டுகின்றார்.

## (4) விராதன் வதை & கவந்தன் வதை:

இந்த இரண்டு காட்சிகளிலும் இராமனுடைய தோள் வலிமையைக் காட்டிலும் அவர்கள் பெற்றிருந்த சாப விமோசன வரங்களே அவர்கள் வீழ்ந்துபட்டு தம் தம் ஆதி நிலையை அடைவதற்கு ஏதுவாகின்றன.

விராதன் விஷயத்தில் இராமன் நடந்து கொண்ட முறையைக் குறிப்பிட்டு இலக்குவன், 'சீதையன்னை அல்லல் பட்டுக் கொண்டிருக்க இவன்பால விளையாட்டுக் காட்டியிருப்பது நன்றோ?' (414 / 40) என இராமனைக் கேட்கின்றான்.

அதற்கு இராமன் வெகு எளிமையாக 'நாம் செல்ல வேண்டியது நெடுந்தொலை ஆயிற்றே,' இவன் தோள் மீது பறந்தே கடந்து விடலாம் என எண்ணினேன்' (414 / 41) என்று கூறி நகையாடினான்.

இறுதியில், இராமன் தன் கால்களால் விராதனை உந்தித் தள்ளியதுமே அவன் வீழ்ந்தான். அதன் பின் இராமன்

கேட்க அவன் தன்னுடைய வரலாற்றைக் கூறுகின்றான். அப்பொழுது,

''அன்னசாபம் மேனி நான்,
இன்னல் தீர்வது ஏது' எனா,
நின்ன தாளின் நீங்கும் என்று,
உன்னும் எற்கு, உணர்த்தினான். (418 / 65)

என்று தன்னுடைய சாப விமோசன வரத்தை வெளிப் படுத்துகின்றான்.

ஆக, விராதன் வீழ்ச்சியில் இராமனின் தோள் வலி அதிகம் தேவைப்பட வில்லையெனவும் அவன் பெற்றிருந்த சாப விமோசன வரம் மெய்யாயிற்று எனவும் தெரிகின்றது.

கவந்தன் கைக்குள் இராம இலக்குவர் அகப்பட்டுக் கொண்டதும், இராமனே அஞ்சி, தான் முன்னம் முடிவ தாக இலக்குவனிடம் கூறித் தடுமாறுகின்றான்! கவந் தனுடைய கையையும் வாயையும் துணிப்பதாக இலக்குவன் முந்துகின்றான். பின், அவர்கள் இருவரும் கவந்தனை எதிர்த்து அவனுடைய தோள்களை வெட்டி வீழ்த்தினர்.

அவ்வாறு வெட்டிய பொழுது இராமனுடைய கைகள் கவந்தன் மேல் பட்டதும் அவன், தன் சாபம் நீங்கப் பெற்று உய்ந்தான், இதனைக் கம்பர்,

''ஆளும் நாயகன் அம் கையின் தீண்டிய அதனால்
மூளும் சாபத்தின் முந்திய தீவினை முடித்தான்;
தோளும் வாங்கிய தோழுடைய யாக்கையைத் துறவா
நீளம் நீங்கிய பறவையின், விண் உற நிமிர்ந்தான்;''
(374 / 38)

எனப் பாடுவார்.

ஆக, கவந்தன் வீழ்ச்சியிலும் இராமனின் தோள் வலி விஞ்சிடத் தேவையில்லாமல் போயிற்று!

ஆனால், அவர்கள் இருவரும் இராமனைத் துதித்துப் பாடிய பாடல்கள் அவனுடைய பண்பு நலன்களை- அவனுடைய தெய்வீக நிலையை- எடுத்துக் காட்டியுள்ள பாங்கு பயின்று பயின்று நெக்குருக வேண்டிய பாடல் களாகும்.

விராதன் இராமனை அறிந்து - அவனுடைய சிறந்த குணநலன்களை உணர்ந்து - பகர்ந்தான் எனக்கம்பர்,

''அறிவு வந்து உதவ, நம்பனை அறிந்து பகர்வான்''
(415 / 46)

எனப் பாடுவார்!

அதே போல், கவந்தன் இராமனின்,
''எண் இல் அன்னவன் குணங்களை, வாய்திறந்து
இசைத்தான்'' (574 / 39)

என்பார்!

அதாவது, விராதன்; கவந்தன் இருவரின் வாய்வழிக் கம்பர் இராமனின் குணநலத்தை மிகுதியும் மொழி கின்றார் என உணர்கின்றோம்.

## (5) கர தூடணருடன் போர்:

இராமனே, முழுவதும் அரக்கர்களுடன் போராடி யிருந்த இந்தக் காட்சியில் கவிச்சக்கரவர்த்தி,

''நெறிகொள் மாதவர்க்கு முன்னே சேர்ந்தனென்;
நிருதர் ஆவி
பறிக்குவென் யானே என்னும் பழமொழி
பழுதுறாமே,
வெறிகொள் பூங்குழலினாளை வீரனே!
வேண்டினேன் யான்,
குறிக்கொடு காத்தி; இன்னே கொல்வென்,
இக்குழுவை'' என்னா (470-61)

எனப் பாடுகின்றார்.

க—13

